# அமிர்த சந்திரன்

ஸ்ரீமதி கமலா கோபாலன்





பதிப்பாசிரியர்
பி. ஸ்ரீ

ரூ 1/

தினமணி
காரியாலயம்

தினமணி வெளியீடு : 23

பதிப்பாசிரியர் : பி. ஸ்ரீ.

# அமிர்த சந்திரன்

ஸ்ரீமதி கமலாகோபாலன்



"இருள் அகற்றும்
கைவிளக்கே கற்ற அறிவுடைமை"

தினமணி காரியாலயம்
100, மவுண்டு ரோடு
சென்னை
1945



[விலை ரூ. 1.

## தினமணி வெளியீடு

### இலக்கிய ஆலோசனையாளர்கள்

ஸ்ரீமதி. எஸ். அம்புஜம்மாள்,
ஆழ்வார்பேட்டை, சென்னை

திரு. கி. சந்திரசேகரன்,
மயிலாப்பூர், சென்னை

" ஏ. என். சிவராமன்,
"தினமணி" ஆசிரியர்

" கே. சுவாமிநாதன்,
ஆங்கிலப் பேராசிரியர்,
ப்ரெஸிடென்ஸி காலேஜ், சென்னை

" டாக்டர் டி. எஸ். திருமூர்த்தி,
நுங்கம்பாக்கம், சென்னை

" கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார்,
சரித்திரப் பேராசிரியர்,
சென்னை யூனிவெர்ஸிடி

" ஸி. என். முத்துரங்க முதலியார்,
பேட்டை, செங்கற்பட்டு ஜில்லா

" ஏ. வி. மெய்யப்ப செட்டியார்,
ஸரஸ்வதி ஸ்டோர்ஸ், பிரகதி பிக்சர்ஸ்,
சென்னை

" எஸ். வையாபுரிப் பிள்ளை,
தமிழ் ஆராய்ச்சித் தலைவர்,
சென்னை யூனிவெர்ஸிடி

# பொருள் அடக்கம்

தொ. மு. சி. நன்கொடை

௨௩-10-௫௮.

# முன்னுரை

ரயில் - யாத்திரை முதலான சந்தர்ப்பங்களில் பொழுதுபோக்குவதற்கென்றே நாவல்களையும் துப்பறி நாவல்களையும் எழுதிக் குவிக்கும் எண்ணிறந்த ஆசிரியர்களும், அவற்றைப் பிரசுரிக்கும் பிரசுரகர்த்தர்களும் மேலை நாடுகளில் உண்டு. இத்தகைய முயற்சிகள் நம் தமிழ் நாட்டிலும் பரவிவருகின்றன. இவற்றுள் ஒன்று ஸ்ரீமதி கமலா கோபாலன் எழுதிய இந்த நாவல்.

சாதாரணமாகத் துப்பறி நாவல்களில் காணப் படுவது போன்ற கொலை முதலான ‘திடுக்கிடும்’ சம்பவங்களும், அவற்றைக் கண்டுபிடிக்கும் துப்பறி முயற்சிகளும் இந்தக் கதையிலும் பிரமாதப்படுகின்றன. அநேகமாக இது ஆங்கிலப் போக்கைத் தழுவியதென்றே சொல்லி விடலாம். எனினும் நமது நகரங்களிலே காணப்படும் நவநாகரிக வாழ்க்கையில் நடக்கக்கூடிய நிகழ்ச்சிகளை வைத்துக்கொண்டே இக் கதையை ஜோடித்துச் செல்லுகிறார் ஆசிரியை.

ஸ்ரீவத்ஸா என்ற துப்பறி நிபுணர் கேவலம் ஒரு நிபுணர் மட்டுமில்லை; நல்ல உணர்ச்சிகளோடு கூடிய பண்பட்ட ஹிருதய சம்பத்தும் வாய்ந்தவர். இவருடைய துப்பறிவைத் தூண்டிவிடுகிறது அமிர்தா, அருணா என்ற இரு சகோதரிகளின்மீது இவருக்கு ஏற்பட்ட அன்புணர்ச்சி. இச் சகோதரிகளில் அமிர்தாவைக் கதா நாயகி என்று கருதலாம். இவள் நிரஞ்சன் என்ற புனை பெயரோடுகூடிய சரத்சந்திரனைக் காதலித்து மணஞ் செய்துகொள்ளுகிறாள். இக்காதலர்களின் பெயர்களை ஒட்டியே இக்கதைக்கும் ‘அமிர்த சந்திரன்’ என்று பெயர்.

ராமாயணத்திற்கு ராவண இந்திரஜித்தர்களைப் போல் இந்தக் கதைக்கும் பகவன்தாஸ், பிரகாசம் என்ற

இரண்டு பரம துஷ்டர்களையும் ஆசிரியை படைத்துவிட்டிருக்கிறார். இவர்களில் பகவன்தாஸையும் கடைசியாக வஞ்சித்துவிட்ட துஷ்ட சிகாமணியாகப் பிரகாசிக்கிறான் பிரகாசம்! இவர்கள் இருவரும் உயர்குலத்தில் நல்ல ஸ்திதியிலே வாழ்ந்தவர்கள். ஒரு கொலையை நேரடியாகச் செய்துவிட்டு, வேறொரு கொலைக்கு இராகுலன் என்ற துஷ்டர்தலைவன் மூலமாக முயற்சி செய்கிறார்கள். முடிவில் இராகுலன் ஸ்ரீவத்ஸாவின் கூட்டுறவால் நல்லவனாக மாறிவிடுவதாய்க் காட்டுவது இக்கதையின் ஒரு ஸாரமான அம்சம்.

இந்தக் கதையில் சில சம்பாஷணைத் துணுக்குகளும் ரஸமாக அமைந்திருக்கின்றன. துப்பறி நிபுணரும் அவர் காதலியான அருணாவும் சந்தித்துக் காதலை வெளியிடும் காட்சி குறிப்பிடத் தக்கது.

யாத்திரை போகும் தமிழர்கள் ரயில் வண்டியில் போனாலும் சரி, கட்டை வண்டியில் போனாலும் சரி, இந்தப் புஸ்தகத்தைப் படித்துக்கொண்டே போனால் பிரயாண அசௌகரியங்களை ஒரு தடவையாவது மறக்கலாம். தென் இந்திய ரயில்வேயில் மூன்றாவது வகுப்பிலே யாத்திரை செய்யும் பிரயாணிகள்கூடத் தங்கள் கஷ்டங்களை ஒருவாறு மறப்பதற்கு 'அமிர்த சந்திர'னைத் துணையாகக் கொள்ளலாம் என்று தோன்றுகிறது. மற்றவர்களும் இதைக்கொண்டு பொழுது போக்க விரும்பினால் தடையுத்தரவு போடுகிறவர் யார்?

பி. ஸ்ரீ.
பதிப்பாசிரியர்
"தினமணி வெளியீடு"

சென்னை
5—4—'45

## தமிழ் வாசகர்களுக்கு

தமிழில் புதிய புதிய புஸ்தகங்கள் வந்துகொண்டிருப்பது ஒரு நல்ல அறிகுறி. புதிய தமிழ் வசனம் நம் கண்முன் உருவாகி வளர்ந்து வருகிறது, இலக்கணப் பிழையில்லாமல் தமிழர்களுக்கெல்லாம் விளங்கும்படி பேச்சுத் தமிழை ஒட்டி விஷயங்களை வெளியிடுவது பல புதிய எழுத்தாளர்களுக்கும் இன்று ஒரு பொது நோக்கமாக இருக்கிறது.

இத்தகைய புதுமைத் தமிழை வளர்த்துத் தமிழ்ப் பொது மக்களுக்கு அறிவை வளர்க்கவும் பொழுது போக்கவும் உதவவேண்டு மென்று 'தினமணி வெளியீடு' ஆரம்பமாயிற்று. இந்த வெளியீட்டைக் குறித்துத் திருவாளர் வி. ஆர். எம். செட்டியார் பி. ஏ. (இலக்கிய அமைச்சர், ஸ்டார் பிரசுரம்) பின்வருமாறு எழுதுகிறார் :—

"உங்கள் தினமணி வெளியீடுகள் தமிழ்ப் புஸ்தக உலகத்திலேயே மிகவும் மலிவானவை; ஆனால் கருத்துலகிலோ மிகவும் ஆழ்ந்த பொருள்வளம் படைத்தவை."

வேறொரு ரஸிகர், "சற்றும் அச்சுப் பிழை இல்லாத பதிப்புகள் உங்கள் காரியாலயத்தில் இருந்து தான் கிளம்புகின்றன. இது சாமான்ய வெற்றியல்ல" என்று தம் அபிப்பிராயத்தைத் தெரிவித்திருக்கிறார்.

இந்த வெளியீட்டில் இதுவரையில் ஜீவிய சரித்திரப் புஸ்தகங்களும், சரித்திரப் புஸ்தகங்களும், அரசியல்-புஸ்தகங்களும், ஹாஸ்ய புஸ்தகங்களும், நாடகங்களும். நாவல்களும், சிறு கதைத் தொகுதிகளும் வெளிவந்திருக்கின்றன.

மஹாத்மா காந்திக்கு ஸ்ரீமதி எஸ். அம்புஜம்மாள் சூட்டிய 'நினைவு மாலை' புதுமைத் தமிழிலக்கியத்தில்

ஒரு முக்கிய ஸ்தானம் பெற்றுவிட்டது. அதை அடுத்து மஹா கவி ரவீந்திரநாத டாகுருக்கும் ஒரு தமிழ் மாலை சூட்டி யிருக்கிறார் ஸ்ரீ. கி. சந்திரசேகரன் எம்.ஏ., பி.எல். கிறிஸ்தவ சகோதரியான ஸ்ரீமதி ஆர். எஸ். ருக்மிணி பி.ஏ. அன்னை கஸ்தூரிபாவுக்கும் ஒரு புகழ்மாலை சூட்டி யிருக்கிறார். முகம்மதிய சகோதரரான ஸ்ரீ எம். எம். இஸ் மாயில் எம்.ஏ., முஸ்லிம் தேச பக்தமணியாகிய மௌலானு ஆஜாதுக்குத் தமிழ் மாலை சூட்டி யிருக்கிறார். 'தளவாய்த் தாத்தா' என்ற பெயரால் தென் இந்திய சரித்திரப் பிரசித்திபெற்ற தளவாய் அரியநாயக முதலியாருக்கு ஸ்ரீ எம். எஸ். சுப்பிரமணிய ஐயர் சூட்டியிருக்கும் புதிய தமிழ் மாலையும் தமிழ் வாசகர்களின் கவனத்திற்கு உரிய தாகும். இப்படியே நமது தேசபக்த கவியான பாரதியார் முதலானவர்களின் வாழ்க்கைச் சித்திரங்களையும் வெளியிட எண்ணியிருக்கிறோம்.

இன்னும் பலவேறு துறைகளில் தமிழ்ப் பணி செய்ய வும் தினமணி வெளியீடு முயன்றுகொண்டிருக்கிறது.

# அமிர்த சந்திரன்

## 1. தற்கொலை

அக்டோபர் மாதம், 12-ந் தேதி, மணி 7-45. 'டண் டணர்! டண்டணர்!' என்று முழங்கும் மணி ஓசை வெகுவிரைவாகக் காற்றிலே நெருங்கி நெருங்கி வந்தது. இமைப்பொழுதில் இரண்டு நெருப்பு அணைக்கும் மோட்டார் வண்டிகள் 'மோகன்' மாளிகையின் சிங்காரத் தோட்டத்து வெளிவாசல் பக்கம் சென்ற ரஸ்தா வழியாகப் பேய்கள் போல அலறிக்கொண்டே மின்னென ஓடி மறைந்தன. மணி முழக்கம் நின்ற அதே நேரத்தில் 'ஆ!' என்றொரு சத்தம் எழுந்தது, மோகன் மாளிகையின் முன் ஹாலிலிருந்து. அந்த மாளிகையின் சிங்காரத் தோட்டத்தில் தகதகாயமாகப் பிரகாசிக்கும் மின்சார விளக்குத் தோரணங்களின் ஒளிப் பிரவாகத்திலே விருந்தை முடித்துக் குதூகலமாகப் பேசிப் பலவிதமான பொழுதுபோக்குகளில் ஈடுபட்டிருந்த விருந்தாளிகளின் செவியிலே அந்தச் சத்தம் விழுந்தது. விருந்தாளிகள் திடுக்கிட்டு ஓடிவந்தார்கள். முன் ஹாலில் நுழைந்தவர்கள் மாடிக்குச் செல்லும் படிக்கட்டுகளில், மேலிருந்து மூன்ருவது படிக்கட்டில், ரத்தப் பெருக்கில் ஒருவர் குப்புறக் கிடப்பதைப் பார்த்துப் பிரமித்து "ஜகன் மோகனதாஸர்!" என்றனர்.

சிலர் ஓடிச்சென்று விழுந்து கிடந்தவரைத் தூக்கி எடுத்தனர். பகவன்தாஸ் டெலிபோனண்டை ஓடினர். டாக்டரை உடனே வரும்படி ஏற்பாடு செய்தார். அவர் டெலிபோன் பேசிவிட்டு வந்ததும் சாமாராவ் போலிசுக்குச் செய்தி அனுப்பினர்.

பத்தே நிமிஷங்கள் சென்றன. டாக்டர் வந்துவிட்டார். பின்னும் ஐந்து நிமிஷங்கள் செல்லவே போலிஸ் இன்[illegible] பெக்டர் இரண்டு கான்ஸ்டேபிள்களோடு ஹாலில் பிர[illegible]வசித்தனர். பிணத்தைச் சோதித்துவிட்டு, "கழுத்து[illegible]தப் பின் பக்கத்தில்..............................குண்டு பாய்ந்திருக்கிறது. சுட்ட ஒரு நிமிஷத்திற்குள் உயிர் போயிருக்க வேண்டும்" என்ருர். வலக்கரத்தில் ஒரு துப்பாக்கி காணப்பட, அதை எடுத்துப் பார்த்தார். அதில் நிரப்பியிருந்த குண்டுகளில் ஒன்று சுடப்பட்

டிருந்தது. பிறகு அவர் அந்தத் துப்பாக்கியைக் காட்டி, "இந்தத் துப்பாக்கி யாருடையது?" என்று விசாரித்தார். பிரபுவின் விசுவாசச் சமையல்காரனுன சாம்புவும், அவருடைய ஒன்றுவிட்ட அத்தை அம்மாள் சுமதியும், " அது அவருடைய துப்பாக்கிதான் " என்றூர்கள்.

இன்ஸ்பெக்டர் :—பிரபு எப்போதும் தம் கூடவே துப்பாக்கியையும் கொண்டுபோவது வழக்கமோ ?

சாம்பு :—எப்பொழுதும் கூடவே கொண்டு போகும் வழக்கம் இல்லே. ஆனல், அடிக்கடி அதைத் துடைத்து வைக்க என்னிடம் சொல்லுவார். ஒருநாள் கூட இதை உபயோகித்து நான் பார்த்ததில்லே. இன்றைக்குக் காலேயில் நான் என்னவோ எடுக்க மாடிக்குச் சென்ற போது பிரபுவே அதை துடைத்துக் குண்டு நிறைப்பதைப் பார்த்தேன்.

பகவன்தாஸ்:—பிரபு என்னிடம் இரண்டொரு தருணங்களில் தம்முடைய துப்பாக்கியைக் காண்பித்திருக்கிறூர்.

பிறகு, இன்ஸ்பெக்டர் பிரபுவின் துப்பாக்கியை மற்றவர்கள் யாராயினும் எடுத்துப் பிரபுவைச் சுட்டிருக்கலாமோ என்னும் சந்தேகத்தால், விருந்தினர் யாவரும் விருந்து முடிந்த பின் எங்கிருந்தனரென்றும், பணியாட்கள் அனைவரும் எங்கிருந்தனரென்றும், ஸ்திரிகளெல்லாம் எவ்விடத்தில் இருந்தனரென்றும், பிரபு சுடப்பட்டு விழுந்த சமயம் முதலில் யார் கண்டது என்றும் அலசி அலசி விசாரணை செய்தார். அவர் அப்படி விசாரணை செய்ததும், பணியாட்கள் யாவரும் பின்கட்டிலிருந்ததாகவும், ஸ்திரிகள் வடபுறம் காம்பௌண்டுப் பாதையில் இருந்ததாகவும், மற்ற விருந்தினர் யாவரும் முன்புறக் காம்பௌண்டுப் பாதையில் உட்கார்ந்திருந்ததாகவும், ஒருவரும் எழுந்து சென்றதாகத் தாங்கள் பார்க்கவில்லே என்றும், நெருப்பு அணைக்கும் மோட்டார் சென்றபின்புதான் தாங்கள் "ஆ" வென்ற சத்தத்தைக் கேட்டுத் திரும்பிப் பார்த்ததாகவும், அப்படிப் பார்த்த சமயத்தில் பிரபுவைத் தவிர ஹாலில் வேறெவரையும் பார்க்கவில்லே என்றும் திர்மானமாய்ச் சொல்லி விட்டனர்.

இன்ஸ்பெக்டர் டாக்டரை நோக்கி, "ஒருவேளை பிரபுவின் கையிலிருந்த துப்பாக்கியே அகஸ்மாத்தாக வெடித்து அபாயத்தை உண்டாக்கி இருக்கலாமோ?" என்று கேட்டார்.

டாக்டர், "ஆம், அப்படியும் நேர்ந்திருக்கலாம்" என்று தலையைப் பலமாக மேலும் கீழுமாய் ஆட்டினர்.

உடனே இன்ஸ்பெக்டர், "ஆம், நானும் முதலிலேயே அப்படித்தான் சந்தேகப்பட்டேன். பிரபுவின் கைக்குக் கீழிருந்து துப்பாக்கி அகப்பட்டிருக்கிறது. பிரபு விழுந்த பொழுது கண்டவர்கள் வேறெவரையும் இங்கே காண வில்லை என்று கூறிவிட்டனர். ஒருவருக்குப் பின் பதின்மர் ஒரே சாட்சியாகக் கூறுவதால், அது உண்மையான விஷயமாகவே யிருக்கலாம். ஆகையால் வேறெவரும் பிரபுவைச் சுட வரவில்லை. பிரபுவின் கையே, எதிர்பாராமல் கைத்துப்பாக்கியின் குதிரையில் பட்டிருக்கவேண்டும். குண்டு வெடிக்கப் போவதை அறிந்து பயந்து கழுத்தைப் பிரபு திருப்பியிருக்க வேண்டும். அப்படியும் குண்டு கழுத்தில் பாய்ந்து விட்டது. ஆகவே இது தற்கொலையும் அல்ல. ஏனெனில் பிரபுவுக்குத் தற்கொலை செய்துகொள்ள வேண்டிய வியாதியோ, பணக் கஷ்டமோ, குடும்பக் கஷ்டமோ எதுவு மில்லை என்று நன்கு தெரிகிறது. ஆகவே, இப்பொழுது நேர்ந்திருப்பது அகஸ்மாத்தான மரணம்தான். தற்செய லாகக் குண்டு வெடிக்கப் பிரபுவின் ஆயுள் முடிவ டைந்தது மிக்க துயரையே உண்டாக்குகிறது" என்று கூறி முடித்தார்.

பிறகு சுமதி அம்மாளும் பகவன்தாஸும் இறந்து போன பிரபுவுக்கு வீண் அபவாதங்களெல்லாம் ஏற் படாமல் உள்ளதை உள்ளபடி அறிந்து வெளிப்படுத்திய தற்காக இன்ஸ்பெக்டருக்கு முகமன் கூறினர். பகவன் தாஸ் தாம் மறுதினம் இன்ஸ்பெக்டரை வந்து காண்ப தாய்த் தெரிவித்தார்.

பிறகு டாக்டரும் இன்ஸ்பெக்டரும் ஜவான்களும் அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டனர். விருந்தினரும் அவ்விடத்தைவிட்டுப் புறப்பட ஆயத்தமானர்கள்.

## 2. கொலைதான்

அதே சமயம் மோகன் மாளிகையின் வாசலில் ஒரு கார் வந்து நிற்க, அதிலிருந்து போலீஸ் டெபுடி கமிஷனரும், அவரைத் தொடர்ந்து, ஒரு வருஷ காலமாய் ஸி. ஐ. டி. டிபார்ட்மெண்டில் வேலை பார்த்துவரும் ஸ்ரீவத்ஸாவும் இறங்கினர்கள். அதே சமயம் ஏதோ

சொல்லிப் புலம்பி அழும் சத்தம் அவர்கள் காதில் விழவும், ஹால்புறம் நோக்கினர்கள்.

அச்சமயம் ஹாலில் எழு எட்டு விருந்தினர்களும், அவர்களுடனிருந்த பகவன் தாஸும் திரும்பி, டெபுடியையும் அவருடன் வந்தவரையும் கண்டனர்.

உடனே டெபுடியும் ஸ்ரீவத்ஸாவும் ஹாலை அடைந்து, "என்ன நிகழ்ந்தது? பிரபு ஜகன்மோகன் தாஸ் எங்கே?" என்று விசாரித்தனர்.

ஆனல் பிந்திய கேள்விக்குப் பதிலாய், அவ்விருவர்களது கண்களும், ஹாலின் வடபுற ஓரமாய் பெஞ்சின்மேல் படுக்கவைத்திருந்த ஜகன் மோகன் தாஸின் உடலைக் கண்டன. உடனே டெபுடி, "பிரபுவின் உடம்பிற்கு என்ன?" என்று பதற்றத்துடன் கேட்டார்.

பகவன்தாஸ், "பிரபு நாற்பது நிமிஷங்களுக்கு முன் தான் இறந்தார். நண்பர்களுக்கெல்லாம் இசையுடன் உயர்ந்த விருந்தளித்த அவர், தம் கையாலேயே தற்செயலாய் வெடிக்கப்பட்ட குண்டு பாய்ந்து இறந்துவிட்டார்!" என்று வருத்தத்துடன் தெரிவித்தார்.

"டாக்டரும் போலீஸ் இன்ஸ்பெக்டரும் ஜவான்களும் நடத்திய சோதனையும், அவர்களுடைய அபிப்பிராயமும் ஒருபுறம் இருக்கட்டும். என் உத்தியோகக் கட்டமை ஒன்றிருக்கிறதே. மேலும் ஜகன்மோகன்தாஸ் எனது நண்பர். நான் அவரது மரணத்தைப் பற்றித் திருப்திகரமாக ஆராய விரும்புகிறேன். நீங்களெல்லோரும் இறந்துபோன பிரபுவின் அன்பர்கள்தான். ஆகவே, ஒருவரும் என்னைத் தடை பண்ணமாட்டார்கள் என்றே எண்ணுகிறேன்" என்று கூறிப் பதிலை எதிர் பார்ப்பவர்போல் எல்லோரையும் நோக்கினர் டெபுடி. பின்பு பகவன்தாஸிடம், "டெலிபோன் எவ்விடம் இருக்கிறது?" என்று கேட்டார். பகவன் தாஸ் காட்டினர்.

ஸ்ரீவத்ஸா டெலிபோன் இருக்குமிடம் சென்று டாக்டர் பாண்டேக்கு டெலிபோன் செய்துவிட்டு வந்தார்; வந்து, எல்லோர் முகங்களையும், அந்த ஹாலையும் மாடிப் படிகளையும் உற்று உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்.

பத்து நிமிஷத்திற்குள் டாக்டர் பாண்டே வந்து சேர்ந்தார். பிறகு டெபுடியின் அனுமதியின்மேல் பிரே

தத்தைப் பரிசோதனை செய்துவிட்டு, "குண்டு பின் கழுத்தின் கீழே பாய்ந்திருக்கிறது. குண்டுபட்ட ஐம்பது செகண்டில் மரணம் அடைந்திருக்க வேண்டும். இப்பொழுது அவர் இறந்து ஒன்றரை மணி நேரமாகிறது" என்று கூறினார்.

டேபுடி :—தற்கொலையாக இருக்கலாமோ ?

பாண்டே :—இல்லை, அப்படி இருக்கமுடியாது. ஏனெனில் ஒருவர் தாமே சுட்டுக் கொள்வதானால், முன் கழுத்துப் பக்கமாகத்தான் சுட்டுக்கொள்ள முடியும். கையைத் தூக்கிச் சிறிது கஷ்டத்துடன் பக்கவாட்டிலும் சுட்டுக்கொள்ளலாம். அப்படியே வெகு திறமையாகக் கையைப் பின் பக்கமாய்க் கொண்டுபோய்ச் சுட்டுக் கொண்டாலும், துப்பாக்கிக் குண்டு மேல்பக்கமாகவோ, கீழ்ப்பக்கமாகவோ, சற்றுச் சாய்வாகவோ பாயுமே தவிர, இப்படி நேராகப் பாயமுடியாது. ஆகவே இது தற்கொலையன்று. கொலை என்றுதான் சொல்லுவேன்.

டேபுடி :—உறுதியாகச் சொல்கிறீர்களா ?

பாண்டே :—ஆம், என்வரையில் அப்படித்தான். இன்ன இடத்தில் சுட்டால் தவறாமல் மரணம் சம்பவிக்கும் என்ற மர்மம் தெரிந்தவனே சுட்டதுபோலிருக்கிறது.

கொலை என்பதைக் கேட்டதும், அங்கிருந்தவர்களின் முகத்தில் வியப்பும் பயமும் தோன்றிவிட்டன.

டேபுடி:—அப்படியானால் நான் இதைத் தீரவிசாரிக்க வேண்டியதுதான். டாக்டர்! தங்களுக்கு அவ்வளவு அவசரமில்லையே? கொஞ்சம் தங்கி எங்களோடு போகலாமோ ?

டாக்டர், "அவசரமில்லை" என்று சொல்லி நாற்காலியில் அமர்ந்தார்.

டேபுடி, ஸ்திரீகள் நின்ற பக்கமாகத் திரும்பினார்.

அங்கே சுமதி, அமிர்தா, அருணா, சாந்தி, பவன்தாஸின் மனைவி, அவரது பன்னிரண்டு வயதுள்ள ஒரு பெண் இவர்கள்தான் இருந்தார்கள். டேபுடி அமிர்தாவைப் பார்த்து, "நீங்கள் பிரபுவுக்கு என்ன உறவு?" என்றார்.

"அவர் என் தாய் மாமன். இவள் அருணா, என் தங்கை."

டெபுடி சாந்தியைப் பார்த்து, "நீ யார் அம்மா?". என்றார்.

"பணிப்பெண்" என்றாள் சாந்தி.

"இந்த அம்மணி?" என்றார் டெபுடி பகவன்தாஸின் மனைவி பக்கமாகத் திரும்பி.

"பகவன்தாஸ் என் அப்பா, இது என் அம்மா" என்றாள் பகவன்தாஸின் மகள்.

அப்படியே புருஷர்கள் பக்கமாகத் திரும்பி, ஒவ்வொருவராக யார் யார் என்று தெரிந்து கொண்டார். முடிவில், "உங்களில் யாராகிலும் இக்கொலையைப் பற்றி ஏதாவது சொல்ல முடியுமா?" என்று கேட்டார். பொதுவாக எல்லோரும், "எங்களுக்கு ஒன்றும் தெரியாது" என்று சொல்லி விட்டனர்.

டெபுடி அத்துடன் விடவில்லை. "பிரபு மரணமடைந்தது உங்களுக்கு எப்போழுது தெரிந்தது?" என்றார். அமிர்தா பதில் சொன்னாள்: "சாந்தியைத் தவிர நாங்கள் வடபக்கம் காம்பௌண்டுப் பாதையில் தமாஷாகப் பேசிக் கொண்டிருந்தோம். திடீரென்று ஹாலில் பேச்சுக் குரல் கேட்டது. நாங்கள் என்ன விஷயமென்று அறிய எங்கள் அறை வழியாக ஓடி வந்தோம். அப்பொழுது பகவன்தாஸ் டெலிபோன் அருகில் இருந்தார். ஹாலுக்குள் வந்த பிறகுதான் அவர் மாடிப் படியில் குப்புற விழுந்து கிடப்பதைக் கண்டேன். மற்றப் பெண்களும் அப்பொழுதுதான் கண்டார்கள். விஷயம் புரியாமல் திகைத்தோம். டாக்டர் வந்த பின்புதான் மாமா இறந்து விட்டார் என்று அறிந்தோம்." இதை மற்றப்பெண்களும் ஆமோதித்தார்கள்.

டெபுடி:—பிரபு சத்தமிட்டுத் திரும்பிப் பார்த்தாரே, அப்போது அவரைத் தவிர வேறெவராவது கீழ் ஹாலிலோ, மாடி ஹாலிலோ, சாளரங்களிலோ தென்பட்டதுண்டா? தென்பக்க மாடிப்படிக்கு அப்பால் யாராவது நடந்தது போலவோ, தென்புறக் காம்பௌண்டுப் பாதையைப் பார்த்து ஓடி ஒளிந்து கொண்டதாகவோ யாருக்காவது சந்தேகம் ஏற்பட்டதுண்டா?

பிரகாசம் என்பவர், "மாடிப்படியில் ஜகன் மோகனதாஸ் ஏதோ குனிவதைப்போலப் பார்த்தோமேதவிர வேறெவரையும் காணவில்லை" என்றார்.

அதை மற்றவர்களும் ஆமோதித்தார்கள்.

டெபுடி:—தாங்கள் யார் என்று சொன்னீர்கள்?

பிரகாசம்:—நான் பகவன்தாஸின் நண்பன்.

டெபுடி:—ஆகவே, கட்டடத்திற்குள் ஒருவரும் வரவில்லை. ஆனால் அந்தத் தென்புறக் காம்பௌண்டுப் பாதையிலிருந்துகூட ஒருவர் சுட்டிருக்கலாமே?

பகவன்தாஸ்:—ஆமாம், ஆனால் நாங்கள் முன் வாசலுக்குக் கொஞ்சம் தென்புறமாகப் போடப்பட்டிருந்த மேஜை அருகில்தானே யிருந்தோம். நானும் பிரகாசமும கிழக்குப் பக்கம் பார்த்தபடி யிருந்தோமே. பட்டப் பகல் போல் விளக்கு வெளிச்சம். அங்கே ஒருவன் நின்றிருந்தால் தெரியாதா?

டெபுடி:—சரி, காம்பௌண்டின் தென் பாதையில் ஒருவரும் வரவில்லை. ஆனால் காம்பௌண்டுச் சுவருக்கு மேலிருந்தபடியே ஒருவன் குறிபார்த்துச் சுட்டிருக்கலாமே?

பகவன்தாஸ்:—ஆமாம், இருக்கலாம். ஆனால் ஜகன்மோகன் தாஸுக்கு விரோதி ஏது? இந்த க்ஷணம் வரையில் அப்படி யாரும் இல்லையே!

பகவன் தாஸ் இப்படிச் சொன்னபோது அவரது முகத்தில் ஆச்சரியக் குறிகள் தோன்றின.

அதற்குப் பிறகு டெபுடி, மாளிகைச் சமையற்காரன் சாம்பு, சாந்தி, புதிதாய் விருந்துக்குச் சமையல் செய்ய வந்த சுயம்பாகி யாவரையும் தனித்தனியாக விசாரிக்க, அவர்கள் யாவரும் கொலை நடந்த சமயம் பின்கட்டில் போஜனம் செய்துகொண்டிருந்ததாக ருஜுவாயிற்று. இதர விருந்தாளிகள் அனைவரும் மாளிகையின் முன்புறம் தங்கள் தங்கள் ஆட்டத்திலும், படிப்பிலும், பேச்சிலும் ஈடுபட்டிருந்ததும் தெளிவாயிற்று. ஸ்திரிகளும் ஒருவர் பார்வையில் மற்றவர்கள் இருந்து கூடிப் பேசிக் கொண்டிருந்ததும் ருஜுவாயிற்று. தோட்டக்காரன் பாஷியும், அவனது மனைவி வல்லியும்கூடப் பின்கட்டிலேயே இருந்ததும் ருஜுவாகிவிட்டது. ஆகவே, கொலையாளி யார்? அவன் எப்படி வந்தான்? எப்படிப் போனான்? ஸ்ரீவத்ஸா மாடி யெல்லாம் ஓர் இடம் விடாமல் பார்த்து விட்டுக் கீழே ஹாலுக்கு இறங்கி வந்தார். டெபுடியின் அருகில் வந்து நின்று பிறருக்குத் தெரியாமல் அவருடைய காலைத் தொட்டுவிட்டு, ஹாலின் வடபுறமாய்க்

கீழ்க்கோடிக்கு மெல்ல நடந்தார். ஸ்ரீவத்ஸாவின் செய்கையை உணர்ந்த டெபுடி அவரிடம் சென்று, "இந்தக் கேஸைப்பற்றி என்ன நினைப்பதென்றே புரியவில்லையே! உனக்கு என்ன தோன்றுகிறது?" என்று கேட்டார்.

ஸ்ரீவத்ஸா, "அதைத்தான் நானும் ஆலோசனை செய்கிறேன்" என்று சொல்லிவிட்டு, "அடாடா! ஏது, உங்கள் கோட்டில் சுண்ணாம்பு பட்டிருக்கிறதே" என்று சொல்லிக்கொண்டே டெபுடியின் பின் நின்று கோட்டில் பட்ட சுண்ணும்பைத் தட்டுவதுபோல் தட்டிக் கொண்டே ஹாலில் இருந்தவர்களுக்கு முதுகைக் காட்டியபடியே, வலதுகைச் சுட்டு விரலால் வடபக்கத்து அறையின் கிழக்கு வாசற் கதவு நிலையின் மேற் சட்டத்தைச் சுட்டிக் காட்டினார். டெபுடி ஒரு நொடியில் அந்தச் சட்டத்தின் நடுவிலிருந்து ஒரு துப்பாக்கிக் குண்டை எவரும் பாராதபடி எடுத்து வைத்துக் கொண்டார்.

விருந்தாளிகளில் பகவன் தாஸையும் பிரகாசத்தையும் தவிர மற்றவர்கள், துக்ககரமான அந்த இடத்தை விட்டுச் செல்ல விரும்பினார்கள். டெபுடி, போக விரும்பினவர்கள் யாவரும் போக அனுமதி கொடுத்து விட்டார். ஆகவே பகவன்தாஸும் பிரகாசமும் தவிர மற்றவர்கள் பலவாறு எண்ணமிட்டு விசனத்தோடு தங்கள் வீடுகளுக்குத் திரும்பினார்கள். அவர்கள், ஜகன் மோகனதாஸ் தற்செயலாய் இறந்தார் என்றே நம்பினார்கள். ஸ்ரீவத்ஸாவும் டெபுடியும் பின்னும் ஏதாவது துப்புலவுகள் அகப்படுமா என்று அந்த ஹாலையும் மாடிப் படியையும், தென்பக்கக் காம்பௌண்டையும் பாதைகளையும் மேலும் கீழுமாகக் கழுத்தொடியப் பார்த்துவிட்டு வந்து டாக்டர் பக்கத்தில் நின்றார்கள். பகவன்தாஸைப் பார்த்து, "பிரேத அடக்கம் நாளைக்கா அல்லது—" என்று டெபுடி முடிக்கும் முன், பகவன்தாஸ், "நாளைக்குக் காலையிலேயே நடந்து விடவேண்டும். வெளியூரிலிருந்து வரவேண்டிய நெருங்கிய பந்துக்கள் எவரும் இல்லை. ஆகவே நாளைக்கே.........." என்றார்.

டெபுடி, "அவசியமானால் நாங்கள் பிற்பகல் வருகிறோம்" என்றார். டாக்டரும் ஸ்ரீவத்ஸாவும் பின் தொடர, ஹாலை விட்டுத் தாண்டி வராண்டாவைக் கடந்தார். படிகளில் இறங்கினர். பின்னால் வந்து கொண்டிருந்த ஸ்ரீவத்ஸாவின் கண்கள் தோட்ட விருந்துக்காகப் போட்டிருந்த நாற்காலி மேஜை முதலியவற்றை ஒரு

பார்வை பார்த்தபோது, வடஅண்டைப் புறமாய் உள்ள ஒரு மேஜையருகில் ஒரு நாற்காலியைச் சுட்டிக்காட்டி, "அதோ பாருங்கள்!" என்றார். அப்படிச் சொல்லிக் கொண்டே, ஒரே தாண்டில் வழியிலிருந்த நாற்காலிகளைத் தாவிக் குதித்துச் சுட்டிக் காட்டிய இடத்தை அடைந்து குனிந்து பார்த்தார்.

## 3. இவன் யார்?

ஸ்ரீவத்ஸா கண்டதென்ன? ஒருவன் தரையில் உட்கார்ந்தபடியே நாற்காலியை ஆதாரமாக்கித் தலை குப்புற முகத்தை ஒரு நாற்காலியில் அழுத்தி யிருந்ததைத் தான் கண்டார். ஸ்ரீவத்ஸா அவனைத் தொட்டு அசைத்தபோது உணர்வுள்ளவனாகக் காணப்படவில்லை. அதற்குள் டெபுடியும் அவ்விடம் சென்றனர். அவன் நிலையை அவரும் உணர்ந்துகொண்டார். உடனே டெபுடி, "இவன் யார்?" என்று சற்று உரத்த சத்தமாய்க் கேட்டார். அதே சமயம் அமிர்தா, "ஆ, நிரஞ்சனா! ஐயோ! அவருக்கு என்ன நேர்ந்தது? அவருக்கென்ன?" என்று நெஞ்சு பதைக்கக் கதறிக்கொண்டே ஒரே ஓட்டமாக வந்தாள். அவளுடைய ஆவலையும் பரபரப்பையும் கண்ட ஸ்ரீவத்ஸா ஆச்சரியப்பட்டு, "அவ்வளவு அபாய நிலையில் இல்லை. இவர் மூர்ச்சை அடைந்திருக்கிறார். முதலில் இவரை வசதியான இடத்தில் படுக்க வைக்கவேண்டும்" என்றார். டெபுடி அமிர்தாவை ஏற இறங்கப் பார்த்து ஏதோ எண்ணினார். டெபுடி தன்னை அவ்விதம் வெறிக்கப் பார்ப்பதைக் கண்டு, அவள் தன் கண்களை மறுபக்கம் திருப்பிக்கொண்டாள்.

ஹாலில் இருந்தவர்களும் அங்கே வந்து கூடினர். ஸ்ரீவத்ஸா ஒரு ஸோபா கொண்டுவரச் செய்து அதில் நிரஞ்சனைப் படுக்க வைத்தார். அமிர்தா, நிரஞ்சனை மாடியில் அவன் தங்கியிருந்த அறையிலேயே, அவன் கட்டிலில், படுக்க வைக்கலாம் என்றாள். உடனே சிலர் மூர்ச்சித்த மனிதனை அவன் தங்கியிருந்த மாடி அறைக்குக் கொண்டுபோனார்கள். கட்டிலில் படுக்க வைத்தார்கள். நல்ல காலம்! அப்பொழுது அங்கே டாக்டர் பாண்டே இருந்தபடியால் அவர் மூர்ச்சித்த மனிதனைக் கவனிக்கத் தொடங்கினார். அப்பொழுது டெபுடியும் ஸ்ரீவத்ஸாவும் மாடித் தாழ்வாரத்தில் ஒரு புறமாக ஒதுங்கி நின்று பேசிக்கொண்டிருந்தனர்.

டெபுடி :—தலையில் அடிபட்டிருக்கிறதல்லவா ?

ஸ்ரீவத்ஸா :—ஆமாம், அப்படித்தான் தெரிகிறது. அவனைத் தொட்டுப் பார்த்த என் கையில்கூட இரத்தம் பட்டிருக்கிறது.

டெபுடி :—ஆமாம். இவனுக்கு எப்பொழுது அடி பட்டது? இவன் எப்பொழுது அந்த இடத்திற்கு வந்து சேர்ந்தான் ? ஒன்றும் தெரியவில்லை! இரண்டாவது ஜகன்மோகன தாஸைக் கொலை செய்த சற்று நேரத்திற் குள்ளாகவே இந்த மனிதனுக்கும் குண்டு பட்ட காயம்: அதுவும் இதே மாளிகையில்! இரண்டுக்கும் ஏதோ சம்பந்தம் இருக்க வேண்டுமல்லவா ?

ஸ்ரீவத்ஸா :—ஆம், அப்படித்தான் தோன்றுகிறது

டெபுடி :—இந்த நிரஞ்சனிடமிருந்து ஏதாவது புலன் அகப்படலாம். நாம் இவனை எப்படியாவது பேசும் நிலைக்குக் கொண்டுவரவேணும். அந்த இரண்டு இளம் பெண்களைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய் ?

ஸ்ரீவத்ஸா:—இதற்குள்ளாக அவர்களைப்பற்றி என்ன சொல்லமுடியும் ?

அங்கே அவர்களிடம் வந்த டாக்டர் பாண்டே, "தலையில் துப்பாக்கிக்குண்டு சுடப்பட்டிருக்கிறது. ஆனால் துப்பாக்கிக் குண்டு தலைக்குள் செல்லவில்லை. பலமாக மூளையைப் பக்கவாட்டில் தாக்கி உராய்ந்து சென்றிருக் கிறது. மூளையில் அதிர்ச்சி ஏற்பட்டிருக்க வேண்டும். பலத்த காயந்தான். காயத்திற்குக் கட்டுப் போட்டுவிட் டேன். இரவு இரண்டு மணிக்கப்புறம் பிரக்ஞை வரலாம். நாளைக் காலையில் வந்து பார்த்த பிறகுதான் அபாயமா, இல்லையா ?—என்று சொல்ல முடியும்" என்றார்.

டெபுடி:—இரவு ஸ்மரணைவந்தாலும் அவனிடமிருந்து சில விஷயங்களைக் கேட்டுத் தெரிந்து கொள்ளலாமா ?

பாண்டே :—ஸ்மரணை வந்தாலும் அவருடன் பேச்சே கொடுக்கக்கூடாது. மூளைக்கு வேலை கொடுத்தால் பல கோளாறுகள் நேரிடும். நான் காலையில் வந்து பார்த்து நிலைமையைத் தெரிவிக்கிறேன். மணி இப்பொழுது பத்து-நாற்பதாகிறது. நான் போய் வருகிறேன்.

டாக்டர் டெபுடியிடம் விடைபெற்றுப் புறப்பட்டார். அந்த மாளிகையில் இருந்தவர்கள் அனைவரும் துக்கத் தினாலும் பிரமிப்பினாலும் செயலற்றுத் திகைத்து

விட்டார்கள். யாவரும் டாக்டரை வழிவிட்டு வருவதற்காக மாடியினின்றும் கீழே சென்றனர். அவர்களில் அமிர்தாவை மட்டும் காணவில்லை.

டெபுடியும் ஸ்ரீவத்ஸாவும் அந்தத் தாழ்வாரத்தின் கோடியில் படிக்கட்டுகள் கீழே இறங்கும் இடத்திலேயே நின்றுவிட்டனர். மூர்ச்சித்த மனிதனிடமிருந்து விஷயங்களை அறிந்துவிட வேண்டுமென்று டெபுடிக்கு ரொம்ப ஆத்திரமாக இருந்தது. ஆனால் டாக்டர் மறுநாள் வரை அவனது மூளைக்குச் சிறிதும் வேலை கொடுக்கக் கூடாதென்று சொல்லிவிட்டது அவருக்குச் சற்றுமே திருப்தி யளிக்கவில்லை. டெபுடியின் மனப் போக்கை அறிந்த ஸ்ரீவத்ஸா, "ஆம், டாக்டர் சொன்னது சரிதானே. எனக்கும் அவனைத் தொந்தரவு செய்ய இஷ்டமில்லை. அவனிடமிருந்து தற்சமயம் ஏதாவது அறிய முயன்றாலும், அது வியர்த்தமாகி விடலாம்; அவன் தன் நிதான புத்தியோடு சொன்னதாகவும் இராது. ஒரு நாள் காத்திருப்பதில் என்ன குடி முழுகிப் போய்விடப்போகிறது?" என்று நிதானமாய்க் கூறினார்.

டெபுடி:—நாம் தாமதிப்பதால் அனுகூலம் ஏற்படுமா? எனக்குச் சந்தேகந்தான். எதற்கும் அந்த மனிதனைக் கவனித்துக்கொள்ள நம்முடைய ஆளாக ஒரு 'நர்ஸை' ஏற்படுத்த வேண்டும்.

பின்பு நிரஞ்சன் படுத்திருக்கும் அறையை நோக்கி நடந்தார். ஸ்ரீவத்ஸா அவரோடு செல்லவில்லை. ஏனெனில், அங்கே அருணா வருவதைக் கண்டார். அவருடைய கால்கள் டெபுடியுடன் செல்ல மறுத்துவிட்டன. ஸ்ரீவத்ஸா அருணாவோடு மாடி-முன்-ஹாலுக்கருகில் வந்து நின்றுகொண்டு, "அருணா! நான் கேட்கும் சில கேள்விகளுக்குப் பதில் சொல்லுவாயா?" என்று கேட்டார். அருணா திடுக்கிட்டாள். "எனக்குத் தெரிந்த விஷயமானால் சொல்லுகிறேன்" என்றாள். அவளால் நிற்கவும் முடியவில்லை. அன்றைய நிகழ்ச்சிகள் அவ்வளவு பெரிய மன அதிர்ச்சியாக இருந்தன. கதவில் சாய்ந்தபடி ஒரு கையால் திரைச்சீலையைப் பற்றிக்கொண்டு நின்றாள். அவளுடைய முகம் பீதியடைந்து வெளுத்துப் போயிருந்தது.

ஸ்ரீவத்ஸா:—உன் மாமா கொலையுண்டு இறந்த செய்தி எப்பொழுது உனக்குத் தெரியும்?

அருணு:—இன்ஸ்பெக்டரோடு வந்த டாக்டர் சொன்ன போதுதான்.

ஸ்ரீவத்ஸா:—மாமாவைக் கொலை செய்வதற்குக் காரணம் ஏதாவது உனக்குத் தெரிந்திருந்தால், கட்டாயம் இப்போதே தெரிவிப்பதுதான் நல்லது. அவருக்கு விரோதி யாராவது உண்டா? சந்தேகமா யிருந்தாலும், வெளியிட்டால் அது குற்றவாளியைக் கண்டுபிடிக்க வழிகாட்டியாக இருக்கும்.

அருணு:—என் மாமாவைப் பற்றி எனக்கு அதிகமாக ஒன்றும் தெரியாது. நானும் அமிர்தா-அக்காளும் பன்னிரண்டு வருஷகாலமாக மாமாவின் பாதுகாப்பில் இருந்துவருகிறோம். ஆனால் நாங்கள் அந்தப் பன்னிரண்டு வருஷங்களிலும் சதா இந்த மாளிகையில் தங்கின தில்லை. ஹாஸ்டலில் வசித்து வந்தோம். ஆகவே அவரை மாமா என்றும், எங்களிடம் ரொம்ப அன்பு பாராட்டினவர் என்றும் அறிவோமேதவிர, வேறொன்றும் தெரியாது எங்களுக்கு. அக்கா படிப்பு முடித்து, சென்ற ஒன்றரை வருஷமாகத்தான் இந்த மாளிகையில் தங்கி வருகிறாள். மாமாவுக்கு ஒரு விரோதி யிருப்பான் என்று நான் ஒருபோதும் எண்ணமுடியாது.

ஸ்ரீவத்ஸா:—மாமாவுக்குச் சமீபத்தில் ஏதாவது பணக் கஷ்டம் ஏற்பட்டதுண்டா?

அருணு:—எனக்குத் தெரிந்தவரையில் அப்படிப் பட்ட கஷ்டம் ஏற்பட்டதில்லை.

ஸ்ரீவத்ஸா:—உங்கள் இருவரிடமும் அன்பாகவே யிருந்துவந்தாரோ?

அருணு:—அதென்ன, அப்படிக் கேட்கிறீர்களே? நாங்கள் அவருடைய சொந்தத் தங்கையின் புத்திரிகள். அவர் எங்களிடம் அன்பாக இராமல் வேறு எப்படி இருக்கமுடியும்? அப்படி அன்பில்லாதவராக இருந்தால், எங்களை ஆதரித்து வந்ததுடன், காலேஜ் படிப்பு முடியு மட்டும் சகல ஸௌகரியங்களும் செய்து தருவாரோ?

ஸ்ரீவத்ஸா:—(சற்றுப் புன்னகை செய்துவிட்டு) சரி; உங்களிருவரில் பிரபுவுக்கு யார்மேல் அதிகப் பிரியம்? அதையாவது சொல்லமுடியுமா?

அருணு:—ஆச்சரியமாக இருக்கிறதே உங்கள் கேள்வி? நமக்கு இரண்டு கண்கள்; நாம் அதில் ஒரு கண்ணை மற்றொன்றைவிட அதிகப் பிரேமையுடன் பாவிக்

கிருமா? அப்படியிருக்க, நாங்கள் ஒரே தாய் வயிற்றுக் குழந்தைகளாக இருக்க, மாமா எங்களில் வித்தியாசம் பாராட்டப் பிரமேயம் ஏது? இருவர் பேரிலும் ஒரே விதமான அன்புதான்.

ஸ்ரீவத்ஸா பொறுமையை இழக்கவில்லை. கேள்வி கேட்பதையும் நிறுத்தாமல், "அந்தச் சுமதி எவ்வளவு காலமாய் இங்கே வசித்து வருகிருள்? அவள் உங்களுக்கு என்ன உறவு?" என்று கேட்டார்.

அருணு:—சுமதியம்மாள் என் மாமாவுக்கு ஒன்று விட்ட அத்தை முறையாகவேணும். கணவர் இறந்தபின் எட்டு வருஷ காலமாகப் பிரபுவுடன் வசித்து வருகிருள்.

ஸ்ரீவத்ஸா:—பிரபுவிடம் அந்த அம்மாளுக்கு ரொம்ப அன்பு உண்டா? அந்த அம்மாளுக்குக் குழந்தைகள் உண்டா?

அருணு:—ஆமாம், பிரபுவுக்கும் அந்த அம்மாளிடம் ரொம்ப அன்பு உண்டு, அவளுக்குக் குழந்தைகள் இல்லை. சுமதி அம்மாளின் இறந்துபோன தங்கைக்கு ஒரு பையன், சுகுமாரன். அவனைச் சொந்தப் பிள்ளையாகப் போற்றிவருகிருள். அவன் 'கான்வெண்டு' பள்ளியில் ஐந்தாவது பாரத்தில் படிக்கிருன். அவன் வியாஸபுரியிலே தன் தந்தை இருக்குமிடத்தில் வஸிக்காமல் ஒரு ஹோட்டலில் வசித்து வருகிருன். அதற்குக் காரணம் இளைய தாயார் பட்சமாக இராதது தான்.

ஸ்ரீவத்ஸா:—இன்னும் ஒரே ஒரு கேள்வி. அதாவது, இப்பொழுது மூர்ச்சித்திருக்கும் மனிதனை இதற்கு முன் உனக்குத் தெரியுமா? அவன் யார்? இருப்பிடம் எது? அவனுக்கும் பிரபுவுக்கும் உங்களுக்கும் என்ன சம்பந்தம்? இவைகளை மட்டும் சொன்னால் போதும்.

அருணு:—அந்த விருந்தாளியைப்பற்றி நான் சொல்ல வேண்டுமா?......எங்களுக்கு அவரைப் பற்றித் தெரிந்ததெல்லாம் அவர் பெயர் 'நிரஞ்சன்' என்பது. அவர் பிரபுவிடம் விருந்தாளியாய் வந்து ஐந்து நாளாகிறது. இந்த மாளிகையில் தங்கி வருகிருர். இதைத் தவிர வேறு எதுவும் தெரியாது. நான் இனிப் போகலாமல்லவா?

ஸ்ரீவத்ஸா அருணுவிடமிருந்து இனிமேல் நிரஞ்சனைப் பற்றி ஏதும் அறிய முடியாது என்பதை உணர்ந்தார். ஆகவே அவர், "நீங்கள் உங்கள் தமக்கை இருக்கு

மிடந்தானே செல்லுகிறீர்கள்? நானும் அவ்விடந்தான் வருகிறேன்'' என்று சொல்லி அருணாவை முன் விட்டுப் பின்னே சென்றார்.

## 4. அமிர்தாவும் உடந்தையா?

டெபுடி நிரஞ்சன் இருந்த அறைக்குச் சென்றார். அறையின் கதவு தாழ்ப்பாள் இடாமல் அடைத்திருந்தது. சந்தடி பண்ணாமல் கதவைத் திறந்து அறைக்குள் எட்டிப் பார்த்தார். அச்சமயம், கதவுப் பக்கம் முதுகைக் காட்டியபடி நின்று கொண்டிருந்த அமிர்தா எரிந்து போன காகிதங்களைத் தூளாக்கிச் சாளரத்திற்கப்பால் காற்றில் பறக்க விட்டுக் கொண்டிருந்ததைக் கண்டார். உடனே அவர் முகத்தில் கோபக்குறி தோன்றியது. உதட்டைக் கடித்துக்கொண்டார். அவருடைய திருஷ்டி அவ்வறையில் காணப்பட்ட, திறந்திருந்த, ஒரு சிறிய பெட்டியின் மேல் விழுந்தது. உடனே அறைக்குள் நுழைந்தார். சத்தம் கேட்டு அமிர்தா திடுக்கிட்ட பார்வையுடன் திரும்பிப் பார்த்தாள். மறுக்ஷணமே முகத்தில் பிரமிப்பு மறையக் களங்கமற்றவள் போல் அவரைப் பார்த்தாள்.

அவள் நடிக்கிருளா, அல்லது உண்மையிலேயே களங்கமற்றவள்தானா?—என்று சந்தேகப்பட்டார் டெபுடி. அமிர்தா ஒரு பக்கா நீலியாக இல்லாவிட்டால் கள்ளங் கவடில்லாதவளாகவே யிருக்கவேண்டும். இவ்விரண்டில் எது உண்மை? டெபுடி பெட்டியருகில் சென்று, "இந்தப் பெட்டி யாருடையது?" என்று அதிகார தோரணையில் கேட்டார்.

அமிர்தா :—இப்பெட்டியும் இவருடையதுதான்.

டேபுடி :—இதிலிருந்து எவைகளை எடுத்துக் கொளுத்திஞய்?

அமிர்தா அவரை உற்றுப் பார்த்தாள். பிறகு, "எனக்கு ஒன்றும் தெரியாது. நான் ஒன்றையும் கொளுத்தவில்லை!'' என்று அழுத்தமாகக் கூறி விட்டாள்.

இனிமேல் இவளிடம் அதைப்பற்றிக் கேட்டால் உண்மை வெளிப்படாது என்று எண்ணியவராய் டெபுடி பூட்டப்படாமலிருந்த அப்பெட்டியைத் திறந்து, அதற்குள் கடிதம் ஏதாவது அகப்பட்டால் நிரஞ்சனைப்

பற்றி அறியலாம் என்ற எண்ணத்தோடு ஆராய்ந்தார். அப்பெட்டிக்குள் ஐந்து ஷர்ட்டு, நாலு ஸூட்டு, அரைடஜன் பனியன், ஐந்து டைகள், மூன்று பட்டுக் கைகுட்டைகள், நாலு துணிக் கைகுட்டைகள் இரண்டு துவாலைகள், ஒரு ஸிகரெட் பெட்டி, ஒரு ஷேவிங் பெட்டி, ஒரு பர்ஸில் முந்நூற்றுப் பத்து ரூபாய், இவைகளைத்தவிர வேறு கடிதமோ, காகிதமோ ஒன்றும் இருக்கவில்லை. அவருக்கு அந்த ஏமாற்றத்தைத் தாங்க முடியவில்லை.

அமிர்தாவைச் சந்தேகப்படத் தொடங்கினார் டெபுடி. கட்டிலில் படுத்திருந்த நிரஞ்சனது ஜேபிகளை ஆராய்ந்தார். என்ன பிரயோஜனம்? அவருக்கு வேண்டிய துப்பு ஒன்றும் அகப்படவில்லை. நிரஞ்சனைப் பற்றி அவருக்கு ஒரு செய்தியும் அகப்படவில்லை.

டெபுடி ஒரு ஸோபாவில் அமர்ந்து அமிர்தாவிடம், "விருந்து முடிந்ததும், நீ உன் மாமாவைக் கடைசியாக எங்கே பார்த்தாய்?" என்று கேட்டார்.

அமிர்தா:—நானும் மற்ற ஸ்திரிகளும் விருந்து முடிந்ததும் மாளிகையின் முன் ஹாலுக்கு வந்தபோது, மாமா வட புறத்திலுள்ள அறையின் கிழண்டை வாசற் படி வழியாக ஹாலுக்கு வருவதைப் பார்த்தேன். அதுதான் கடைசி முறை. என்னுடனிருந்தவர்களும் அப்போதுதான் கடைசி முறையாகக் கண்டிருக்க வேணும். அப்புறம், நான் அவரை உயிரோடு பார்க்க வில்லை. நாங்கள் வடபுறம் காம்பௌண்டு பாதையில் போட்டிருந்த ஆசனங்களில் அமர்ந்து சுமதியம்மாளுடனும் பகவன்தாஸின் மனைவியுடனும் சீட்டு விளையாடிக் கொண்டிருந்தோம். நாங்கள் எங்கள் ஆட்டத்தில் கவனம் செலுத்தி யிருந்தோம்."

டெபுடி:—நீங்கள் நிரஞ்சனைக் கடைசியாக எப்பொழுது கண்டீர்கள்?

அமிர்தா:—நாங்கள் சீட்டாடிக் கொண்டிருக்கையில், நிரஞ்சன் சிகரெட்டுப் பற்ற வைத்தப்படியே வடபுற முள்ள பாதையில் உலாவிக்கொண்டே மாதுளை மரத்தின் அருகிலே வந்து நின்றார். பின்பு, சற்று அப்பால் சீட்டாடிக்கொண்டிருந்த மற்ற விருந்தினர்களோடு ஒரு நாற்காலியில் அமர்ந்து மற்றவர்கள் ஆடுவதைக் கவனித்துக் கொண்டிருந்தார். பிறகு, அவர் ஸ்மரணையற்று விழுந்து கிடந்தபோதுதான் கண்டேன்.

டெபுடி:—ஆமாம், நீ மற்ற ஸ்திரிகளோடு சிட்டாட்டத்தில் கவனமாக இருந்ததாய்ச் சொன்னுயே; அப்படியிருக்க, நிரஞ்சன் மாதுளை மரத்தை யணுகியதும், சிகரெட் பிடித்ததும், பின்பு மற்ற நண்பர்கள் சீட்டாடுமிடத்தில் அமர்ந்து ஆட்டத்தைக் கவனித்துக் கொண்டிருந்ததும் எல்லாம் உனக்கு எப்படித் தெரியும்?

அமிர்தா:—நாங்கள் ஆட்டத்தில் கவனம் செலுத்தியது உண்மைதான். நிரஞ்சன் சிகரெட் பற்றவைக்க நெருப்புக் குச்சி கிழித்தவுடன் அவரைக் கவனித்தேன். அவர் திரும்பிச் சென்று மற்ற நண்பர்களுடன் அமர்ந்ததும் உண்மைதான்.

டெபுடி:—நிரஞ்சனை எவ்வளவு காலமாக உனக்குத் தெரியும்?

அமிர்தா:—இந்த மாளிகையில் ஐந்து நாட்களாக விருந்தாளியாயிருந்து வருகிருர். அவர் பெயர் நிரஞ்சன். இதைத் தவிர வேறெதுவும் எனக்குத் தெரியாது.

டெபுடி:—நம்பவேமாட்டேன். இதற்கு மேலும் தெரியும், மறைக்கிருய்! மாமாவின் கொலை விஷயமாக உன்னைப்பற்றிச் சந்தேகிக்கும்படி இப்படி நடந்து கொள்ளலாமா?

அச்சமயம் ஸ்ரீவத்ஸாவும், அருணுவும் அறைக்குள் வந்தனர்.

அமிர்தா:—மாமா இறந்துவிட்டார் என்பதை நான் மறந்துவிடவில்லை. எனக்குத் தெரிந்ததைச் சொல்லி விட்டேன்.

டெபுடி:—அதுதான் இல்லை. நிரஞ்சனை முதல் முதலில் எங்கே சந்தித்தாய்?

அமிர்தா:—(சட்டென்று) பத்து மாதத்திற்கு முன் கலியாணபுரியில் ஒரு ஹோட்டலில் மாமாவுடன் பேச வந்த சமயம் ஒரே ஒரு முறை பார்த்தேன்.

டெபுடி:—கலியாணபுரியில் எந்த ஹோட்டலில்?

அமிர்தா:—'டில் குஷ்' ஹோட்டலில்.

டெபுடி:—அப்புறம் எங்கே கண்டாய்?

அமிர்தா:—ஐந்து நாட்களுக்கு முன்பு இங்கே வந்த போது.

டெபுடி :—வந்தவுடனேயா?

அமிர்தா :—ஆமாம்; அவர் காரிலிருந்து இறங்கிய போது நானும் பார்த்தேன், அவரும் பார்த்தார்.

டெபுடி :—இதன் மத்தியில் நீங்கள் சந்தித்ததே இல்லையா? கடிதப் போக்குவரவது?

அமிர்தா :—இல்லை.

டெபுடி :—இவர் ஊர் எது? இவருடைய பந்துக்கள் எங்கே யிருக்கிறார்கள்? அவர்கள் யார்?

அமிர்தா சற்றே தயங்கினாள். தன்னைச் சமாளித்துக் கொண்டு, "ஒன்றுமே தெரியாது. கல்யாணபுரி ஹோட்டலில் சந்தித்தபொழுது பம்பாபுரியைவிட்டு அங்கு வந்து இரண்டு மாதம் ஆயிற்று என்று மாமாவிடம் சொன்னார். அது ஒன்றுதான் தெரியும்" என்றாள்.

டெபுடி :—நிரஞ்சன் இங்கே வரக் காரணம்?

அமிர்தா :—நாளையதினம் நிரஞ்சன் விருந்தாளியாய் வரப்போகிறான். இரண்டொரு நாள் தங்கினாலும் தங்குவான் என்று மாமா முந்தின நாள் என்னிடம் சொன்னார்.

டெபுடி :—இங்கே வந்த பிறகு இவரோடு பேசச் சந்தர்ப்பம் ஏற்படவில்லையா?

அமிர்தாவின் முகம் ஒருவித மாறுதல் அடைந்தது. மறுக்ஷணமே நிதானமடைந்து, "இல்லை, அவ்விதம் நிகழவில்லை. இன்று மூர்ச்சை யடைந்து கிடந்த இடத்திலேதான் நான் பார்த்தேன்."

டெபுடி :—நாங்கள் சந்தேகப் படும்படியாகத்தான் நீயும் நடந்து கொள்ளுகிறாய்.

அமிர்தாவின் முகம் அமைதியாகவே யிருந்தது.

அமிர்தா ஒரு பதிலும் சொல்லாமல் நிரஞ்சன் படுத்திருக்கும் கட்டிலை அணுகிக் குனிந்து அவன் மூச்சு விடுவதைக் கவனித்துவிட்டுப் பிறகு கவலை தேங்கிய முகத்துடன் டெபுடியை நோக்கி, "டாக்டர் இவரது அருகிலிருந்து பத்திரமாய்க் கவனித்துக்கொள்ள வேண்டுமென்று சொல்லி யிருக்கிறார். ஆகையால், நானும் எனது தங்கையும் இங்கேயிருந்து கவனித்துக்கொள்ளுகிறோம்" என்றாள்.

டெபுடி "இல்லை; இவரைக் கவனித்துக் கொள்ள ஒரு நர்ஸை அனுப்பி வைக்கிறோம்" என்றார்.

அமிர்தா :—ஏன்? நர்ஸ் கவனித்துக்கொள்ளும் அளவு நாங்கள் கவனித்துக்கொள்ள மாட்டோ மென்று? இல்லை. நாங்களே கவனித்துக் கொள்ளு கிறோம். எங்கள் வீட்டுக்கு விருந்தாளியாய் வந்தவரைக் கவனித்துக் கொள்வது எங்கள் கடமை. எங்களால் முடியாவிட்டால் நாங்களே நர்ஸ் வேண்டுமென்று உங்க ளிடம் தெரிவித்து விடுவோமே!

டெபுடி பதில் சொல்லத் தெரியாமல் தயங்கி ஸ்ரீ வத்ஸாவைப் பார்த்தார்.

ஸ்ரீவத்ஸா, "நாம் புறப்படலாமல்லவா? ஆம்; புறப் படுவோம்" என்றார் சற்று அழுத்தமாய்.

ஸ்ரீ வத்ஸா காரை ஓட்டவும் அவரது பக்கத்தில் அமர்ந்திருந்த டெபுடி கூறினர்: "நாம் நாளைக்குப் பகலில் வந்து நிரஞ்சனை விசாரித்தால் பல விஷயங்கள் தெரிய வரும்" என்றார்.

ஸ்ரீவத்ஸா :—ஆம்; ஆனல்........நாம் நாளைக்குக் கூட நிரஞ்சனிடம் விஷயங்களை அறிய முயல்வது விப ரீதத்திற்கே இடமாகுமென்று எண்ணுகிறேன்.

டெபுடி :—ஏன்?

ஸ்ரீவத்ஸா :—மூளையில் அடி பிரமாதமாயிருக்கிறது. டாக்டரின் அபிப்பிராயமும் அதுதான்.

## 5. மறு விசாரணை

மறுநாள் பிற்பகல் இரண்டு மணிக்கு மோகன் மாளி கையில் ஓர் அறையில் டெபுடி ஒரு ஸோபாவில் அமர்ந்திருக்க, ஸ்ரீவத்ஸா அவரருகில் ஒரு சுழலும் நாற்காலியில் உடகார்ந்திருந்தார். அவர்கள் எதிரில் உள்ள ஆசனங்களில் பகவன்தாஸும் பிரகாசமும் அமர்ந்திருந்தனர்.

டெபுடி :—ஜகன்மோகன தாஸுக்கு எவ்விதமான பண நெருக்கடியும் கிடையாது என்று சொல்லுகி றீர்களா?

பகவன் தாஸ் :—ஆமாம்.

டிப்டி :—பண நெருக்கடி இல்லாவிட்டால் அவருக்கு ஸ்திரீகள் விஷயமாகவோ, மற்ற இதர காரணங்களி னலோ விரோதிகள் ஏற்படலாமல்லவா?

பகவன் தாஸ் :—“அப்படி ஒன்றும் கிடையாது. பிரபு ஒருவரையும் விரோதித்துக் கொள்பவரல்லர். அவருக்குப் பணத்தைப் பற்றி ஒரு கவலையும் ஏற்பட இடமில்லை.

டெபுடி :—உங்களுக்கும் பிரபுவுக்கும் எப்போதாவது மனஸ்தாபம் ஏற்பட்டதுண்டா ?

பகவன் தாஸ், ஹஹஹஹஹா என்று சிரித்துவிட்டு, “ஆமாம், இந்தக் கேள்வி உங்களுக்கு முக்கியந்தான். நான் அவர் மனைவியின் தம்பி. பிரபுவுக்கும் எனக்கும் இது வரையில் ஒருவித மனஸ்தாபமும் ஏற்பட்டதில்லை” என்றார்.

டெபுடி :—தங்கள் நண்பர் பிரகாசம் எப்பொழுதும் இவ்வூரில்தான் வசிக்கிறாரா ?

அதற்குப் பிரகாசமே விடை கூறினார் :—“இல்லை, நான் அடிக்கடி இவ்வூருக்கு வருவது வழக்கம். என்னுடைய சொந்த வீடு எங்கள் கிராமத்திலே. நான் பல தருணம் பட்டணங்களுக்குப் போகவேண்டியிருக்கிறது. நான் கண்ட்ராக்ட் வேலை செய்கிறவன். கிராமத்திலேயே தங்கியிருக்க முடியவில்லை. நான் பகவன் தாஸைப் பார்க்க வரும்போது பிரபு ஜகன்மோகன் தாஸையும் பார்த்துப் போவது வழக்கம். நண்பர்களுடன் அருமையாகப் பழகும் குணம் உள்ளவர், உல்லாசமான மனப் போக்குடையவர்தான்.”

டெபுடி :—பிரபு ஏதாவது உயில் எழுதி வைத்திருக்கிறாரோ ?

பகவன் தாஸ் :—ஆமாம், போன வருஷம் ஓர் உயில் எழுதினார். பிரபுவின் மரணத்துக்கு முந்தின நாள் லாயர் வந்து போனார். நான் அவரை வழியில் கண்ட சமயம் விசாரித்தேன். பிரபு முன்பு எழுதிய உயிலை மாற்றிப் புதிதாய் உயில் எழுதிவிட்டதாகக் கூறினார்.

அதன் பிறகு பகவன்தாஸும் பிரகாசமும் விடை பெற்றுச் சென்று விட்டனர்.

டெபுடியும் ஸ்ரீவத்ஸாவும் நிரஞ்சன் இருந்த அறைக்குச் சென்றார்கள். அமிர்தா முதலில் திடுக்கிட்டு எழுந்தாள்.

பிறகு ‘வாருங்கள்’ என்று உபசரித்தாள். டெபுடி அமிர்தா உட்கார்ந்திருந்த நாற்காலியில் உட்கார,

ஸ்ரீவத்ஸர் மற்றொரு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டார். அமிர்தா நிரஞ்சன் முகத்தைப் பார்க்கும்படியாக ஓர் இடத்திலிருந்த மேஜையைப் பிடித்தபடி நின்றுகொண்டிருந்தாள். டெப்புடி நிரஞ்சனை உற்றுப் பார்த்துவிட்டு, "இன்று டாக்டர் பாண்டே வந்திருந்தாரா?" என்று கேட்டார். அமிர்தா, "ஆம், வந்தார். காயத்தைக் கட்டினார். மருந்துகளும் கொடுத்தனுப்பினார். இன்றைக்குக்கூட இவருக்குச் சற்றும் தொந்தரவு ஏற்படாமலும், சிறிதும் பேசவிடாமலும், நன்றாய் நித்திரை செய்ய விட்டுவிடவேண்டும் என்று சொல்லிப் போனார். நாளைக் காலையில் இவர் யோசனை செய்து பேசக்கூடிய நிலைக்கு வந்துவிடுவாராம்" என்றாள்.

டெபுடி:—நாங்களும் இவ்விடம் வருகையில் டாக்டரைப் பார்த்தோம்.

அப்பொழுது நிரஞ்சன் கண்களை விழித்துப் பார்த்தான். உடனே டெபுடி, "உங்கள் உடம்பு இப்பொழுது சற்றுக் குணமடைந்திருப்பதாக டாக்டர் சொன்னார்; உங்களுக்கு எப்படித் தோன்றுகிறது?" என்றார்.

நிரஞ்சன் பதிலொன்றும் சொல்லவில்லை. மறுபடியும் கண்களை மூடிக்கொண்டான். அதைக் கண்ட டெபுடி தலையை அசைத்தார். ஒரு நிமிஷம் பொறுத்து, "நீ நிரஞ்சனைப் பற்றிச் சொன்னதற்கும் அதிகமாக உனக்குத் தெரியும் என்பது உண்மை. ஆனால் நீ முழு விவரத்தையும் சொல்லாமல் மறைத்து வைக்கிறாய். உன் மாமாவின் கொலை மர்மம் உனக்கே தெரிந்திருக்கலாம். உன் மாமாவின் கொலையோடு சம்பந்தப்பட்டவரான விருந்தாளியிடம் விசேஷித்த கவலை கொண்ட உனக்கு ஒன்றுமே தெரியாதா? போலிஸாராகிய நாங்கள் இதைப்பற்றி என்ன நினைக்கக் கூடும்?" என்று நிதானமாகவும் அழுத்தமாகவும் கூறினார்.

அமிர்தாவின் முகம் க்ஷணநேரம் வெளுத்துவிட்டது. அவள் டெபுடியின் முகத்தை ஒரு தரம் பார்த்துவிட்டுக் கீழே குனிந்துகொண்டாள். மறுபடியும் அவள் நிமிர்ந்த பொழுது, அவளது முகத்தில் சாந்தமும் கண்களில் தைரியமும் நிலவ எப்பொழுதும் போல் காணப்பட்டாள். ஸ்ரீவத்ஸாவுக்கும் ஆச்சரியமாகவேயிருந்தது. அவள் சொல்லப் போவதைக் கவனமாகக் கேட்கக் காத்துக் கொண்டிருந்த டெபுடியோ தனது நெற்றியைச் சுளித்துக்

கவனிக்க ஆரம்பித்தார் அமிர்தாவின் முகத்தையே. அவளைச் சிறிதும் நம்பாதவர்போல் கூர்ந்து கவனித்தார். ஆனால், டெபுடியின் முக வேறுபாட்டைக் கண்டும் பதறாமல் அமிர்தா, "நேற்று எனது மாமா இறந்ததையும், அதே சமயத்தில் நிரஞ்சன் பிரக்ஞை யற்றதையும், இவருக்குக் காயம் ஏற்பட்டிருப்பதையும் நான் மறந்து விடவில்லை. நேற்றே எனக்குத் தெரிந்தவரையில் நிரஞ்சனைப் பற்றித் தெரிவித்து விட்டேன். அதற்கு மேல் எனக்கு ஒன்றும் தெரியாது. எதையோ மறைக்கப் பார்க்கிறேன் என்று நினைத்துச் சந்தேகப் படுகிறீர்கள்" என்றாள். அதற்கு டெபுடி, "ஆம், நீ கட்டாயம் மறைத்துத் தான் பேசுகிறாய். உன் மாமாவின் கொலை விஷயமாக உன்னையும் நிரஞ்சனையும் பலமாகச் சந்தேகப்பட வேண்டியதாகவே யிருக்கிறது!" என்றார். அமிர்தா பதில் ஒன்றும் சொல்லவில்லை. மேலும் டெபுடி, "ஆனால் இதற்கு மேல் ஒன்றும் தெரிவிக்கமுடியாதா?" என்றார் திரும்பவும். "இதற்குமேல் ஒன்றும் தெரியாது" என்று சொல்லிவிட்டு, மேலும் பேச இஷ்டமற்றவள்போல், அமிர்தா ஒரு ஜன்னல் அருகில் சென்று நின்று வெளிப்புறம் நோக்கினாள்.

டிப்டி:—நாம் நிரஞ்சன் மூலமாகத்தான் ஏதாவது விஷயத்தை அறியலாம். ஆகவே நாம் நிரஞ்சனுடன் தான் சம்பாஷிக்க வேண்டும்.

அது வரையில் பேசாமலிருந்த ஸ்ரீவத்ஸா, "ஆனால் நாம் இப்பொழுது அவருடன் பேசக்கூடாதே. நாளைக் காலையில் கட்டாயம் நீங்கள் அவருடன் பேசலாம்" என்றார்.

ஸ்ரீவத்ஸாவின் கட்டளை போன்ற பேச்சு டெபுடிக்குச் சற்றுக் கோபத்தை உண்டுபண்ணிற்று. இருந்தாலும் வேறு வகையின்றி "உம்" என்று ஒரு உறுமலுடன் அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டார். ஸ்ரீவத்ஸாவும் உடன் சென்றார்.

## 6. புது உயில்

டெபுடியும் ஸ்ரீவத்ஸாவும் லாயர் சின்னஜிராவிடம் சென்று இரண்டு உயில்களைப் பற்றியும் விசாரித்தார்கள். மோகன் மாளிகையைத் தவிரப் பெரும் பாகமும் சுமதி யம்மாளுக்கும், அமிர்தாவுக்கும் அருணாவுக்கும்

மொத்தமாக ஐயாயிரம் ரூபாயும், சாம்பு, சாந்தி, பாஷி முதலான அரண்மனைச் சிப்பந்திகளுக்குத் தலைக்கு ஆயிரம் ரூபாயும், மோகன் மாளிகையை விற்றுவரும் பணத்தைத் தரும ஆஸ்பத்திரிக்கும், சுமார் பதினையாயிரம் ரூபாய் ஒரு கல்விச் சாலைக்கும் அளிக்கும்படி புதிய உயிலில் ஏற்பாடாயிருந்தது. பழைய உயிலின்படி, அமிர்தாவுக்கும் அருணாவுக்கும் பிரபுவின் ஆஸ்தியில் பெரும் பாகமும் சேரும்படி ஏற்பாடாயிருந்தது. டெபுடி, ஸ்ரீவத்ஸா இருவரிடத்திலும் சின்னைஜிராவ் பழைய உயிலையும் புதிய உயிலையும் காட்டினார். புதிய உயிலில் சுமதிக்கு அதிகப் பங்கு கிடைக்கும்படி செய்திருந்த ஏற்பாடு இருவருக்கும் வியப்பாகவேயிருந்தது. மிகவும் எட்டின உறவான சுமதிக்கு ஐம்பத்தையாயிரம் ரூபாய் என்றால் யார்தான் அதிசயப்படமாட்டார்கள்? முந்தின உயிலில் அமிர்தா, அருணாவுக்கு ஆளுக்கு முப்பதினாயிரமும் சுமதி அம்மாளுக்குப் பத்தாயிரமும், மாளிகை அமிர்தாவுக்கும் என்று எழுதியிருந்தது.

ஜகன் மோகனதாஸ் கோடீச்வரர் என்று எங்கும் பிரஸ்தாபமாயிருந்தது. ஆனால் உண்மையைப் பார்த்த அளவிலே, மாளிகை தவிர அவருடைய ஆஸ்தியெல்லாம் லக்ஷத்துச் சில்வானம் ரூபாய்தான் என்பதும் அதிகாரிகளுக்கு வியப்பாகவேயிருந்தது.

உயிலைப் பற்றி விஷயங்களையெல்லாம் தெரிந்துகொண்டபின் டெபுடியும் ஸ்ரீவத்ஸாவும் மோகன் மாளிகைக்குச் சென்றார்கள். ஸ்ரீவத்ஸா மாளிகைத் தோட்டத்தில் உள்ள செடிகளை ஆராய்ந்துகொண்டிருந்தார். டெபுடி சுமதி அம்மாளிடம் சென்று அவளுக்கும் பிரபுவுக்கும் உள்ள உறவைக் கண்டறியப் பல கேள்விகள் கேட்டார். முதலாவது, பிந்திய உயிலில் அடங்கியிருக்கும் விஷயங்கள் அவளுக்கு முன்னதாகவே தெரியுமா என்று அறியப் பல கேள்விகள் கேட்டார். சுமதிக்கு முன்னதாகவே ஒன்றும் தெரியாது என்பது ஸ்பஷ்டமாகிவிட்டது.

டெபுடி :—பிரபுவுக்குச் சொந்த மருமக்களல்லவா அமிர்தாவும் அருணாவும்? அவர்களை ஒதுக்கிவிட்டு உங்களுக்கு ஆஸ்தியின் பெரும் பாகத்தையும் கொடுக்க உயில் எழுதியது ரொம்ப ஆச்சரியமாக இருக்கிறதே?

சுமதி :—ஒஹோ அப்படியா? பிரபுவை வற்புறுத்தி எனக்குச் சாதகமாக ஒரு உயிலை எழுதச் செய்து, பின்பு

அவருடைய கொலேக்கு நானே காரணமானதாக நீங்கள் நினைக்கிறீர்களோ ?

டேபுடி :—கொலேக்குக் காரணம் நீங்கள் என்று சொல்லவில்லே. ஆனால் ஆஸ்தியின் பெரும் பாகமும் நியாயமாகச் சேரவேண்டியவரை விட்டு மற்றொரு வருக்குக் கொடுக்க வேண்டுமானால், அதற்கு ஒரு முக்கிய காரணம் இருந்திருக்க வேண்டுமல்லவா? நீங்களும் பிரபுவை விட்டுப் பிரியாமல் எட்டு வருஷ காலம் இருக்கிறீர்கள். பிரபுவும் உங்களிடம் ரொம்பப் பிரியமாக இருந்ததாகவே சொன்னீர்கள்.

இதைக் கேட்டதும் முகம் 'சுடுசுடு' என்று சூடேறிக் கோபத்தால் சிவந்தது. "ஐயா ! ஒரு ஸ்திரியிடம் பேசு கையில், அதுவும் விதந்துவான ஒருத்தியிடம் பேசு கையில், நீங்கள் உங்கள் மனம்போனபடியான சந் தேகங்களே யெல்லாம் வாயில் வந்தபடி சொல்லிவிடுவது அழகன்று. மாங்கல்யத்தை இழந்து வேறு புகலிடம் இல் லாமல் தவிக்கும் வேளேயில் சகோதரனேப்போன்ற ஒருவ ரிடம் வந்த ஒருத்தியை அச்சகோதரரும் இரக்கம் காட்டி அவளுடைய துயரம் தெரியாமலிருக்கும்படி பக்ஷமா யிருந்தால், அதைப்பற்றித் தப்பாகச் சந்தேகப் படுவது தங்களேப் போன்றவர்களுக்குச் சரியன்று.

டேபுடி :—நல்லது; தங்களுடைய வார்த்தையை நான் ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். இருக்கட்டும். பிரபு வின் மருமக்கள் இருவரும் பிரபுவிடம் அன்பாக இருந் தார்களா ?

சுமதி :—ஆம், அவ்விரு குழந்தைகளும் மாமாவிடம் அன்பாகவே யிருந்தனர்.

டேபுடி :—உயில் விஷயம் அவ்விரு பெண்களுக்கும் தெரியுமா ?

சுமதி :—எனக்குத் தெரியாது.

டேபுடி :—தெரிந்திருந்தால் உயில் விஷயம் அவர் களுக்கு அதிர்ச்சியைக் கொடுத்திருக்கும் அல்லவா ?

சுமதி பதில் சொல்லவில்லே.

டேபுடி :—பிரபுவுக்கும் பகவன்தாஸுக்கும் எப்போ தாவது மனஸ்தாபம் நேர்ந்ததுண்டா?

சுமதி :—எனக்கு எப்படித் தெரியும்? தெரிந்த வரையில் ஒன்றும் ஏற்படவில்லே. ஆனால் பிரபு அன்று

என்னிடம் பேசியபொழுது பகவன்தாஸ் தனது முழுப் பிரியத்திற்கும் பாத்திரமானவரல்ல வென்று தெரிவித்த படியால், மனஸ்தாப மில்லாவிட்டாலும் பிரியம் இருக்க வழியில்லை என்று நினைத்தேன். மற்றப்படி ஒன்றும் தெரியாது.

டெபுடி:—பகவன்தாஸுக்கும், பிரபுவின் மருமக்கள் இருவருக்கும் பேச்சுப் பழக்கமுண்டா?

சுமதி:—அக்குழந்தைகள் எல்லோருடனும் தாராள மாகப் பேசும் சுபாவம் உள்ளவர்கள். மேலும் படித்த பெண்கள்.

டெபுடி:—பகவன்தாஸ் அந்தப் பெண்களிடம் பக்ஷ முடையவர்தானே?

சுமதி:—ஆம், அவர் அமிர்தாவை ரொம்பவும் சிலா கித்ததாகத் தெரிகிறது. ஆனால் எல்லோருமே அமிர் தாவைப்பற்றி உயர்வாகப் பேசுவார்கள். அவளது நடத்தையும் குணமும் ரொம்பக் கவர்ச்சி. சின்னவளும் தமக்கையைப் போன்றவள்தான். ஆனாலும் இன்னும் விளையாட்டுக் குழந்தையாகவே யிருக்கிறாள். வெளுத்த தெல்லாம் பாலென நினைக்கும் வெள்ளை மனுஷி. அவ் வளவுதான் வித்தியாசம்.

அச்சமயம் சாம்பு அவ்விடம் வந்து, ஸ்ரீவத்ஸா டெபுடியைக் கூப்பிடுவதாக அறிவித்தான். சென்றதும் இருவரும், அமிர்தா அருணாவிடம் நிரஞ்சன் தேக நிலையைப் பற்றியும், கொலை சம்பந்தமாகவும் மேலும் சில கேள்விகள் கேட்டனர்.

ஸ்ரீவத்ஸா அருணாவிடம் பேசியபோதெல்லாம் தம்மை யறியாமலே ஏதோ ஒருவகைப் புது உணர்ச்சி எழுவதை உணர்ந்தார். ஒரே காலத்தில் ஒரே ஆசாமியைப் பார்த்துக் கொண்டிருந்தாலும் அருணாவின் பார்வை ரொம்ப ஆவலோடு பார்ப்பது போலிருக்கும். அமிர்தாவின் பார்வையில் ஒரு வகை அன்பும் நம்பிக் கையும் பிரதிபலித்துக்கொண் டிருந்தன. ஸ்ரீவத்ஸா மாளிகையை விட்டுப் புறப்பட்டுச் சிறிது தூரம் சென்ற பிறகு, சற்றுத் தயங்கிப் பின்னால் திரும்பிப் பார்த்தார். அவரது பார்வை முதலில் அமிர்தாவின் பக்கம் சென்றது. பின்பு ஒரு க்ஷணம் அருணாவை ஒரே பார்வை யால் உள்ளம் நிரம்ப விழுங்கிவிட்டு டெபுடியைத் தொடர்ந்து சென்றார்.

## 7. அனுமானங்கள்

அன்று இரவு ஒன்பது மணிக்கு டெப்புடி தமது மாளிகையில் ப்ரைவேட் அறையில் மேஜைக்கு முன்னல் உள்ள ஒரு சுழல்-நாற்காலியில் அமர்ந்து பம்பாபுரிப் போலீசிலிருந்து வந்த தந்தியைப் படித்து விட்டு, எதிரில் இருந்த ஸ்ரீவத்ஸாவிடம் தந்தியை வீசி யெறிந்து, "படித்துப்பார்" என்ருர். அந்தத் தந்தியில் "பம்பாபுரியிலுள்ள எந்தக் கல்லூரியிலும், சென்ற பத்து வருஷகாலமாக நிரஞ்சன் என்ற பெயருடன் ஒருவரும் படிக்கவில்லை" என்று எழுதியிருந்தது.

டெபுடி :—அதிருக்கட்டும் இரண்டாவதாக வந்த தந்தியைப் பார்.

மேஜைமேல் வைத்திருந்த இரண்டாவது தந்தியை யும் ஸ்ரீவத்ஸா படித்தார். "பத்து மாதங்களுக்கு முன் கலியாணபுரி ராஜவீதியின் கிழக்கோடியில் உள்ள டில் குஷ் ஹோட்டலில் மூன்று மாத காலம் நிரஞ்சன் என்ற ஒரு வாலிபன் தங்கி யிருந்ததாகத் தெரிகிறது. சுமார் இருபத்து மூன்று வயதுள்ள அவ்வாலிபன் நல்ல அழகன், பெருந்தன்மை யுள்ளவன், அடக்கமுள்ளவன். அவன் அடிக்கடி எதையோ எழுதிக் கொண்டும், கணக்குப் போட்டுக் கொண்டும் இருந்ததாக ஹோட்டல் காரர்கள் தெரிவிக்கிருர்கள். படிப்பில் மிக்க ஆர்வமுள் ளவன் என்றும் கூறுகிருர்கள். மற்றப்படி அவனைப் பற்றி ஒன்றும் அறியக் கூடவில்லை" என்று ஸி. ஐ. டி. இலாகா இன்ஸ்பெக்டர் ஜோஸெப் விவரமாகத் தெரிவித் திருந்தார்.

ஸ்ரீவத்ஸா:—நிரஞ்சன் கலியாணபுரியில் தங்கி யிருந்தது உண்மை.

டேபுடி:—இது மட்டும் தெரிந்தது பிரயோசனம் இல்லை.........நாளை அந்த நிரஞ்சனை விசாரித்த பிறகு தான் இந்தச் சிக்கல் விடுபடும்........உனக்கு அந்த அமிர்தாவிடம் சற்றும் சந்தேகம் ஏற்படவில்லையா ?

ஸ்ரீவத்ஸா :—" எல்லோரையும் விட்டு அவளை மட்டும் ஏன் சந்தேகிக்க வேண்டும் ?

டேபுடி :—நம்மிடம் கூறியதைவிட அவளுக்கு அதிக மாகவே தெரியும். அப்படித் தெரிந்த விஷயங்களை அவள் ஏன் ஒளிக்கிருள் என்பதுதான் எனக்கு விளங்க

வில்லை. மேலும் அந்தப் பெண்ணுக்கு அந்த வாலிபனைப் பற்றி ஏன் அவ்வளவு கவலை?

ஸ்ரீவத்ஸா:—அவளுடைய காதலன் என்றுகூடச் சொல்லலாம்.

டேபுடி:—அதனாலேதான் அவளுக்கு அவனைப் பற்றிப் பல விஷயங்கள் தெரிந்திருக்க வேணும் என்கிறேன். மேலும், மாளிகையில் தங்கிய ஐந்து தினங்களாக அவனிடம் ஒருதரங்கூடப் பேசவில்லை என்றும் சொன்னாளே, அதை நம்ப முடியுமா? அவன் மூர்ச்சித்துக் கிடந்ததை அறிந்தவுடனே எப்படிப் பதறினாள், பார்த்தாயா? நிரஞ்சனுடைய பெட்டிக்குள்ளிருந்த கடிதங்களை எடுத்து எரித்ததுகூட முன்னெச்சரிக்கையான காரியம். இவ்வளவு தூரம் சாமர்த்தியமாகக் காரியங்களைச் சமாளிக்க கூடியவள், முன்பின் தெரியாத ஒரு வாலிபனிடம் காதல் கொள்வாளா? தைரியசாலிதான். இல்லாவிட்டால் நான் அவ்வளவு தூரம் கேட்டதற்குப் பயந்துபோய் உள்ள விஷயங்களை வெளியிட்டிருக்க மாட்டாளா? மாமா தங்களுக்கு ஆஸ்தி அதிகம் வைக்காதது பற்றி ஆச்சரியமேயில்லை என்று சாதித்து விட்டாள் என்று நீதானே சொன்னாய். இவள் எப்படிப் பட்டவள்? நீ என்ன நினைக்கிறாய்?

ஸ்ரீவத்ஸா:—எனக்கு இதுவரையில் ஒன்றுமே புரியவில்லை. அவ்வளவுதான். ஆனால் அந்தப் பெண்கள் இருவரும் பிரபுவின் கொலையில் சம்பந்தப்பட்டிருந்தால் அது எனக்கு ஆச்சரியமாகத்தானிருக்கும். அப்படி நேரிட்டால் பிறகு பெண்களையே நான் நம்பமாட்டேன்!

டேபுடி:—'கடல் நீராழம் கண்டாலும் காணலாம், காரிகையர்தம் நெஞ்சாழம் காணமுடியாது' என்பார்கள். எனக்கு ஒரு சந்தேகம்? அந்தப் பெண்கள் இருவரும் அபார வசீகர சக்தி வாய்ந்தவர்கள். பெரியவளிடம் இன்னும் அபாரம்! நீ ஒருவேளை அவர்கள் வலையில் சிக்கி ஏமாந்து விட்டால் என்னவாகும்? இது விஷயமாக......

டேபுடி, ஸ்ரீவத்ஸாவின் முகத்தைப் பார்த்தார். அதற்கேற்றபடி ஒரு க்ஷணம் ஸ்ரீவத்ஸாவின் முகத்தில் அசடு தட்டியது. பின்பு நிதானத்திற்கு வந்து, "நீங்கள் சந்தேகப் படும்படியாக நான் நடந்துவிட்டேனா?" என்று அமைதியாகவே கேட்டார்.

டெபுடி:—இல்லை, இல்லை, நீயோ வாலிபன்; இன்னும் கல்யாணம் ஆகவில்லை. எச்சரிக்கை செய்தேனே தவிர வேறில்லை. நமக்கோ கேஸின் உண்மையைக் கண்டு பிடிப்பதுதான் உயிர். இதை மறந்து போகக்கூடா தென்பதற்காகத்தான் சொன்னேன். இது போகட்டும்! இப்போது :

முதலாவது :—விருந்து நிரஞ்சனுக்காகவே தயாரித்த விருந்து, விருந்தின் முடிவில் 'ஆ!' என்று ஒரு சத்தம். சில விருந்தாளிகள் மட்டும் மாளிகைக் கூடத்தின் பக்க மாகத் திரும்பிப் பார்த்தார்கள். அச்சமயம் பிரபு மாடி மேற்படியிலிருந்து இரண்டு படிகள் கீழே குனிந்ததையும், சற்று நேரமாகியும் அவர் எழுந்து மேல் நோக்கியோ கீழ் நோக்கியோ செல்லாமலிருந்ததையும், கண்டு ஆச்சரியப் பட்டுச் சிலர் மாடிப் படிக்கருகில் சென்று பார்க்கப் பிரபு தாறுமாருய்க் குப்புற விழுந்து கிடந்ததைக் கண்டார்கள். ஆனால் அச்சமயத்தில் கொலையாளி மாடியிலிருந்தாவது, மற்றவரது கண்களுக்குப் புலப்படக்கூடிய இடத்திலிருந் தாவது, ஓடினதையோ மறைந்ததையோ ஒருவரும் காணவில்லை.

இரண்டாவது :—ஸ்திரிகளையும் சந்தேகிக்க இடமில்லை. ஏனெனில் அவர்கள் யாவரும் வடபுறம் இருந்ததற்கு ருஜுவிருக்கிறது.

மூன்றாவது :—வேலையாட்கள் அனைவரும் பின்கட்டி லிருந்ததும் ருஜுவாகிவிட்டது.

நான்காவது :—ஒரு அரைப்படிப்பு-டாக்டரும் ஒன்றுக்குமுதவாத போலீஸ் இன்ஸ்பெக்டரும் வந்து அகப்பட்ட விஷயங்களைக் கொண்டு அது தற்செயலாக நேர்ந்த மரணம் என்று தீர்மானித்துவிட்டுச் சென்றது.

ஐந்தாவது :—நாம் போனோம், பாண்டேயை வர வழைத்தோம். அகஸ்மாத்தான மரணமாக இருக்க முடி யாது என்று தீர்மானித்தோம். அதற்கு அனுகூலமாய் மாடிப்படிக்கு நேர் வடபுறம் அறையின் நிலையின்மேல் பாய்ந்திருந்த ஒரு துப்பாக்கிக் குண்டு அகப்பட்டது.

ஆறவது :—அகப்பட்ட குண்டு ஒருவேளை பிரபுவின் துப்பாக்கிக் குண்டாகவே இருக்கலாமோ என்று பிரபு வின் துப்பாக்கியில் போட்டுப் பார்த்ததில் அந்தக் குண்டு அத் துப்பாக்கியில் பிடிக்கவில்லை, சற்றுப் பெரியதாக இருந்தது. ஆகவே, பிரபுவின் துப்பாக்கிக் குண்டு

அதுவல்ல வென்றும், அது வேருெரு துப்பாக்கியின் குண்டாக இருக்க வேண்டும் என்றும் முடிவுக்கு வந்தோம். இரண்டு துப்பாக்கி வெடித்திருப்பதை உணர்ந்தோம்.

ஏழாவது :—அந்த நிரஞ்சன் மூர்ச்சித்துக் கிடந்தது. அவன் தலையிலும் துப்பாக்கி சுடப்பட்டிருந்தது. அதை யறிந்த அத்தனை பேரிலும் அமிர்தாவே பதைபதைப்பும் கவலையும் அதிகம் கொண்டிருப்பது; அவள் கடிதங்களைக் கொளுத்தியது; இவ்விஷயங்களால் அவள் அவனைக் காப்பாற்றுவதில் அக்கரையாக இருக்கிருள் என்பது; அவன் ஒரு விருந்தாளி என்பதைத் தவிர வேறெதுவும் தனக்குத் தெரியாதென்று அவள் சொல்வது.

எட்டாவது :—பிரபு 'ஆ!' வென்று கத்துவதற்கு அரை நிமிஷத்திற்கு முன் சாலையில் நெருப்பு அணைக்கும் மோட்டார் ஓயாமல் மணியடித்தபடி சத்தமிட்டுச் சென்றது. துப்பாக்கி சுட்ட சத்தம் விருந்தாளிகளுக்கு அவ்வளவாய்க் கேட்காமலிருந்தது. ஆகவே முதலில் அந்த நிரஞ்சன் பிரபுவைச் சுட, அது குறி தவறி வட புற அறையின் நிலையில் பதிந்து விட்டது. பிரபு நிரஞ்சனைப் பார்த்துச் சுட்டிருக்கலாம். அது சற்றுத் தவறி நிரஞ்சனது மூளைப் பக்கம் தாக்கிவிட்டுப் போயிருக்கலாம். அவன் மறுபடியும் பிரபுவைப் பார்த்துச் சுட்டு விட்டு மாளிகையின் தென் புறத்துக் காம்பௌண்டுப் பாதையாக மாளிகையின் பின்புறமாய்ச் சுற்றிக்கொண்டு முன் புறம் வந்ததும் மூர்ச்சித்து விழுந்திருக்கலாமல்லவா? ஒரு வேளை இவ்வூகம் சரியாக இருந்து, முன் ஏற்பாடாகவும் நடந்திருந்தால், அந்தப் பெண் அமிர்தாவும் அறிந்திருந்தால், அவள் அந்த வாலிபனைக் காப்பாற்றுவதற்கு எடுத்துக் கொள்ளும் ஜாக்கிரதை அவசியமானதுதான். ஆகவே அவளும் கொலை நடக்கும் என்று தெரிந்தும் தடுக்காமலிருந்த குற்றத்துக்கு ஆளாக வேண்டும். இந்தக் கேஸில் இப்படியும் ஒரு அனுமானம் தோன்றுகிறதல்லவா?

ஸ்ரீவத்ஸா :—ஆமாம்; ஆனல் நிரஞ்சன், பிரபுவைக் கொல்லக் காரணம் என்ன? நான் இன்று பகலில் தென்புறக் காம்பௌண்டுப் பாதையில் உள்ள ஒரு க்ரோட்டன்ஸ் செடியின் கிளை இடுக்கில் பதிந்திருந்த துப்பாக்கிக் குண்டு ஒன்றை எடுத்தேனல்லவா? அது தான் பிரபுவின் துப்பாக்கிக் குண்டு.

டேபுடி :—நீ அந்தத் துப்பாக்கியில் போட்டுப் பார்த்தாயா?

ஸ்ரீவத்ஸா :—ஆம், சரியாக இருந்தது.

டேபுடி :—" அப்படியானல் அதுதான் நிரஞ்சனைச் சுட்ட குண்டாக இருக்க வேண்டும்..............இந்த அனுமானம் இருக்கட்டும். நாம் மற்றவைகளையும் கவனிக்க வேண்டும்.

ஒன்பதாவது :— பிரபுவுக்கு வெளிப் படையாக விரோதி ஒருவரும் இருந்ததாகத் தெரியவில்லை. திடீரென்று ஏற்பட்ட ஏதாவது ஒரு விரோதியால் சுடப் பட்டிருக்கலாம். அப்படிப்பட்ட விரோதி யார்?

பத்தாவது :— இது வரையில் பிரபுவின் ஆஸ்திக்கு வார்சு அமிர்தாவும் அருணுவும்தான் என்று இருக்க, திடீரென்று பிரபுவின் மரணத்துக்கு முந்திய தினம் புதிய உயில் தயாரர்க்கப் பட்டிருக்கிறது. அதில் அதிகச் சொத்து சுமதி அம்மாளுக்கு எழுதி வைக்கக் காரணம் என்ன?

பதினேன்றவது :—அந்த உயில் எழுதிய மறுதினம் பிரபுவின் கொலை. அப்படிக் கொல்லப் படாமல் உயிருடன் இருந்தால், ஒருவேளை அந்தப் புதிய உயிலை மாற்றித் திருத்திவிடுவதானுல் நஷ்டமடையக் கூடியவள் சுமதிஅம்மாள். அப்படி வந்த அதிர்ஷ்டத்தை இழக்க மனமில்லாதவளாய் இருந்தால், ஒரு வேளை சுமதி அம்மாள்கூடப் பிரபுவின் மரணத்தை விரும்பி யிருக்கலா மல்லவா?

ஸ்ரீவத்ஸா :—ஆம், பிரபுவின் மரணத்திற்கு ஒரு காரணம் இருந்திருக்க வேண்டும்.

டேபுடி:—அதைத்தான் நாம் கண்டுபிடிக்கவேண்டும். ஒன்று, சுமதி அம்மாள் பிரபுவைக் குல்லாப் போட்டுத் தனக்கு ஆஸ்தியை எழுதி வைக்கும்படி செய்து பின்பு, எங்கே பிரபுவின் மனம்மாறிவிடப் போகிறதோ என்ற பயத்தால் பிரபுவை வேறு ஒரு ஆளைக் கொண்டு சுடச் செய்திக்கலாம். இல்லையானுல், பிரபுவின் மருமக்கள் பிரபு தங்களுக்கு ஆஸ்தி வைக்காததை உணர்ந்ததினுலாவது, வேறு எந்தக் காரணத்தினுலாவது, குரோதங்கொண்டு பிரபுவின் மரணத்திற்கு உடந்தையாக இருந்திருக்கலாம். அப்படி யிருந்தால் அதில் அந்த நிரஞ்சனும் சேர்ந் திருக்கவேண்டும். இந்த இரண்டு அனுமானங்களும்

தவருயுமிருக்கலாம். வேருெரு ஆஸாமியை விருந்துக்கு அழைத்தது — பிரபுவுடன் பழகியவன், மாளிகையின் அமைப்பு முதலியவற்றை நன்கு அறிந்தவன் ஒருவன்தான் பிரபுவைச் சுட்டிருக்கவேண்டும். எதற்கும் இந்த நிரஞ்சனது மூடுமந்திரத்தை அறியுமட்டும் ஒரு முடிவுக்கும் வர முடியாது.

ஸ்ரீவத்ஸா :—பகவன்தாஸைப் பற்றி ஒன்று மில்லையோ ?

டெபுடி :—எந்தப் புற்றிலே எந்தப் பாம்பு இருக்குமோ? அவன் பிரபுவின் மரணத்தால் அடையக் கூடிய லாபம் ஒன்றுமில்லை என்று எனக்குத் தோன்றுகிறது. பிரபுவுக்கு அவனைப் பிடிக்காம லிருந்ததற்கு ஏதோ காரண மிருந்திருக்கலாம். அக்காரணம் சாதாரண மாகவும் இருக்கலாம், பிரமாதமாகவும் இருக்கலாம்.

ஸ்ரீவத்ஸா :—எதற்கும் நாளைப் பொழுது விடியட்டும். இன்னும் அதிகப் புலன் அகப்படலாம்.

ஸ்ரீவத்ஸா டெபுடியிடம் விடை பெற்றுக்கொண்டு தமது ஜாகைக்குப் போனர்.

## 8. பக்ஷிகள் பறந்துவிட்டன

ஸ்ரீவத்ஸா படுக்கையில் படுத்தும் நித்திரை கொள்ளாமல் ஒரு புஸ்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தார். மணி பன்னிரண்டு அடித்த பிறகுதான் புஸ்தகத்தை மேஜைமீது வைத்து விளக்கை அணைத்துவிட்டு நித்திரைக்கு ஆயத்தமானர்.

ஸ்ரீவத்ஸா ஆழ்ந்த நித்திரையில்தான் இருந்தார். அச்சமயம் டெலிபோன் மணி ‘கிணு கிணு’ வென்றடித்தது. சிறு சத்தத்திற்குக்கூட விழித்துக்கொள்ளக் கூடிய ஸ்ரீவத்ஸா டெலிபோன் மணி அடித்ததற்கு விழித்துக் கொள்ளாமல் இருப்பாரா? உடனே ஸ்விச்சைப் போட்டு விளக்கு ஏற்றி டெலிபோன் கருவியை எடுத்து, “ஹலோ யாரது?” என்று கேட்டபோதே கடிகாரத்தைப் பார்த்தார். மணி 4-15 என்று குறித்துக் கொண்டார்.

“ஆம், நான்தான் ஸ்ரீவத்ஸா.”

“ஓ, அருணவா? என்ன, அவசர விஷயம்?”

“ஆ, அப்படியா? இருவரும்?”

"எப்போதிருந்து?"

"ஊம், தெரியாதா? சரி; நான் புறப்பட்டு வருகிறேன்."

ஸ்ரீவத்ஸா உடனே உடை அணிந்து தமது சிறிய காரை ஓட்டிக்கொண்டு மோகன் மாளிகையை நோக்கிச் சென்றார். மோகன் மாளிகை எங்கும் விளக்குகள் பிரகாசித்துக் கொண்டிருந்தன. யாவரும் கூடிக் கூடிப் பேசிக் கொண்டிருந்தனர். ஸ்ரீவத்ஸாவைக் கண்டதும் அருணா ஆவலோடு அருகில் வந்து, "நிரஞ்சன் படுத்திருந்த அறையை நீங்கள் பார்க்கவேண்டாமா?" என்றாள். அருணாவின் கேள்வியால் ஸ்ரீவத்ஸா அவளது எண்ணத்தைத் தெரிந்து கொண்டார். அதாவது தன் தமக்கை காணாததைப் பற்றித் தனக்குத் தெரிந்த விஷயங்களை யெல்லாம் மற்றவர்கள் முன்னிலையில் அவள் பேச விரும்பவில்லை யென்பதுதான். அந்த எண்ணத்தை அறிந்த ஸ்ரீவத்ஸா, "ஆம், நான் முதலில் அவர்களிருந்த அறையைத்தான் பார்க்கவேண்டும்" என்றார். உடனே ஹாலின் தென் புறமாய் நின்றபடி கொட்டாவி விட்டுக்கொண்டிருந்த சுமதி அம்மாள், "உங்களுக்கு விஷயம் தெரியுமேண்ணா?" என்று கேட்டாள்.

ஸ்ரீவத்ஸா:—ஆமாம், அருணா டெலிபோனில் சுருக்கமாய்த் தெரிவித்தாள்.

சுமதி:—என்ன ஆச்சரியம், பாருங்கள்? நேற்று இராத்திரி வரையில் பிரக்ஞைகூட இல்லாமல் கிடந்த அந்தப் பிள்ளையாண்டானைக் காணவில்லை. அந்தப் பெண்ணையும் காணவில்லை. இந்த ஒன்றரை வருஷமாக இங்கேயே இருந்தவள், ஒரு நாளாகிலும் தனியாக ஓரிடமும் போகாதவள், அப்படியே போனால்கூட இன்ன இடம் போய் வருகிறேன் என்று சொல்லிக்கொண்டு போகிறவள், இன்று இப்படித் திடீரென்று காணமற் போனது ரொம்ப ஆச்சரியமாகத்தான் இருக்கிறது.

"ஆம், இவ்விஷயம் மிக்க ஆச்சரியமாகத் தானிருக்கிறது" என்று கூறிவிட்டு, ஸ்ரீவத்ஸா அருணாவைத் தொடர்ந்து சென்றார். அறை முற்றிலும் ஆராய்ந்து பார்த்தார், அந்த அறையை ஒட்டி யிருந்த பக்கத்துத் தாழ்வாரத்தைப் பார்த்தார். அங்கே அமிர்தாவுக்கு விரித்திருந்த படுக்கை அப்படியே நலங்காமல் இருந்தது. அவள் படுக்கையில் படுத்துத் தூங்கவே யில்லை என்று தீர்மானித்தார். திரும்பவும் நிரஞ்சன் படுத்

இருந்த அறையில் வந்து அவனது பெட்டியைத் திறந்து பார்த்தார். முதல் நாள் டெப்புடி திறந்து பார்த்தபொழுது எப்படியிருந்ததோ அப்படியே இராமல் எல்லாம் தாறு மாருக இருந்தன.

ஸ்ரீவத்ஸா அவ்விட மிருந்த ஒரு நாற்காலியில் அமர்ந்து, ஜன்னல் பக்கமாக நின்ற அருணுவைப் பார்த்தார். அவளுடைய முகத்தில் கவலையும் திகிலும் குடி கொண்டிருந்தன. ஸ்ரீவத்ஸா ஒன்றும் வாய் திறவாமல் இருப்பதைக் கண்ட அருணு பொறுமை இழந்து, "என் அக்காளைப் பற்றித் தங்களுக்கு எப்படிப் படுகிறது?" என்று கேட்டாள்.

ஸ்ரீவத்ஸா :—உனக்குத் தெரிந்தவைகளை யெல்லாம் முதலில் சொல்லேன். எவ்வளவுதூரம் உண்மையைச் சொல்லுகிருயோ அவ்வளவும் நல்லது. நீ உன் அக்காளை விட்டு எத்தனை மணிக்குத் தூங்கப் போனுய்?

அருணு :—பதினென்றரைக்கு.

ஸ்ரீவத்ஸா :—அது வரையில் என்னென்ன விஷயங்கள் பேசிக்கொண்டிருந்தீர்கள்? அதை விவரமாகச் சொல்லு.

அருணு :—நேற்றிரவு சாப்பாட்டுக்குப் பின் நான் அக்காளுடன் பேசிக்கொண்டிருந்த பொழுது முதலில் அக்காள் சொன்னுள்: "அருணு! அந்த ஸ்ரீவத்ஸாவிடம் பேச எனக்குப் பயமாயில்லே. ஆனல், அந்த டெப்புடியிடம் பேசப் பிடிக்கவில்லை. அவர் என்னைப் பற்றி வீணே சந்தேகப்படுகிருர்" என்ருள். "உன்னையும் என்னையும் பற்றி அவர் எதற்கு அப்படிச் சந்தேகப்படவேண்டும்?" என்று ஆச்சரியத்தோடு கேட்டேன். அதற்கு அவள், "எதற்கா?......மாமாவின் மரணத்தைப் பற்றித்தான், அதில் நான் சம்பந்தப் பட்டிருப்பேன் என்ற சந்தேகந் தான்!" என்ருள். "என்ன? மாமாவின் மரணத்தில் நீ சம்பந்தப்பட்டிருக்கலாம் என்ரு? ஐயோ! இதென்ன பைத்தியக்காரத்தனம்? நமது மாமா சாகவேணும் என்று நாம கனவில்கூட நினைத்திருக்க மாட்டோமே!" என்று கூறினேன். உடனே அக்கா என்னை அணைத்துக் கொண்டு, "அடி என் செல்வமே! கள்ளங் கவடற்ற உனக்கு இந்த உலகத்தின் விபரீதப் போக்கே தெரிய வில்லை. ஆனல் எனக்கு மட்டும் தெரியுமோ என்பாய். உலகத்தின் பொல்லாத இயல்பு ரொம்ப தூரம் போகக் கூடியது என்று உன்னைவிட எனக்குத்

தெரியும். ஆனாலும், அதன் ஆழத்தை நானறிய மாட்டேன்" என்ருள். நான் அவள் மடியில் தலை வைத்துப் படுத்துக்கொண்டிருந்தேன். அவள் என் நெற்றி மயிரைக் கோதி, முழுப்பிரேமையோடு என்னைக் கட்டி அணைத்து முத்தமிட்டாள். அவளுக்கு என்னிடம் இருந்த அன்பு எப்படிப்பட்டது என்பதை நேற்றுத் தான் அறிந்தேன். அந்த அன்பைக் கண்டு அப்படியே வியப்பில் மூழ்கி மெய்ம்மறந்து, ஒரு குழந்தையைப் போலவே அவள் வசமாய்விட்டேன். அப்படிச் சுமார் ஏழு, எட்டு நிமிஷம் சென்றிருக்கும். அது மட்டும் என்பேரில் அன்பைக் கொட்டினவளாக, "பகவானே! கல்லுக்குள்ளிருக்கும் தேரையையும் கடைக்கணித்துக் காத்தருளும் கருணை வடிவான பரம்பொருளே! இவளாவது சந்தோஷமாக வாழ அருள் புரிய வேண்டும்" என்று கண்களை மூடிக் கை கூப்பி ஸ்வாமியைப் பிரார்த்தித்தாள். அவளது கண்களி லிருந்து கண்ணீர் மளமளவென்று பெருகிவிட்டது. அவளுடைய செய்கை என்னை முற்றிலும் திகைப் படையச் செய்துவிட்டது. மேலும், மாமாவின் மரணத்தில் அக்காள் சம்பந்தப்பட்டிருப்பதாக நினைக்கும் டெபுடியின் அபிப்பிராயம் அவள் நெஞ்சைக் கலக்கடித்துவிட்டது. ஆகவே, அக்காவின் அவ்வளவு துயரத்திற்கும் டெபுடியின் அவசர அபிப்பிராயம்தான் காரணமென்று நினைத்து, "அக்கா! மனத்தில் ஏதோ சஞ்சலப் படுகிறதாகத் தோன்றுகிறது. அதற்குத் துளி கூட இடமில்லை. டெபுடி எதை வேணுமானாலும் நினைத்துக் கொள்ளட்டுமே, நினைப்பதை நிரூபிக்க வேண்டாமா? நீயும் நானும் மனமார எந்தக் கெட்ட காரியத்துக்கும் போகமாட்டோமே. நானாவது தெரியாத் தனத்தால் ஏதாவது தப்பிதம் செய்யக் கூடும். நீயோ அடக்கமும் நிதானமும் உள்ளவள். நீ தப்பிதமான விஷயங்களைக் காதாலேகூடக் கேட்க மாட்டாயே. டெபுடி சந்தேகப் படுகிருர் என்பதற்காக நீ வருத்தப்படவேண்டாம். நீ சற்றுமுன் எனக்காகப் பகவானைப் பிரார்த்தனை பண்ணினேயே! அந்தப் பகவானுக்கு உன்னைப் பற்றித் தெரியாதா?" என்று சமாதானப்படுத்தினேன். அவளும் தான் எதற்கும் வருத்தப்படவில்லையென்று கூறினாலும், அவள் மனத்தில் ஏதோ கவலை இருப்பதாக மட்டும் நான் நம்பினேன். ஏனெனில் அவள் எந்தச் சமயத்தில் என்னைக் கண்டாலும் அவளது முகம் தாமரைபோல் மலர, அந்த அழகான பற்கள் சற்று வெளியில் தெரியப்

புன்னகை செய்து "என் கண்ணே" என்பாள். அந்தப் புன்னகையைப் பார்த்து இரண்டு தினங்களாகிவிட்டன. இன்று என்னை இப்படித் தனியே விட்டு விட்டு எங்கேயோ போய்விட்டாள். எங்கே போனுள் என்று எனக்குத் தெரியவில்லையே!

ஸ்ரீவத்ஸா ஒரு யுவனென்பதையும், அன்னியன் என்பதையும் மறந்து மளமளவென்று சொன்னுள். அதுவரையில் அடக்கி வைத்திருந்த அவளது விசனம் அதற்குமேல் அடக்கமுடியாது போகவும், அவளது கண்ணீர் ஆருகப் பெருகத் தொடங்கிவிட்டது. முந்தானையால் மூடிக்கொண்டு அழுது விட்டாள்.

அருணு அழுவதைக் கண்ட ஸ்ரீவத்ஸாவின் மனம் எப்படியோ ஆகி விட்டது. சட்டென்று இருக்கையினின்றும் எழுந்து ஒரடி முன்னே சென்ருர். இருந்தாலும் அவள் சற்று நேரம் அழுது தனது துயரைத் தணித்துக் கொள்வதே நலம் என்று நினைத்தவர் போல் மறுபடியும் தனது இருக்கையில் அமர்ந்து கொண்டார். அவர் எதிர் பார்த்தது போல் இரண்டு நிமிஷம் சென்றதும் அருணு தன்னைச் சமாளித்துக் கண்ணைத் துடைத்துக் கொண்டு நிமிர்ந்தாள்.

ஸ்ரீவத்ஸா:—உங்கள் தமக்கைக்கு ஆபத்து ஒன்றும் நேர்ந்திராது என்றுதான் நான் நினைக்கிறேன். மேலும் அவள் ரொம்பவும் புத்திசாலி என்று நீங்களே சொல்லியிருப்பதால் ஏதோ முக்கிய காரியமாகச் சென்றிருக்க வேண்டும். மேலும், அவள் மறைந்த அதே நேரத்தில் நிரஞ்சனையும் காணுமையால், நிரஞ்சனே உன் அக்காளே அழைத்துக்கொண்டு சென்றிருக்கலாமல்லவா? ஆனல் இப்படி ஓர் அன்னிய வாலிபனுடன் மாளிகையை விட்டு ஒருவருக்கும் தெரியாமல் ஓடி விடுவதால் தன்னைப் பற்றிப் பிறர் விகற்பமாய் நினைக்கக்கூடும் என்பது அவளுக்குத் தெரிந்துகொள்ள முடியாததன்று. அப்படித் தெரிந்திருந்தும், நிர்ப்பந்தமோ, அவசியமோ நேரிட்டிருப்பதினுலேதான், உன்னிடம் கூடத் தெரிவிக்காமல் போயிருக்கிருள். நீ அவளைப் பற்றிப் பயப்படவே வேண்டாம். ஏனெனில், அவள் எந்த விஷயமாகவும் ரொம்ப ஏமாறக் கூடியவளில்லை.

அருணு:—தாங்கள் இவ்வளவு தூரம் என் தமக்கையிடம் நல்லபிப்பிராயம் கொண்டிருப்பதைப் பற்றி எனக்கோ ரொம்ப சந்தோஷம். அக்காவும் நிரஞ்சனும்

ஒரே சமயத்தில் காணப்படாவிட்டாலும் சத்தியமாகச் சொல்லுகிறேன் — அவள் தகாத எண்ணத்துடன் அவ் வாலிபனுடன் சென்றிருக்க மாட்டாள். தாங்கள் சொல்லுவதுபோல் நமக்கெல்லாம் தெரியாத, தடுக்க முடியாத, ஒரு காரணம் இல்லாவிட்டால், மானியான அவள் சென்றிருக்கமாட்டாள். ஆனால் அப்படி நேர்ந்த காரணம்தான் என்ன ?—என்பது துளிகூட எனக்குப் புரியவில்லை.'

ஸ்ரீவத்ஸா :—எத்தனை மணிக்கு, உன் தமக்கை காணா மற்போனது உனக்குத் தெரியவந்தது ?

அருணா :—நான் மாடியில் வட புறமுள்ள அறையில் படுத்துக்கொண்டிருந்தேன். அப்பொழுது ஏதோ சத்தம் கேட்டது. நித்திரை கலைந்து விழித்துக்கொண்டேன். படுக்கையில் எழுந்து உட்கார்ந்துகொண்டேன். அப்போது நிரஞ்சன் அறையிலிருந்து பிரகாசம் வந்தார். அவர் நான் உட்கார்ந்திருப்பதைக் கண்டதும் "நல்ல வேளை, நீ எழுந்திருந்தாயே" என்று சொல்லி, என்னருகில் வந்து, ' அருணா! உன் அக்காவும் நிரஞ்சனும் எங்கே ?" என்று என்னைக் கேட்டார். "ஏன்? அக்கா தாழ்வாரத்தில் படுத்துக்கொண்டிருப்பாளே" என்றேன். பிரகாசம், "இல்லையே, நான் தினமும் விடியற்காலம் மூன்றரை மணிக்கோ, நாலு மணிக்கோ விழித்து எழுந்ததும் உலாவச் செல்வது வழக்கம். அந்தப்படி இன்றும் நம் மாளிகையின் சாலைவழியாக உலாவ வந்தேன். படுக்கையிலிருக்கும் நிரஞ்சன் நினைவு வரவும், அவனுக்கு எப்படி யிருக்கிறது என்று அறிந்து போகலாமே என்று மாளிகையின் முன் வாசலுக்கு வந்தேன். முன்வாசல் திறந்திருந்தது. மாளிகைக்கு வந்தேன். மாளிகைக் கதவும் திறந்திருந்தது. மாடிக்குவந்து நிரஞ்சன் அறைக்குச்சென்று பார்த்தேன். நிரஞ்சனையும் காணவில்லை. உனது அக்காளையும் இவ்விடம் காணவில்லையே" என்றார். நான் ஆச்சரியத்துடன், "ஒருவேளை அக்கா நிரஞ்சனை அழைத்துக்கொண்டு கீழே சென்றிருக்கலாமோ ?" என்று சொல்லி, "அக்கா !" என்று கூப்பிட்டபடியே மாடி, கீழ் அறைகள், தோட்டம் எங்கும் தேடினேன். அவர்களைக் காணவில்லை. இதற்குள் மாளிகையில் யாவரும் எழுந்து விஷயத்தை அறிந்து, மாளிகையின் மூலை முடுக்கெல்லாங்கூடத் தேடிவிட்டு ஆச்சரியப் பட்டனர்.

அவ் விஷயங்களைக்கேட்ட ஸ்ரீவத்ஸா சிறிது நேரம் ஆழ்ந்த சிந்தனையில் ஈடுபட்டுச் சிறிதுநேரம் பேசாம லிருந்தபின், "பிரகாசம் இங்கிருந்து எப்பொழுது போனார்? அமிர்தாவும் நிரஞ்சனும் காணமற் போனதைப் பற்றி அவர் ஏதாவது சொன்னாரா?" என்று கேட்டார்.

அருணா :—பிரகாசம் நாங்கள் மாளிகை முழுவதும் தேடித் திரும்புமட்டும் இருந்துவிட்டு, உடனே சென்றார். நாங்கள் தேடிக்கொண் டிருக்கையில், "முன்பின் தெரியாத ஒரு வாலிப விருந்தாளியோடு நற்குலத்தில் உதித்த பெண், அதுவும் இந்தக் கொலை நடந்திருக்கும் காலத்திலே, ஓடிவிட்டாள் என்றால், யார்தான் தவறாக நினைக்கமாட்டார்கள்? காலம் கலி காலம், எதுதான் நடக்காது? இருந்தாலும் இவ்விஷயம் வெளிப்பட்டால் குடும்பத்திற்கே அவமானந்தான்!" என்று கூறினார் பிரகாசம்.

ஸ்ரீவத்ஸா :—பிரகாசம் போன பிறகுதான் எனக்கு டெலிபோன் செய்தாயோ?

அருணா :—என் மனம ஒரே குழப்பமாக இருந்தது. அவர் போய்க் குறைந்தது கால் மணி நேரத்திற்கப்புறந் தான் டெலிபோன் செய்தேன்.

ஸ்ரீவத்ஸா, "சரி, நான் அவசரமாய்ப் போகவேணும், வருகிறேன்" என்று கூறித் துரிதமாய் மாடியினின்றும் கீழே வந்து தன் காரில் ஏறிக்கொண்டார். சில வினாடி யில் கார் 'பூம், பூம், பூம், பூம்' என்று புறப்பட்டுச் சென்றது.

## 9. கார்ப் பந்தயம்

பகவன்தாஸின் மாளிகைக்குச் செல்லும் ரஸ்தாவில் ஒரு பர்லாங்கு தூரத்தில் ஒரு கார் நின்றது. அதி லிருந்து சேலம் பட்டுக்கரை வேஷ்டியைப் பஞ்சகச்சமாக உடுத்தி, ஒரு 'க்ளோஸ்' கோட்டு அணிந்த ஒருவர் கீழே இறங்கினார். அடர்ந்து வளர்ந்த மீசையைக் கோந்து தடவி ஊசிபோல முறுக்கிவிட்டிருந்தார். கறுப்பு மூக்குக் கண்ணாடியும் அணிந்திருந்தார். நெற்றியிலே சாந்துப் பொட்டு வெகு ஸ்பஷ்டமாக விளங்கிற்று. அவருடைய தலையில் நரை அதிகமாய்த் தோன்றிவிட்டது.

அவர் பகவன்தாஸின் பங்களாவை அணுகினதும் ஒரு வேலைக்காரன், "யார் ஐயா, நீங்க?" என்று கேட்டான். வந்தவர் "நான் அண்ணாஜி ராவ். பகவன் தாஸ் வீட்டிலிருக்கிறாரா?" என்றார். வேலையாள், "இல்லீங்க. கொஞ்ச முன்னேதான் காரிலே வெளியே பூட்டாங்க" என்றான். அண்ணாஜி ராவ், "அட்டா! இவ்வளவு காலையிலேயே வெளியேறிவிட்டாரா? இருக் கட்டும், அவருடைய சிநேகிதர் பிரகாசமாவது இருக்கி றாரா? அவரிடத்திலாவது ஒரு விஷயம் சொல்லிவிட்டுப் போகிறேன்" என்றார். மாளிகைக்குள்ளே சரேலென்று நுழையப் பார்த்தார். அந்த ஆள் குறுக்கே வந்து நின்று, "உள்ளே போகாதேங்கோ, அவங்க இல்லீங்க, அந்த ஐயர்கூடத்தான் எஜமானுடன் காரில் குந்திக்கினு போனாங்களே. அவங்க பெட்டி கிட்டி எடுத்துக் கிட்டுப் போனதைப் பார்த்தா, வர ரெண்டு நாளாவது பிடிக்கும் போலிருக்குது. நீங்க போயி ரெண்டு நாள் பொறுத்து வாங்க, அப்பத்தான் அவங்களைப் பாக்கலாம்" என்றான்.

அண்ணாஜி ராவ், ஓஹோ, இரண்டு பேருமே போயிருக் காங்களா? அதை அப்போதே சொல்லித் தொலைக்கப் படாதா? சரி, நான் இன்னொரு நாள் வருகிறேன்" என்று சொல்லிக் கார் நின்ற இடத்திற்குத் திரும்பி விட்டார். காரில் ஏறிக்கொண்டதும் கார் நேராக ஸ்டேஷ னுக்குச் சென்றது. ஸ்டேஷனுக்குச் சிறிது தூரம் இருக் கையிலேயே அவர் காரிலிருந்து கிழே இறங்கி ஒரு பெட்டியையும் வெள்ளிக் கூஜாவையும் கையில் எடுத்துக் கொண்டு காரைத் திருப்பி அனுப்பிவிட்டு, ஸ்டேஷ னுக்குள் சென்று டிக்கெட் கொடுப்பவரின் காதருகில் ஏதேதோ பேசிக்கொண்டிருந்தார். முடிவில் "மதன் பூருக்கு ஒரு முதல் வகுப்பு டிக்கெட் கொடுங்கள்" என்றார்.

டிக்கெட் கொடுப்பவர் சிரித்துக் கொண்டே மதன் பூருக்கு ஒரு முதல் வகுப்பு டிக்கெட்டைத் தேதி அடித்து நீட்டினார். டிக்கெட்டைப் பெற்றுக்கொண்ட ராயர் பிளாட்பாரத்தை அடைந்து ஒரு தூண் மறைவில் நின்றுகொண்டார். ஐந்து நிமிஷத்திற்கெல்லாம் ரயில் அலறிப் புடைத்துக்கொண்டு ஓடி வந்து 'உஸ்' என்று பிளாட்பாரத்தின் பக்கம் வந்து நின்றது. ராயர் தம் கைப் பெட்டியுடன் ஒரு முதல் வகுப்பு வண்டி எதிரில் சென்று நின்று நாலுபுறமும் ஒரு முறை சுற்றிப் பார்த்

தார். ரயில் புறப்பட இன்னும் ஐந்து நிமிஷங்கள் இருந்தன. அவர் பெட்டியை வண்டிக்குள் வைத்து விட்டு, ஏறிக் கதவை மூடிக்கொண்டார். அச்சமயம் அவ்விடம் கார்டு வந்தான். ராயர் அவனிடம் ஏதோ பேசினர். அவனும் ஏதோ சொல்லிவிட்டு அந்த வண்டிக்கு 'ரிஸெர்வ்' சீட்டை ஒட்டிவிட்டுப் போனன்.

ரயில் புறப்பட இன்னும் ஒரே நிமிஷந்தான் இருந்தது. அச்சமயம் இருவர் அவசரமாக வந்து இரண்டாவது வகுப்பில் ஏறவந்ததைப் பார்த்தவுடனே ராயருடைய முகம் திருப்தி அடைந்தது. "ஆம், அவ்விருவருந்தான்" என்று மனத்தில் நினைத்துக் கொண்டார். ரயிலும் புறப்பட்டது.

அன்று காலை பத்து - பத்துக்கு (10-10 a.m.) ராயர் மதன்பூர் ஸ்டேஷனில் இறங்கினர். பெட்டி சகிதம் ரயில்-மேடையை விட்டு வெளியேறி, அங்கே வரிசையாக் நிறுத்தியிருந்த டாக்ஸிகளை ஒவ்வொன்ருக்க் கவனித்து அதில் ஒன்றைத் தெரிந்துகொண்டு, அதன் ட்ரைவரைச் சைகை செய்து கூப்பிட்டார். ஒரு முஸல்மான், வயது முப்பது இருக்கலாம். தோற்றமே ராயருக்குப் பிடித்திருந்தது. அவன் அருகில் வந்ததும், "மணிக்கு எவ்வளவு மைல் தூரம் ஓட்டமுடியும்?" என்று கேட்டதற்கு, அவன் "அவசரமாக இருந்தால் அறுபது எழுபது மைல்கூட ஓட்டமுடியும்!" என்ருன். ராயர் அவன் காதில் ஏதோ மந்திரம் ஓதினர். அவன்முகம் மலர்ந்துவிட்டது. "கரீம்! சுமார் ஐந்நூறு மைல் தூரமாவது போகவேண்டியிருக்கும், அதற்குத் தக்கபடி காரை ஏற்பாடு செய்துகொள். சீக்கிரம், சீக்கிரம்" என்ருர்.

கரீம், "நல்லதுங்க எசமான்!" என்று சொல்லிக் காரைப் 'பர பர' வென்று தயார் செய்தான்.

கார் தயாரானதும் ராயர் பெட்டி சகிதம் காரில் ஏறிக்கொள்ளப் போகும் அதே சமயத்தில், ஒரு கறுப்புக் காரில் இருவர் ஏறிக்கொண்டு கார் ஸ்டாண்டை விட்டுப் புறப்படுவதைப் பார்த்தார். "கரீம்! அதோ முன்னல் போகிறதே ஒரு கறுப்புக் கார். அந்தக் கார் நம்ம பார்வையிலிருந்து தப்பக்கூடாது. அது எப்படித் திரும்பி எங்கே போனலும் நாம் அதைக் கவனித்தபடி நூறு கஜ தூரத்தில் இருந்துகொண்டிருக்க வேண்டும், தெரியுமா?" என்ருர்.

கரீம் :—அப்படியே எஜமான்! இனி அந்தக் கார் நம்மைத் தப்பி மறையாது.

கரிம் ஓட்டிய சிவப்புக் கார் தொடர்ந்து சென்றது. அந்த நீண்ட சாலையில் 'விர்' என்று அந்த இரண்டு கார்களும் சென்றபொழுதிலும் இரண்டுக்கும் நடுவில் சுமார் இருநூறு கஜதூரம் ஒன்றுக்கு ஒன்று விலகியே ஓடின. சிவப்புக் கார் கறுப்புக் காரைச் சிறிதும் தப்ப விடவில்லை.

கறுப்புக் கார் பதினோரு மணிக்குப் பின் பிரம்மபுரத்தில் ராஜா விலாஸ் ஹோட்டலின் முன் சென்று நிற்க, அதிலிருந்தவர்கள் இறங்கி ஹோட்டலுக்குள் சென்றதை ராயர் கவனித்துக்கொண்டார்.

சிவப்புக் கார் ராஜாவிலாஸ் ஹோட்டெலைத் தாண்டி ஒரு பர்லாங்குக்கு அப்பால் சென்று பீமாஸ் கபேயின் முன் நின்றது. உடனே ராயர் கரிமிடம் ஆகாரத்தை முடித்துக் கொள்ளும்படி கூறிவிட்டு தாமும் ஹோட்டெலுக்குள் நுழைந்தார்.

கரிம் சாப்பாட்டை முடித்துக்கொண்டு கால்மணி நேரத்திற்கு முன்பே காரின் கிட்ட வந்து நின்று கொண்டான். ராயர் முப்பது நிமிஷம் கழித்து வெளியில் வந்தார். அதே சமயம் ராஜாவிலாஸ் ஹோட்டலின் முன்னிருந்த கறுப்புக் கார் புறப்படுவதைக் கண்டார்.

மறுபடியும் கறுப்பைச் சிவப்பு விரட்டத் தொடங்கியது. இப்பொழுது இரண்டு காரும் ஐம்பது மைல் வேகத்தில் இருபுறமும் தும்பு பறந்து சூழ 'விர்'! என்று சென்றுகொண்டிருந்தன. அப்பொழுது ராயர், "கரிம்! கறுப்புக் காருக்கு முன் ஒரு பச்சைக் கார் போகிறதல்லவா?" என்றார்.

"பார்த்துச் சொல்றேன்" என்றான் கரிம். அப்பொழுது இடியும் மின்னலுமாக இருந்த மேகம் பிசுபிசுவெனத் தூற ஆரம்பித்துவிட்டது,

## 10. பந்தயத் தோல்வி

பதினைந்து நிமிஷம் சென்றதும் கரிம், "ஆமா, ஒரு பச்சைக் கார் முன்னாலே" என்றான்.

ராயர் :—அடே அப்பா, அது அறுபதுமைல் வேகத்திலா போகிறது?

கரீம் :—ஆமாங்க. அறுபதுமைல் வேகத்தில்தான் பறக்கிறது. பாருங்கொ நம்ப கார்கூடத்தான் பறக்கிறது!

ஆகாயம் இருண்டு மழை பலத்துவிட்டது. கரீம், "எஜமான்! கறுப்புக் கார் அந்தப் பச்சைக் காரைப் பிடிக்கப் பார்க்கிறது போலிருக்கே!" என்றான். முன் நோக்கியபடியே ராயர், "ஆம், கறுப்புக்கார் பச்சைக் காரைப் பிடிக்கத்தான் பார்க்கிறது. கரீம்! நீ இப்போ ஒரு சாகஸ வேலை செய்யவேணும். கறுப்புக் காரையும் அந்தப் பச்சைக் காரையும் தாண்டிப் போகவேணும். நம்முடைய கார் அந்தப் பச்சைக் காருக்கு முன் கொஞ்சம் தூரம் ஓடினதும், ரெண்டு காருக்கும் முன் கொஞ்ச தூரம் ஓடினபிறகு, பச்சைக் காருக்கும் கறுப்புக் காருக்கும் நடுவிலே நமது காரைச் செலுத்த வேணும். தெரிந்ததா?" என்றார். கரீம், "நல்லது எஜமான்!" என்றான். அதே சமயம் சிவப்புக்கார் அறுபத்து ஐந்து, எழுபது மைல் வேகத்தில் பறக்கிறது. ஆனால் பச்சைக் காரோ சிவப்புக் காரை முந்தவிடாமல் எழுபத்து ஏழு, எழுபத்து எட்டு மைல் வேகத்தில் எதையும் லட்சியம் செய்யாமல் ராமபாணமாகப் பறந்து சென்றுக்கொண்டிருந்தது. கரீமும் ராயரும் அதைக் கண்டு அதிசயப்பட்டார்கள். அந்த மோட்டார்ப் பந்தயத்தில் கரீமுக்குத் தோல்வி அடைய இஷ்டமில்லை. அதுவும் பணக்கார ராயர் உட்கார்ந்திருக்கையில் தோற்றுப் போவதென்றால் அவன் மனம் சம்மதிக்குமா? எண்பது மைல் வேகத்தில் பறந்தது சிவப்புக் கார். ஹா! எவ்வளவு லாகவமாய் அந்தப் பச்சைக் காரைத் தாண்டியது. ராயர் அதே சமயம் பச்சைக் காரை ஒரு யுவதி ஓட்டுவதையும், பின் ஸீட்டில் ஒரு மனிதன் இருப்பதையும் சந்தேகமறத் தெரிந்துகொண்டார். கார் ஓட்டிய அந்த ஸ்திரீயின் திறமையைப் பற்றி ஒரே வியப்பு. ஒரு வாலிபப் பெண் பின்னால் துரத்திவரும் இரண்டு கார்களையும் திணற அடித்து அந்தக் காற்று, மழை, இடி, மின்னல் ஒன்றையும் லக்ஷ்யம் செய்யாமல் அவ்வளவு வேகமாய் ஓட்டிவந்திருக்கிறாளென்பதை நினைக்க அவர் மனம் அபாரமான சந்தோஷத்தை அடைந்தது. அந்தப் பெண்ணின் திறத்தை மெச்சினார். பகைவனாயினும் வீரத்தை வீரம் மெச்சும் அல்லவா? "பேஷ், கரீம்! இனிமேல் பச்சைக் காரை முன்னே போகவிடு" என்றார் ராயர்.

"யஜமான் அந்தக் காரை ஒரு பெண்பிள்ளையல்லவா ஓட்டுகிறாள்? நானே திணறிவிட்டேன். எவ்

வளவு திறமையாகச் சமாளித்துக்கொண்டு ஓட்டுகிறுள்" என்று சொல்லி, கரீம் தன் காரின் வேகத்தைக் குறைத்து, ஒரு புறமாய் ஒதுக்கி ஓட்டவும், பச்சைக் கார் சிவப்புக் காரைக் கடந்து சென்றது. இப் பொழுது பச்சைக் கார் முன்னுகவும் கறுப்புக் கார் பின்னுகவு மிருக்கச் சிவப்புக் கார் ஓடியது. முக்கால் மணி நேரம் இப்படிச் சென்றதும், பீமாபுரிச் சாலையில் சிவப்புக் காரின் டயர் படாரென்று வெடிக்க, கார் நின்று விட்டது. அதே சமயம் கறுப்புக் கார் சிவப்புக் காரைத் தாண்டிப் பச்சைக் காரைத் தொடர்ந்து சென்றது. பச்சைக் கார் அந்தச் சாலையில் வலது புறமாகத் திரும்பவே, கறுப்புக் காரும் அதைத் துரத்தினபடியே மறைந்துவிட்டது.

அண்ணுஜிராயருக்கு ரொம்ப விசனம், மோட்டார்ப் பந்தய ஓட்டத்தில் தோற்றுவிட்டதைப் பற்றி. கொட்டும் மழையில் 'ஸ்டெப்னி' சக்கரங்களை மாட்ட முயன்று கொண்டிருந்த கரீமுக்கு உதவி புரிந்த ராயரும் தெப்பக் கட்டையாக நனைந்துவிட்டார். சிவப்புக் கார் திரும்பப் புறப்பட ஒரு மணி நேரமாயிற்று. சிவப்புக் கார் திரும்பவும் அந்தப் பச்சைக் காரையும் கறுப்புக் காரையும் கண்டுபிடிக்காமல் ராயர்பட்டிக்குப் போய்ச் சேர்ந்தபோது இரவு மணி ஏழடித்துவிட்டது.

கரீம் காரை ஒரு ஹோட்டலின் பக்கத்தில் நிறுத்தி ஞன். சாப்பாட்டை முடித்துக்கொண்டு ராயர் திரும்பி வந்த போது கரீம் காரைத் துடைத்துக் கொண்டிருந் தான். ராயர், "கரீம், நாம் புறப்பட ரொம்ப நேரம் இருக் கிறது. நீ சாப்பிட்டுவிட்டு வந்து துடைக்கலாம். நான் ஊரைச் சுற்றிப் பார்த்து வருகிறேன்" என்ருர். கரீமும், "நல்லது எசமான்!" என்று சொல்லிச் சாப்பிடப் போய் விட்டான்.

ராயர் அண்ணுஜி, ராயர்பட்டியில் அங்கு மிங்கும் திரிந்து தபாலாபீசுக்குள் நுழைந்தார். தம்மைத் தபால் மாஸ்டரிடம் அறிமுகம் செய்துகொண்டார். இருவரும் பல விஷயங்களைப் பற்றிப் பேசத் தொடங்கினுர்கள். அப்பொழுது தபால் மாஸ்டர், "அண்ணுஜி ராவ்! இன்றைக்கு மாலையில் ஒரு ஆசாமி வந்து ஒரு விநோத மான தந்தி எழுதிக்கொடுத்துப் போனுன், அர்ஜெண் டாக அனுப்புகிறதற்காக" என்ருர்.

"அதென்ன அதிசயத் தந்தி?" என்ருர் ராயர்.

"பாருங்கள்!" என்றார் தபால் மாஸ்டர். ராயரும் அந்தத் தந்தியைப் படித்துப் பார்த்தார்.

"நிரஞ்சன் என்னும் சரத் சந்திரன் கொலை செய்து விட்டு ஓடும்போது, அவனுடைய கூட்டாளிகளுக்கும் அவனுக்கும் மனவேற்றுமை ஏற்பட அவர்கள் அவனைக் கொன்றுவிட்டார்கள். பகவன்தாஸ்" என்று படித்தார் ராயர்.

அந்தத் தந்தி விஷயமாகவே இருவரும் சற்று நேரம் பேசிக்கொண்டிருந்தனர். சம்பாஷணை வேறு முகமாகக் கிளைவிட்டது. முடிவிலே ராயர், "ஸார்! முக்கியமான ஒரு விஷயம் மறந்துட்டேன். ஒரு அவஸரத் தந்தி, இப்போதே அடித்துவிடவேணும்" என்று ஒரு தந்தி - பாரத்தில் செய்தியை எழுதித் தபால் மாஸ்டரிடம் கொடுத்தார். அதற்குரிய கட்டணமும் கொடுத்தார். பிறகு அவ்விடம் விட்டகன்றார் ராயர்.

## 11. சந்யாசிக்கு வந்த கேடு

ராயர் பட்டியில் 'டாகுர் டாங்க்' என்னும் மாளிகை ஊர்-எல்லையில் இருந்தது. இரவு ஒன்பது மணியிருக்கும். சங்யாசி ஒருவர் தாடியும் சடையுமாக அந்தப் பங்களா வாசலிலே தோன்றினார். வாசலில் இருந்த கார் ட்ரைவர் "யார் அது?" என்றான்.

சங்யாசி, "அப்பனே! நான் ஒரு பரதேசி, துறவி. விட்டு எஜமான்களிடம் சொல்லிப் பசிக்கு ஏதாவது கொஞ்சம், படுக்க ஒரு திண்ணை, கேட்டு வாங்கிக் கொடப்பனே!" என்றார். ட்ரைவர் கோபத்தோடு, "போ, போ. தண்டச் சோற்றுத் தடிராமா! போ, போ" என்று அதட்டினான். அதே சமயத்தில் அந்த மாளிகையிலிருந்து நிஜாரும் ஷர்ட்டும் அணிந்த ஒருவர் வெளியே வந்தார். "யார் ஐயா, நீர்? ஊருக்குள்ளே போய் எங்கே யாவது யாசகம் பண்ணலாகாதா?" என்றார் கடுகடுப்போடு.

"ஐயா! நெடுந்தூரம் நடந்து வந்தேன். கால் கடுக்கிறது. இஞ்சித்து உபயம் பண்ணவேணும்" என்று மிக்வும் தினசுரத்திலே கேட்டார் சங்யாசி.

'அருண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்' என்றபடி யாரோ மாறுவேஷத்தோடு வந்திருக்கிறான் என்ற சந்தேகம் குபீர் என்று எழுந்தது,

மாளிகையிலிருந்து வெளியே வந்தவர் நெஞ்சத்திலே. "உள்ளே வாரும், நீர் யார் என்று பார்க்கட்டும்" என்றார். சந்யாசி உள்ளே சென்றார். மாளிகையிலிருந்து வந்த அந்த நெட்டையான ஆசாமி, உள்ளேயிருந்த குட்டையான ஆளுடன் சந்யாசியை ஏற இறங்கப் பார்த்தார். "இரும், வருகிறோம்" என்று சொல்லி இருவரும் பங்களாவின் பின் கட்டுக்குச் சென்று சற்று நேரம் முணு முணு என்று பேசிக்கொண்டிருந்தார்கள். முடிவிலே திரும்பி வந்ததும், "பெரியவரே! தங்களுடைய பூஜ்யத்வத்திற்கு ஏற்ற விதமாக உபசரிக்கக்கூடிய நிலைமையில் நாங்கள் இல்லை. நாங்கள் பிரயாணிகள். எங்கள் நண்பர் வீடு இது. அவருடைய குடும்பத்தார் இங்கே இல்லை. நாங்கள் இன்று இரவு மட்டும் இங்கே தங்க உத்தேசித்திருக்கிறோம். நாங்கள் சாப்பிட்டு மிஞ்சினது ஏதோ இருப்பது அற்ப சொற்பந் தான், தருகிறோம், சாப்பிடும்" என்று உபசரித்தார் குட்டையாக இருந்தவர். பின்பு சந்யாசி சாப்பிட்டு முடிந்ததும் நெட்டையான ஆள், "பெரியவரே இப்படி வாரும். அதோ தெரிகிறதே அந்த மலை என்ன? அதிலே தெரிகிறதே அது என்ன க்ஷேத்திரம்?" என்று சன்னல் வழியாக அந்தக் காடாந்தகாரத்தில் கருங் குவியலாகத் தோன்றிய ஒரு குன்றின் மீதிருந்த வெள்ளைக் கட்டடம் ஒன்றைச் சுட்டிக் காட்டிக் கேட்டார். சந்யாசியும் சன்னலுக்குக் கிட்டச் சென்று அந்த மலையையும் கட்டடத்தையும் பார்த்தார். "அப்பனே! நான் இந்த இடத்துக்கே புதிசு, தெரியலையே" என்றார்.

இந்தச் சம்பாஷணை நிகழும்போது, குட்டையான மனிதர் மூன்று வெள்ளி டம்ளர்களில் பாலூற்றி ஒரு டம்ளரில் மட்டும் ஒரு சிறு புட்டியிலிருந்து ஏதோ ஒரு திராவகத்தை ஊற்றினார் சன்னியாசிக்குத் தெரியாமல். நெடியவரும் சன்னியாசியும் ஆசனங்களில் வந்து அமர்ந்ததும், குறளையர் பாலூற்றிய டம்ளர்களில் ஒன்றைச் சந்யாசியிடமும், மற்றொன்றை நெடியவரிடமும் கொடுத்தனர். ஒரு டம்ளரில் இருந்த பாலைத் தாமே அருந்தினார். சந்யாசி பாலைக் கையில் வைத்துக்கொண்டிருந்தபடியே நெடியவரிடம் தம்முடைய தீர்த்த யாத்திரைகளைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார். முடிவில், எழுந்து "நாளைக்கு அந்த க்ஷேத்திரத்தையும் தரிசனம் பண்ணிவிட வேண்டும்" என்று சொல்லிக்கொண்டே, சன்னலுக்குக் கிட்ட நின்றுகொண்டு, "முருகா! முருகா!"

என்றார். பாலே அங்கே நின்றபடியே அருந்திவிட்டதும் திரும்பி வந்து டம்ளரை மேஜைமேல் வைத்தார். சில நிமிஷங்கள் பேசிக்கொண்டிருந்தவர், "அப்பா, ஏதோ மயக்கமாக இருக்கிறது, நெஞ்சு அடைக்கிறது!" என்று தட்டுத் தடுமாறிச் சொல்லிக்கொண்டே இருந்த ஆஸனத்தில் சாய்ந்துவிட்டார்.

அந்நிலையைக் கண்ட நெடியவ்ரும் குறளையரும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்ட பின், நெடியவர் சந்யாசியின் அருகில் சென்று தம்மேல் அவரைத் தாங்கிப் பிடித்துக்கொண்டு, "அடடா, என் இப்படி? வயதானவர்களாக இருக்கிறீர்கள். திடீரென்று மயக்கம் வரக் காரணம்?" என்று பரிவுடன் விசாரித்தார். "ஒருவேளை பிரயாணத்தின் காரணமாய்ப் பித்தம் அதிகரித்து மயக்கத்தை உண்டுபண்ணி யிருக்கலாம்" என்றார் குறளையர்.

அச்சமயம் சந்யாசி, "ஆம், ரொம்ப மயக்கமாக இருக்கிறது" என்று குழறினார்.

நெடியவரும் குறளையரும் சந்யாசியைக் கைத் தாங்கலாக அவ்வறையை விட்டு நடத்திச்சென்று, ஒரு நீண்ட தாழ்வாரத்தின் வழியே சென்று அதன் கோடியிலுள்ள ஓர் அறைக்குள் நுழைந்து அவ்வறையின் மத்தியில் போடப்பட்டிருந்த ஒரு கயிற்றுக் கட்டிலில் தயாராக விரித்திருந்த படுக்கையில் சந்யாசியைப் படுக்கச் செய்தார்கள். "தாங்கள் சிறிது நேரம் கண்களை மூடிப் படுத் திருங்கள்; கொஞ்ச நேரத்தில் உடல் நிலைமை குணப் பட்டு விடும்" என்று கூறினர் நெடியவர். சன்னியாசி கண்களைப் பாதி மூடியபடியே "உம்" என்றார். மற்ற இருவரும் அவ்வறையை விட்டு வெளியில் வந்து நின்று கொண்டனர்.

பிறகு நெடியவர் தமது கைக்கடிகாரத்தைப் பார்த்து விட்டு, "உம், மருந்து உட்சென்று சரியாய் அரை மணி நேரமாகிவிட்டது. இப்பொழுது ஆசாமி பூரணமாய் மயக்கத்தில் ஆழ்ந்திருப்பான். யாராயிருந்தால் என்ன? அவன் நமது ஏற்பாடுகளுக்கு இடையூறாக இருக்கலாகாது. முன் ஜாக்கிரதைகளைச் செய்துவிடு" என்றார்.

அதற்குக் குறளையர், "ஆம், நானும் அதையேதான் யோசித்துக் கொண்டிருந்தேன். எனது படுக்க-அறையில் வேண்டிய கயிறுகள் இருக்கின்றன. அதில் கொஞ்சம் எடுத்து வருகிறேன்" என்று கூறி, அவ்

விடத்தி னின்றும் சென்று, இரண்டு நிமிஷத்திற்கெல்லாம் திரும்பி வந்தார்.

பிறகு இருவருமாகப் பிரக்ஞையற்றுப் படுக்கையில் கிடந்த சந்யாசியிடம் சென்றனர். பகவன்தாஸ் கயிற்ருல் சந்யாசியைக் கட்டிலுடன் இப்புறம் அப்புறம் அசைய முடியாதபடி காலிலிருந்து கழுத்துமட்டும் வரிந்து கட்டிவிட்டார்.

குறளர் :—எப்படியாளுலும் ஆகட்டும். பெரியவர் தூங்கட்டும். நாம் நமது வேலைகளை முடிக்க ஆயத்தப் படவேண்டும்.

நெடியவர் :—ஆம், நமது அதிர்ஷ்டம் இதுவரையில் நல்லபடியாகவே யிருந்து வருகிறது. நமது வேலைகளில் இதுவரையில் ஒரு தடங்கலும் இல்லை. இனி மற்றக் கால் வாசியான முக்கிய வேலைகளும் ஒரு தடங்கலுமின்றி நிறைவேறி விடும்.

பிறகு இருவரும் சந்யாசியைக் கட்டிப் போட்டிருந்த அறையை விட்டு வெளியில் வந்து, அவ்வறையின் கதவை நன்ருய்த் தாளிட்டுப் பூட்டியபின், குறளர் சாவியைப் பத்திரப்படுத்திக் கொண்டு அவ்விடத்திலிருந்து சென்ருர்.

## 12. சாந்தியின் அபாய நிலை

அமிர்தாவும் நிரஞ்சனும் காணுமல் போன தினத்தன்று இரவு பதினெரு மணி வரையில் மோகன் மாளிகையில் விளக்குகள் பிரகாசித்துக் கொண்டிருந்தன.

அருணு ஆபத்தாலும் துயரத்தாலும் நித்திரை பசி எதுவுமே அறியாதவளாய் கீழ் ஹாலில் உட்கார்ந்து சுமதி அம்மாளுடனும், சாந்தி, சாம்பு, வல்லி, பானு முதலியவர்களுடனும் பொது விஷயங்களைப் பற்றியும், சினிமா விஷயங்களைப் பற்றியும் பேசிக்கொண்டிருந்தாள். அவளது பேச்சு ஓயாததைக் கண்ட சுமதி அம்மாள், “ எனக்கு நித்திரை வருகிறது, மணியும் பதிஞென்று அடித்துவிட்டது. போய்ப் படுத்துக் கொள்ளுங்கள்” என்ருள். அருணு அதற்கு மேலும் பேசிக்கொண்டிருப்பது மரியாதையன்று என்று நினைத்து வேறு வழியின்றி அரை மனசுடன் படுக்கச் சென்ருள்.

நித்திராதேவி ஒரே முரண்டாக நின்றுவிட்டாள் அருணாவின் கிட்டக்கூட வராமல்!

அருணா ஒரு மணி நேரந்தான் நித்திரை செய்திருப்பாள். அதற்குள்ளாக அவள் ஏதோ கனாக் கண்ட பயத்தால் உடல் வேர்த்துவிட, சட்டென எழுந்து படுக்கையிலே உட்கார்ந்தாள். அதே சமயம் அவளுக்குத் தைரியம் உண்டாக்குவது போல் கடிகாரம் அரை மணியைக் குறிப்பிட 'டிங் டிங்!' என்று மணியடித்தது.

அருணாவுக்கு அப்பொழுது அடித்த மணி இரண்டரையா அல்லது மூன்றரையா என்ற சந்தேகம் தோன்றவே, உடனே எழுந்து ஸ்விச்சைப் போட்டுவிட்டு, விருவிருவென்று சுமதி அம்மாள் படுத்திருக்கும் இடம் சென்று விளக்கைப் போட்டுப் பார்த்தாள். அவள் நிதானமாக நித்திரை செய்வதைக் கண்டு அந்த அம்மாளை எழுப்பவில்லை. ஆனால் விளக்கை அணைக்காமலே அந்த அறையை விட்டு மாடியிலிருந்து கீழே இறங்கி வந்து, ஹாலின் விளக்கைப் போட்டுச் சாம்பு நித்திரை செய்வதைப் பார்த்து விட்டு, சாந்தி படுத்திருந்த இடத்தை அடைந்து, அங்குள்ள விளக்கைப் போட்டுவிட்டு, அமைதியாக மல்லாந்து படுத்திருக்கும் சாந்தியிடம் சென்று குனிந்து, "சாந்தி! சாந்தி!" என்று கூப்பிட்டாள்.

சாந்தி, அருணாவின் கூப்பிடுதலுக்குச் சற்றும் அசையவில்லை. அருணா சாந்தியின் பக்கத்தில் மண்டியிட்டு உட்கார்ந்து, சாந்தியின் நெற்றியையும், பிறகு தோள்பட்டையையும் தொட்டுக் குலுக்கியும், நன்றாய் அசைத்தும் கூப்பிட்டுப் பார்த்தாள். சாந்தி விழித்துக் கொள்ளவில்லை. அதோடு, அவளுக்கு உணர்வு இருப்பதாகவே தோன்றவில்லை. மேலும் சாந்தியின் உடம்பில் பொதுவாய் இருக்க வேண்டிய சூடு குறைந்து குளிர்ந்திருப்பது போலவும் தோன்றியது. ஏற்கெனவே திகில் பட்டிருந்த உள்ளம் எப்படி இருந்திருக்கும்?

அருணாவின் மனம் படபடவென அடித்தது. "சாந்தி! சாந்தி!! சாந்தி!!! சாந்தி!!!!" என்று அவளை உலுக்கிக் கூப்பிட்டுப் பார்த்தாள். ஆனால் அவ்வளவுக்கும் கூடச் சாந்தி உணர்வு பெற்றவளாகத் தெரியவில்லை.

அருணு எழுந்து முன் ஹாலுக்கு ஓடிவந்து, "சாம்பு! சாம்பு !! எழுந்திரு ; எழுந்திருந்து சுருக்க நமது சாந்தியைப் பாரேன்" என்று பரபரப்புடன் கூவிஞள்.

அருணு போட்ட சத்தத்திஞல் திடுக்கிட்டு எழுந்த சாம்பு உளறியடித்து, "என்ன ?" என்று பரக்கப் பரக்க விழித்தான்.

அருணு கைகளேப் பிசைந்தபடி, "ஐயோ ! வந்து சாந்தியைப் பாரேன்" என்று சொல்லிச் சாந்தி இருந்த இடத்தை நோக்கிச் சென்ருள்.

விஷயம் புரியாமல் சாம்பு அருணுவைத் தொடர்ந்து சாந்தி படுத்திருக்கும் இடத்தை யடைந்தான். சாந்தி படுத்திருக்கும் நிலேயைக் கண்டு திடுக்கிட்டான். சாந்தியைத் தொட்டுப் பார்த்து, "ஆம், மூச்சு இருக்கிறது. ஆனல்,......ஐயோ உடம்பு 'ஜில்'லென்று உணர்வற்றுக் கிடக்கிருளே, என்ன இது ? புரியவில்லேயே !" என்று கலங்கிஞன்.

உடனே அருணு வெகு அவசரமாய் டெலிபோன் இருக்கும் அறைக்கு ஓடி டாக்டர் பாண்டேக்கு டெலிபோன் பண்ணிஞள்.

அருணு ரிஸீவரை மாட்டிவிட்டு வெளியில் வந்து, "சாம்பு! பானு, வல்லி எல்லோரையும் எழுப்பு. மாளிகையின் முன் கேட்டைத் திறந்துவிடு ! பத்து நிமிஷத்தில் டாக்டர் வந்துவிடுவர். உம், போ !" என்ருள்.

சாம்பு ஓடிப்போய் பானுவையும் வல்லியையும் அழைத்து வந்தான். பானுவும் வல்லியும் சாந்தி பிணம் போல் கிடப்பதைக் கண்டு கல்லாய் ஸ்தம்பித்து நின்றனர். சற்று நேரத்திற்கெல்லாம் டாக்டர் பாண்டே வந்து சேர்ந்தார்.

டாக்டர் சாந்தியின் நாடியைப் பரீக்ஷித்து, ஹிருதயம் முதுகு முதலியவைகளேயும் ஸ்டெதஸ்கோப் மூலம் பரீக்ஷித்து, பின் அருணுவை நோக்கி, "இந்த அம்மாளுக்கு யாராயினும் மயக்க மருந்து கொடுத்திருக்கக் கூடுமோ ?" என்று கேட்டார்.

அருணு :—இங்கு யாரும் அவளுக்கு மயக்க மருந்து கொடுக்கவில்லே என்றுதான் சொல்லுவேன். ஏனெனில் அந்த மாதிரிச் சந்தர்ப்பமோ, மனிதர்களோ இங்கு இல்லே. இரவு பதிஞேரு மணி வரையில் பேசிக்கொண்டிருந்து, பிறகு நல்ல நிலேயில்தான் சாந்தி படுக்கச் சென்ருள்.

நான் படுக்கச் சென்று நித்திரை வராமல் விழித்திருந்து, பிறகு ஒரு மணி நேரம் நித்திரை செய்ததும், கனுக் கண்டு பயந்து, சுமதியம்மாளின் நித்திரையைக் கலைக்க மனமின்றி, கீழே வந்து சாந்தியை எழுப்ப முயன்றேன். அவள் உணர்வற்றிருப்பது கண்டதும் உடனே போன் செய்தேன்.

டாக்டர் :—சுமதி அம்மாள் எங்கே? அவர்களுக் காயினும் இந்த அம்மாள் மூர்ச்சையற்றுக் கிடப்பதன் காரணம் தெரிந்திருக்கலாமோ!

அருணு உடனே மாடிக்கு ஓடிச் சுமதி அம்மாளை எழுப்பி விஷயத்தைச் சுருக்கமாய்த் தெரியப்படுத்தி அழைத்துவந்தாள். அவள் அருணு சொல்லியவற்றை முழுதும் கேட்டபின், "இதென்ன? இந்த மாளிகையில் திடீர் திடீர் என்று மாயத்திற்கு மேல் மாயமாய் நடந்து வருகிறதே! உம், திடீரென்று சாந்திக்குக்கூட ஏதோ வந்துவிட்டது. நாளைக்கு யாரைப் பிடிக்கப் போகிறதோ?" என்று கட்டைத் தொண்டையில் சற்று உரக்கவே கோபமும் வெறுப்பும் கலந்தபடி கூறிக்கொண்டே வந்தவள், சாந்தி கிடப்பதையும் டாக்டர் பாண்டே ஆலோசனையுடன் அவ்விடத்தில் குடிப்பதற்காக நீர் வைத்திருந்த தண்ணீர் லோடாவை மோர்ந்து பார்த்துக் கொண்டிருந்ததையும் கண்டு, முன்தானையை இழுத்துப் போர்த்துக் கொண்டு, "என்ன விஷயம்? சாந்திக்குப் பிரக்ஞை இல்லையாமே? அவள் பிழைத்துக் கொள் வாளா? என்ன, சொல்லுங்களேன்" என்ருள்.

டாக்டர், சுமதி அம்மாளின் கேள்விக்குப் பதில் அளிக்காமல், "இவள் இரவில் தூக்கத்திற்காக ஏதாவது மருந்து சாப்பிடுவதுண்டோ?" என்று கேட்டார்.

சாம்பு :—இல்லை, இல்லை. அவள் மயக்க மருந்து இல்லாமலேயே நன்ருய்த் தூங்கிவிடுவாளே. அவள் தூக்கத்திற்காகவோ, அல்லது தூக்கத்தைக் குறைப் பதற்காகவோ மருந்து சாப்பிடுவதே கிடையாது.

சுமதி அம்மாள் :—'ஆமாம், அவளுக்கு மருந்து என் ருலே பிடிக்காது. எங்களுக்குத் தெரியாமல் மருந்தே சாப்பிடமாட்டாள்.

டாக்டர் அவர்கள் சொல்லியதை நம்பாதவர்போல் காணப்பட்டதுடன், தமது கைப் பெட்டியிலிருந்து

ஏதேதோ சில மருந்துகளை எடுத்துக் கலந்து சாந்திக்கு ஒரு இன்ஜெக்ஷன் கொடுத்துவிட்டு, சாந்தியின் கை கால்களுக்கெல்லாம் பிராந்தி தேய்க்கும்படி கூறினர்.

அரை மணிக்குப் பிறகு சாந்தியின் உடம்பில் சாதாரணச் சூடும் நாடித் துடிப்பும் இயற்கையாக இருக்க வேண்டியபடி வந்ததை டாக்டர் பாண்டே அறிந்து, "அரை மணிக்கொருமுறை இந்த மருந்தைக் கொடுங்கள். சாந்திக்குக் காலை எட்டு மணி சுமாருக்குப் பிரக்ஞை ஏற்படலாம்'' என்றார். "அவள் இரவில் தூக்கத்திற்காகச் சாப்பிடும் ஒரு திராவகத்தை அளவுக்கதிகமாய்த் தானாகவோ அல்லது தெரியாமலோ உட்கொண்டிருக்கிறாள் என்பது நிச்சயம். அவளைக் காலை ஆறு மணி வரையில் கவனியாமல் விட்டிருந்தால் கட்டாயம் இறந்திருப்பாள். இனிமேல் அவள் பிழைப்பது நிச்சயம். மறுபடியும் காலை பத்து மணி சுமாருக்கு வந்து பார்க்கிறேன்'' என்று கூறி விடைபெற்றுச் சென்றார்.

டாக்டர் பாண்டே தெரிவித்த விஷயம் அருணா, சுமதி அம்மாள், சாம்பு, பாஷி, வல்லீ எல்லோருக்கும் பெருத்த ஆச்சரியத்தை உண்டுபண்ணி விட்டது. சாந்தி ஒருவருக்கும் தெரியாமல் அந்த மருந்தைக் குடித்திருப்பாளா? ஏன் குடித்தாள்? அந்த மருந்து எங்கிருந்து வந்தது? இப்படியெல்லாம் பல கேள்விகள் அடுக்கடுக்காய்த் தோன்றின.

சுமதி அம்மாள் அருணாவைப் பார்த்து, "அருணா! நீ ஏன் ஒன்றுமே பேசவில்லை? உனக்கு விபரீதமான சைத்தான் - போக்கும், ஏவலின் பயங்கரத் தன்மையும் எப்படித் தெரியும்? நடந்துவரும் விவகாரங்களால் ஏற்கெனவே திகிற்பட்டுக் கிடக்கும் உன் மனம் இப்பொழுது ஒன்றுமே புரியாமல் குழம்பிக் கிடக்கும். அவ்வளவுதான். இல்லையா?............புண்ணியம்தான், சாந்தி பிழைத்தது!'' என்றாள்.

அருணா "ஆம், உண்மையில் எனக்கு ஒன்றுமே புரியவில்லை'' என்று கூறினாள். மறுக்ஷணம் மனத்தில், "சாந்தி சாகக் கிடந்து பிழைக்கிறாள். ஆனால் இந்நேரம் என் அமிர்தா எக்கதியாயினளோ?'' என்று நினைக்கவும் அவளது கண்களில் நீர் துளித்தது.

டாக்டர் பாண்டே சொல்லியிருந்தபடியே சாந்தி காலை ஏழு மணிக்கு ஒரு புறமாகச் சாய்ந்து படுத்தாள். எட்டு மணிக்கெல்லாம் கண்களைத் திறந்து பார்த்தாள்.

அவள் அருகில் கவலையோடிருந்த அருணா, "சாந்தி என்ன வேண்டும்? என்னைத் தெரிகிறதா?" என்று கேட்டாள்.

சாந்தி சற்று நிதானித்த பின், "அப்பா, தலை கனக்கிறதே!" என்றாள்.

அருணா :— ஆம், உனக்கு உடம்பு சரியாயில்லை. அதனால் நீ சிறிது நேரம் நிம்மதியாய் நித்திரை செய். அதன் பிறகு எல்லாம் சொல்லுகிறேன்.

சாந்தி கண்களை மூடிக்கொண்டாள். சற்று நேரத்திற்குள் வாந்தி செய்தாள். பின்பு களைத்து நித்திரை போய்விட்டாள். திரும்பவும் சாந்தி கண்ணைத் திறந்து பார்த்த பின்புதான் அருணாவுக்கு மன நிம்மதி ஏற்பட்டது.

மோகன் மாளிகையின் கடிகாரம் பத்தடித்ததும், மாளிகையின் வாசலில் கார் வந்து நிற்க, டாக்டர் பாண்டேயும் அவரைத் தொடர்ந்து டெபுடியும் இறங்கி மாளிகையினுள் வருவதை மாடியிலிருந்த சுமதி அம்மாளும் அருணாவும் கவனித்தனர்.

டெபுடியின் முகத்தில் கோபமும் துயரமும் வெறுப்பும் காணப்பட்டதைக் கண்ட அருணா அவர் கேட்டதற்கு முதலில் பதில் ஒன்றும் சொல்லாமல் பதுமைபோல் அசைவற்று நின்றுவிட்டாள். டெபுடி சுமதி அம்மாளிடம் விசாரிக்க அந்த அம்மாள், அருணா தன்னை வந்து எழுப்பியதிலிருந்து நடந்த விஷயங்களைக் கூறினார். அருணாவும் தான் கனவு கண்டு எழுந்ததிலிருந்து விவரமாய்க் கூறினாள். டாக்டர் பாண்டே சாந்தியைக் கவனித்தார், உணர்வுடன் இருந்தாள்.

டாக்டர்:—அம்மா! நேற்று இரவு நீ எதற்காக மருந்து சாப்பிட்டாய்?

சாந்தி :—மருந்தா? நான் எந்த மருந்தும் சாப்பிடவில்லையே!

டாக்டர் :—சரி, மருந்து சாப்பிடாவிட்டால் இதோ இந்த லோட்டாவிலிருந்து படுக்குமுன் தண்ணீர் சாப்பிட்டதுண்டா?

சாந்தி :—ஆம், நான் படுக்க வந்த சிறிது நேரத்திற்கெல்லாம் தாகமா யிருந்தபடியால் வழக்கம்போல் தண்

னீரைக் குடித்துவிட்டுப் படுத்துக்கொண்டேன். அதில் கொஞ்சம் தண்ணீர் மிச்சம்கூட வைத்திருந்தேனே.

டாக்டர் :—ஆம், கொஞ்சம் மிஞ்சி யிருந்த நீரைப் பார்த்துத்தான் அதில் விஷத் திராவகம் கலந்திருந்ததை அறிந்தேன். உன்னைக் காப்பாற்ற முடிந்தது.

சாந்தி :—என்ன? விஷமா? அதில் எப்படி வந்தது?

டெபுடி :—அதைத்தான் நீ யோசித்துச் சொல்ல வேண்டும்.

சாந்தி :—அதில் எந்தத் திராவகமும் இருக்க முகாந்தரமில்லையே.

டெபுடி :—நேற்று இங்கே புது மனிதர் யாராகிலும் வந்து பேசிக்கொண் டிருந்ததுண்டா?

சாந்தி :—இல்லை, புதிதாக ஒருவரும் வரவில்லை.

அருணு :—ஒருவரும் புதிதாக வரவில்லை. தினம் வந்து போகிற ஏழு மணி சுமாருக்கு, பகவான்தாஸின் மகள் வந்து பேசிக்கொண்டிருந்தாள். பிறகு ஒன்பது மணி சுமாருக்கு பகவான்தாஸின் குமாரர் சுந்தரதாஸ் வந்து ஒரு மணி நேரம் இங்கே இருந்துவிட்டுச் சென்றார்.

டெபுடி :—ஒன்பது மணிக்கு வந்து சென்ற பகவான்தாஸ் குமாரர் யாருடன் பேசிக்கொண்டிருந்தார்?

சுமதி :—அவன் என்னுடன் பேசிக்கொண்டிருந்தான். பிறகு அருணுவிடம் கொஞ்ச நேரம் பேசிக்கொண்டிருந்தான். வீட்டுக்குச் செல்லுமுன் அஞ்சு நிமிஷம் சாந்தியுடன் பேசிக்கொண்டிருந்தான். சாந்தி பின்கட்டிற்குச் சென்றிருந்தாள். சுந்தரதாஸ் "சாந்தி எங்கே?" என்று கேட்டுப் பின் கட்டிற்குச் சென்று திரும்பிவருகையில் சாந்தியுடன்தான் வந்தான்.

டெபுடி :—மற்றப்படி வேறெவரும் வரவில்லையா?

சுமதி :—இல்லை; காலையில் யார் யாரோ வந்து துக்கம் விசாரித்து விட்டுச் சென்றனர். மாலையில் எவருமே வரவில்லை.

டெபுடி :—(சாந்தியைப் பார்த்து) உன்னுடன் சுந்தரதாஸ் பேசிக்கொண்டிருந்தானு? என்ன பேசிக்கொண்டிருந்தான்?

சாந்தி :—(சற்றுப் படபடப்பாக) நான் அவருடன் பின்கட்டிலிருந்து வருகையில் பேசிக்கொண்டிருந்தேன். அவருடன் ஒரு நிமிஷம் அல்லது இரண்டு நிமிஷம்தான் பேசிக் கொண்டிருந்தேன். நீங்கள் அவர் மேல் ஏன் வீணைச் சந்தேகம் கொள்ள வேண்டும்? அவருக்கும் எனக்கும் ஒரு சம்பந்தமும் கிடையாது. ஏழையாகிய என்னைப் பணக்காரரான அவர் எதுக்குக் கொல்ல நினைக்கப் போகிறார்?

(அச்சமயம் மோகன் மாளிகைக்குச் சுந்தரதாஸ் வந்து சேரவும், அவன் அவ்விடம் டெபுடியும் டாக்டரும் இருப்பதைக் கண்டு அவர்களுக்கு வந்தனம் அளித்து விட்டுச் சுமதி அம்மாளை நோக்கி, "டாக்டர் வந்திருக்கிறாரே, யாருக்கு உடம்பு அசௌகரியம்?" என்று பரபரப்புடன் கேட்டான்.

சுமதி அம்மாள், "சாந்தி சாகக் கிடந்து பிழைத்தாள்" எனச் சுந்தர தாஸ், "சாந்தியா? இரவு நான் வந்திருந்தபொழுது நன்றாகப் பேசிக்கொண்டு எப்பொழுதும் போலத்தானே காணப்பட்டாள்?" என்றான்.

"ஆம், இரவு நன்றாகத்தான் இருந்திருப்பாள். ஆனால், யாரோ அவள் குடிக்கும் தண்ணீரில் சாகக் கூடிய அளவில் திராவகத்தைக் கலந்துவிட்டார்கள்" என்று சொல்லிக்கொண்டே டெபுடி அவன் முகத்தைக் கவனித்தார்.

## 13. எத்தனுக்கு எத்தன்

இரவு மணி பன்னிரண்டரை. கரு மேகம் அப்பிக் கிடந்த காரிரவில் ராயர்பட்டி முழுவதும் நித்திரையில் அமுந்தியிருந்தது. எங்கும் ஒரே அமைதி. டாகுர் டாங்குப் பங்களாவில் ஓர் இருட்டறையின் சாளர வழியாக ஓர் உருவம் கீழே இறங்கிற்று. பிறகு அது முன்னும் பின்னும் செவிசாய்த்துக் கேட்டபின் பூனைபோல் சிறிதும் சத்தமின்றி, இருளில் பதுங்கிப் பதுங்கித் தவழ்ந்தபடியே நடந்து சென்று ஒரு சாளரத்தின்கீழ் நின்று உள்ளே மெதுவாய் இருவர் பேசுங் குரலை அறிந்து சற்று நேரம் உற்றுக் கேட்டது. பின்பு தலையை அசைத்து அங்கிருந்து மறுபடியும் திரும்பிச் சென்று, தான் இறங்கிய சாளரத்தையும் தாண்டிப் பங்களாவின் பின்புறம் சென்று, இன்னும் எந்த எந்த அறைகளில் மனித

அரவம் கேட்கிறது என்று ஆராய்ந்து உற்றுக் கேட்டு விட்டு, கிழக்குப் புறமாய் உள்ள மாடி அறையிலிருந்து மங்கலான வெளிச்சம் வருவது கண்டு, அவ்வறையின் எதிரிலுள்ள ஒரு கொய்யா மரத்தில் தொத்தி ஏறி, தன் எதிரில் தெரியும் மாடி அறைக்குள் எட்டிப் பார்த்தது.

உடனே அதன் முகம் ஆச்சரியத்தாலும், சந்தோஷத்தாலும் மலர்ந்தது. பிறகு ஓர் இரண்டு நிமிஷத்திற் கெல்லாம் அவ்வுருவம் மரத்தை விட்டுக் கீழே இறங்கி இருளில் பதுங்கி நடந்து மறைந்துவிட்டது.

அச்சமயம் பங்களாவின் முன் ஹாலில் நின்று கொண்டிருந்த நெடியவர் சற்றுத் தூரத்தில் நின்று கொண்டிருந்த காரோட்டியிடம், "ஆம், நீ அந்தப் பச்சைக் காரில் நமது சாமான்களை ஏற்றிக்கொண்டு எங்கள் காரின் பின்னாலேயே வா, தெரிந்ததா?" என்றார்.

அதற்குக் காரோட்டி "சரி, ஆனால் எனது காரில் இன்னும் யார், யார் வருகிறார்கள்?" என்று கேட்டான்.

நெடியவர் :—இல்லை, ஒருவருமில்லை. முன் காரை உன் எஜமானே ஓட்டுவார். நானும், அந்த இரண்டு பேர்களுமாக அந்தக் காரிலேயே செல்லுவோம். நீ மட்டும் எங்கள் காரைத் தொடர்ந்தபடி பின்னாலேயே வந்துகொண்டிருக்கவேணும். நாங்கள் காரை நிறுத்தினால் நீயும் காரை நிறுத்திக்கொள். நாங்கள் சென்றால் நீயும் தொடர்ந்தே வா, புரிந்ததா?

காரோட்டி :— உம், தெரிந்தது. சரியாய் இரண்டு மணிக்கா புறப்படுவது?

நெடியவர்:—இல்லை, ஒன்று அடித்து நாற்பதாவது நிமிஷம் நாம் புறப்படவேணும்.

இப்படிச் சொல்லிவிட்டு அவர் ஏதோ வேலையாய் அப்பால் செல்லக் காரோட்டியும் தொடர்ந்து சென்றான்.

அதே சமயம் செம்பரத்தைச் செடியின் மறைவில் பதுங்கி யிருந்த உருவமும் சரசரவென்று பங்களாவின் காம்பவுண்டுச் சுவர் ஏறி வெளியே குதித்து மறைந்தது.

ராத்திரியில் கரீமிடம் தம்முடைய சாமான்களையும் திருகு செம்பையும் எடுத்துவரக் கட்டளையிட்டார் அவர். கரீமும் அந்தக் காரிருளில் ராயரைத் தொடர்ந்து சென்றான். அவனுக்கு எங்கே போகிறோம் என்பது கூடத்

தெரியவில்லை. அண்ணாஜி ராவ் வழி நெடுக அவனோடு பேசிக்கொண்டே சென்றார்.

கவனமாய்க் கேட்டுக்கொண்டு வந்த கரீம், "எஜமான் என்றால் எவ்வளவு உஷாராய் நடந்துகொள்ளமுடியுமோ அவ்வளவு உஷாராய் நடந்துகொள்ளுகிறேன். எஜமானுக்குச் சந்தேகம் வேண்டாம்" என்று சொன்னான்.

கறுப்புக் காரின் ட்ரைவர் பங்களாவின் முன்கதவைப் பூட்டிக்கொண்டு வருவதற்காகப் போனான். அதே சமயம் பின்புறமாய் ஓர் உருவம் தோன்றிக் கதவைத் தாளிட்டுக்கொண்டிருந்த ட்ரைவரின் வாயை இறுகப் பொத்தித் திருப்ப, அவன் திடுக்கிட்டுத் திமிறப் பார்க்க, அந்த உருவம் காலால் அவனை இடறி விழும்படி செய்தது. ட்ரைவர் தடாலென்று கீழே விழுந்தான். உடனே அந்த உருவம் அவனை எழுந்திருக்க விடாமல் அவன் மேல் முழங்காலை ஊன்றி கயிறுகளால் அவன் கைகளை உடலுக்குப் பின்புறமாய்ச் சேர்த்துக் கட்டி அவன் கூச்சலிடாதவாறு வாயிலும் துணிப் பந்துகளைத் திணித்தது. காரில் வேறொரு ஆள் புகுந்துகொண்டான். அந்த உருவம் பங்களாவின் கதவைத் திறந்து உள்ளே சென்று, திறந்திருந்த ஜன்னல் வழியாக ஓர் அறைக்குள் உணர்வற்றுக் கிடந்த ட்ரைவரைப் போட்டுவிட்டது. திரும்பி வந்து அந்த ட்ரைவரின் காரில் பின் ஸீட்டில் பதுங்கிக்கொண்டது.

## 14. இருளில் துணிகரம்

இரவு இரண்டு மணிக்கு ராயர்பட்டியிலிருந்து சுமார் முப்பத்தைந்து மைல் நீண்ட பெரிய சாலை வழியாகவே சென்றுகொண்டிருந்த பச்சைக் கார் ஒரு குறுக்குப் பாதை வழியாகச் செல்ல ஆரம்பித்தது.

அப்பொழுது புது ட்ரைவர் "இந்தச் சிறுபாதை வழியாகக் கார் செல்வது என்றால் கொஞ்சம் ஆச்சரியமாகத்தான் இருக்கிறது. இன்னும் இதே பாதையில் ஐந்து, ஆறு மைல் தொடர்ந்து சென்றால் பனங்காடு வருகிறது. அங்கே பாதையை விட்டுச் சிறிது தூரம் சென்றால் சுமார் இரண்டு மைல் தூரத்திற்கு ஒரே இருண்ட காடுதான் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். அந்த இடத்தில் கொலை நடந்தால்கூடக் கேட்பாரில்லை. அந்த இடங்களில் இரவில் எந்த மனிதனும்

செல்லும் வழக்கமில்லை'' என்ருன். பச்சைக் காரில் பின் ஸீட்டில் பதுங்கி யிருந்தவர் சற்றுநேரம் பேசவில்லை. பிறகு, "இந்த இடங்களைப்பற்றி நீ சொல்லித்தான் எனக்குத் தெரியும்" என்ருர்.

கறுப்புக் கார் ட்ரைவர், "நல்ல எண்ணத்துடன் பாடுபடுகிறவர்களுக்குக் கட்டாயம் ஆண்டவன் துணை யிருப்பார் எஜமான்!'' என்ருன்.

"ஆம், கடவுள் துணை......கடவுள் துணை இருந்து தான் ஆகவேணும்'' என்ருர் பின் ஸீட்டில் இருந்தவர்.

மணி இரண்டரை இருக்கலாம். அப்பொது கார் செல்லும் பாதையில் கார் வெளிச்சம் தவிர வேறெந்த வெளிச்சமும் கிடையாது. வான வீதியில் தேய்பிறைச் சந்திரன் தோன்றும் நேரமாயிருந்தாலும் அது கூட்டங் கூட்டமாய் நீருண்ட மேகங்களின் சஞ்சாரத்திஞல் அடிக்கடி மறைந்து விட்டதாலும், பனங் காட்டில் அடர்ந்த மரங்களின் தோற்றத்தாலும், எங்கும் இருளே குவிந்திருந்தது. சுற்றிலும் உற்றுப் பார்த்தால் பயங்கரமான இருட்டில் காணப்படும் மரங்கள் யாவும் பேய் பிசாசுகளின் தோற்றத்தையே அளித்தன.

பயங்கரத்தை உண்டுபண்ணும்படியான அந்த இடத்தைக் கண்டதும் பின் ஸீட் ஆசாமி, ட்ரைவர் கூறியது உண்மையே என்று எண்ணின அதே நேரத்தில் "ட்ரைவர்! முன் கார் நிற்கப் போகிறதென்று நினைக் கிருயா?'' என்று கேட்டார்.

"ஆம், அப்படித்தான் தோன்றுகிறது'' என்ருன் ட்ரைவர். தனது காரையும் நிறுத்திவிட்டான். இரண்டு காருக்கும் இடையே தூரம் சுமார் எண்பது கஜம்.

கார் நின்ற இரண்டொரு நிமிஷத்திற்கெல்லாம் முன் காரினருகில் சுமார் ஏழு, எட்டு மனிதர்கள் நிற்பதைப் பின் காரில் இருந்தவர் கவனித்தார். பிறகு இருவர் ஒரு மனிதனைப் பச்சைக் காருக்குள்ளிருந்து வெளியில் பல வந்தமாக இறக்குவதையும், பிறகு கீழே நின்றுகொண் டிருந்த ஏழு, எட்டு மனிதர்கள் காரிலிருந்து இறக்கப்பட்ட மனிதனைப் பிடித்து இழுத்துக்கொண்டு போவதையும் கண்டார்.

மனிதர்களின் உருவம் தெரியாவிட்டாலும் நடக்கப் போகும் விஷயத்தை நன்ருய் ஊகித்துக்கொண்டு

விட்டார் பின் காரில் இருந்தவர். மனம் பரபரப்பை அடைந்ததோடு அவர் கோபத்தினால் பற்களை நற நறவென்று கடித்து, "ஆம், கட்டாயம் ஏதோ விபரீதம் நடக்கப் போகிறது" என்று மெல்ல உறுமினார். பிறகு தமது கையில் 'பிஸ்டலை'த் தயாராக எடுத்து வைத்துக் கொண்டார். அதில் ஆறு குண்டுகள் கெட்டிக்கப்பட்டிருந்தன. பிறகு தேவையானால் உபயோகிக்க ஒரு டார்ச்சையும் ஜேபியினுள் பத்திரமாக இருக்கிறதா என்று பார்த்துக் கொண்டார். "ட்ரைவர்! சமயம் நேர்ந்தால் அந்த ட்ரைவரைப்போலவே நடிக்க மறந்துவிடாதே; முன் கார் புறப்பட்ட பிறகும் நான் வரவிட்டால் நீ ஏதாவது சூழ்ச்சிசெய்து தங்கியிருந்து என் விஷயத்தை அறிந்துகொள்" என்று கூறிவிட்டு, முன் காரிலிருந்து ஒரு மனிதனைப் பலவந்தமாய்ச் சிலர் இழுத்துக்கொண்டு இருண்டு அடர்ந்த மரங்களிடையில் சென்ற திசையை நோக்கிப் பதுங்கிப் பதுங்கிச் சென்றார். ஏனெனில் தாம் செல்லுவதை முன் காரிலுள்ளவர்கள் அறிந்து கொள்ளக் கூடாதென்பது இவரது எண்ணம்.

இருண்ட இடத்தில் மரங்களிடையே புகுந்து சுமார் நூறு கஜதூரம் சென்றதும், முன்னிலும் மரங்கள் அடர்ந்த தோப்புப்போல் காணப்பட்டது. சற்றுத் தூரத்தில் பலர் ஒருவனைப் பிடிக்க ஓடுவதையும், சற்று நேரத்தில் அவர்கள் அவனைப் பிடித்துவிட்டதையும், எனினும் பிடிபட்டவன் அவ்வளவு பேர்களுக்கிடையில் அகப்பட்டுக் கொண்டிருந்தும் தன்னுயிருக்காக மன்றாடுவதையும், மற்றவர்களைக் கையாலும் காலாலும் பலமாய்த் தாக்கி அவர்களிடமிருந்து தப்பி ஓட முயல்வதையும் உற்று நோக்கித் தெரிந்துகொண்டார் உதவி புரியத் துணிந்து வந்தவர்.

அச்சமயம் எப்படி அந்த மனிதனுக்கு உதவி செய்வதென்று தெரியவில்லை. 'சுட்டாலோ, எவனுக்கு உதவி செய்ய எண்ணினாரோ அந்த மனிதன் மேலேயே குண்டு பட்டால் என்ன செய்வது?' என்று எண்ணினார் ஒரு க்ஷணம். மேலும் எதைப்பற்றியும் அந்தப் பயங்கரமான சந்தர்ப்பத்தில் எண்ணிப் பார்க்க நேரமில்லை. இதற்குள் "உம், குத்து, கொல்லு, கொல்லு, ஒரே வெட்டு, உருளுது பார் தலை! உம்! போடு கழுத்தில்" என்ற பல குரல்கள் ஆங்காரத்துடன் எழவே, உதவி புரிய வந்தவர் தம்மையும் மறந்து புலிபோல் அக் கூட்டத்தின் அருகில் பாய்ந்தார். ஒருவன் முதுகில் ஓங்கி ஒரு குத்து, இன்னுமொரு குத்து,

ஒருவன் விலாவில் ஓர் உதை விழ மூவர் பூமியில் உருண் டனர்.

முன்னால் இருந்தவர்களை ஒவ்வொருவராகக் கழுத் தைப் பிடித்துப் பின்னால் இழுத்துத் தள்ளித் 'தபதப' வென்று நாலைந்து பேர்களை ஒருவர்மேலொருவராய்க் கீழே சாய்த்துவிட்டார்.

கீழே விழுந்தவர்களில் சமாளித்து எழுந்த ஒரு வனைப் பந்துபோல் தூக்கி எறிய முயன்றபோது, அவர் மேல் மற்றவர்கள் பாய வந்தனர். அந்த க்ஷணமே கையி லிருந்தவனைத் தூக்கியெறிந்து விட்டு, இடசாரி வலசாரி யாகப் பாய்ந்து நெருங்கிவரும் ஒவ்வொருவனுக்கும் முகத்தில் ஒவ்வொரு குத்து விட்டு லாகவமாய்க் கீழே தள்ளினார். அதே சமயம் பின்புறம் நெருங்கிய ஒருவன், "அடே உனக்கு இவ்வளவு ஆணவமா?" என்று ஆக்ரோசத்துடன் கூறிக் கையிலிருந்த கத்தி யால் அவரைக் குத்த வந்தான். மறுக்ஷணமே முதுகில் அக்கத்தி ஊடுருவிச் சென்று அவரை எமலோகத்திற்கு அனுப்பியிருக்கும். ஆனால் மேற்படியான் ஆக்ரோசத் துடன் கூறிய சொற்களை கேட்டதுமே சடக்கென்று திரும்பி வலக்கரத்தால் தன்னைக் கொல்லக் காத் திருக்கும் கரத்தை இறுகப் பிடித்து முறுக்கினார். குத்த வந்தவன் திணறினான். ஸ்ரீவத்ஸா இடது கையால் அவன் கையில் பிடித்திருந்த கத்தியைப் பிடுங்கி இமைப் பொழுதில் தம் இடையில் சொருகிக்கொண்டு பிடித்த எதிராளியை விர் என்று தட்டாமாலைபோல் சுற்றி வீசி எறிந்தார். அந்த ஆள் காற்றில் பறந்து அலாக்காய்த் தூரத்தில் சென்று ஒரு மரத்தில் மோதி அடிபட்டு விழுந்தான்.

அச்சமயம் கீழே தள்ளப்பட்ட மற்றவர்கள் சமா ளித்து எழுந்திருக்க முயன்றனர். அப்பொழுது எதிரே ஒருவன் தள்ளாடி எழுந்து நின்றான். அவனால் நிற்க முடியாமல் "ஆ...அமிர்தா!......அம்மா!......" என்னும் சொற்கள் அவன் வாயிலிருந்து மெல்லிய குரலில் வெளிவந்தன.

உடனே காக்க வந்தவர் தள்ளாடும் மனிதனருகில் பாய்ந்து அவனைத் தம் தோளில் சாய்த்துக்கொண்டு, "பயப்படாதே, இதோ நான் உனக்கு நண்பன். இனி அந்தத் துஷ்டர்களை நான் கவனித்துக்கொள்கிறேன்" என்று கூறி, அகதியான அந்த மனிதனைத் தம் இடது

தோளில் சாய்த்துத் தூக்கிக்கொண்டு, தமது வலது கையில் பிஸ்டலை எடுத்துப் பிடித்துக்கொண்டு நாலடி முன் சென்றார்.

இது வரையில் சொன்ன இந்த யுத்த மெல்லாம், அஞ்சு நிமிஷத்திற்குள் நடந்துவிட்டது. அதனால் அந்தத் துஷ்டக் கூட்டத்தினர் பிறனொருவன் புதிதாய் முளைத்து வந்து தங்களைத் தாக்கினதையும் உணராமல், "அடே, நாங்கள் இத்தனை பேர்களாக உன்னை த்வம்ஸம் பண்ணிக் கூடவா உனக்கு இத்தனை மிடுக்கு? ஊம், இதோடே நீ ஒழிஞ்சுபோனே, பார். உன் இரும்புக் கையை வெட்டாமல் விடறதில்லை" என்று உறுமியபடி எழுந்து, நிரஞ்சனைத் தோளில் சார்த்திக்கொண்டு பின்னாலேயே நகர்ந்து சென்றவரை நெருங்கினார்கள். அப்பொழுது அவரைக் கவனித்த ஒருவன், "அடேடே இவன் யாருடா இன்னொருத்தன்?" என்று கூச்சலிட்டான்.

மற்றொருவன்:—"ஆமாண்டா, நம்ம ஆசாமியில்லையே, நம்ம ஆசாமி இவன் மேலே சாய்ந்துண்டு இருக்கிறான் டோய்!" என்றான்.

பல குரல்கள், "ஓஹோ, இந்தப் புதுப் பூச்சியையும் சேர்த்து யமபட்டணம் அனுப்பிடலாம்!" என்று ஆர்ப்பரித்தனர்.

உடனே காக்கவந்தவர், "அடே, நீங்களெல்லாரும் அப்படியே நில்லுங்கள். அதை விட்டு ஒரு அடி முன்னால் வந்தாலும் அத்தனை பேரும் தொலைந்தீர்கள். உம்! நான் சொல்லுகிறேன்! நீங்கள் நெருங்கியா வருகிறீர்கள்?" என்று கர்ஜித்துத் தமது பிஸ்டலை உயர்த்திப் பிடித்து "டப், டப், டப் ஒன்று, இரண்டு, மூன்று" என்று மூன்று பேரைச் சுட்டார்.

உடனே "அப்பாடி! ஐயோ! ஆ!" வென்று மூவர் தரையில் உட்கார்ந்து விட்டனர். துப்பாக்கிக் குண்டுச் சத்தம் வந்ததையும், மூவர் சுடப்பட்டு அலறி உட்கார்ந்ததையும் அறிந்த மற்றவர்கள், "அடேடே யாருடா துப்பாக்கி மனிசன்?" என்றபடி அப்படியே நின்றுவிட்டனர்.

காக்கவந்தவர், "ஆம், நான் உங்களுக்குப் புது மனுஷ்யன் தான். நீங்கள் இனி உங்கள் வாலை ஆட்டாமல் அப்படியே நின்று நான் சொல்வதைக் கேட்டால் உயிருடன் பெண்டாட்டி பிள்ளைகள் முகத்தில் விழிக்கலாம். நீங்கள் நினைக்கலாம், 'நாம் சுமார் பத்துப் பேர்கள் இருக்

கிறோம், இவனை ஒரு நிமிஷத்தில் முடித்துவிடலா'மென்று, ஆனால் துஷ்டர்களாகிய உங்களிடத்தில் நான் ஒருவனாக வந்திருக்க முடியாது என்பதைச் சற்று யோசித்தால் உங்களுக்கே விளங்கும். நான் இப்பொழுது ஒரு விஸில் அடித்தால் பேர்தும், ஐம்பது போலீஸ் ஜவான்கள் அடுத்த சில வினாடிகளுக்குள் உங்களைச் சூழ்ந்து கொண்டு விடுவார்கள். அதனால் வீணில் நீங்களாகவே கஷ்டத்தில் மாட்டிக்கொள்ள நேரிடும். என்ன சொல்லு கிறீர்கள்? நான் சொல்லுகிறபடி நடக்கிறீர்களா, இல்லையா?'' என்றார் அதிகாரத் தொனியுடன். அப்பொழுதும் அவரது கையில் பிஸ்டல் நீட்டியபடியே இருந்தது.

அப்பொழுதுதான் அந்தக் கிராதகர்களுக்கு மனசில் தங்களைத் திடீரென்று எதிர்த்தவன் கொலைசெய்யப் பிடித்து வந்தவனைக் காப்பாற்ற வந்த ஆசாமி என்றும், அவன் சாதாரணப் பேர்வழி யல்ல என்றும் பக்க பலத்துடன் வந்திருப்பது உண்மையாக இருக்கலா மென்றும், இவன் போலீஸ் புலியாக இருக்கலாம் என்றும், தங்கள் அநீதியான செயலைப் போலீஸ் பேர்வழியான அவன் நேரில் கண்டு கொண்டபடியால் தாங்கள் எதிர்ப்பதை விட் அவன் இஷ்டப்படி நடந்தால்தான் தாங்கள் தப்ப முடியுமென்றும் எண்ணினார்கள். ஆகவே அவர்கள் ஒருவருக்கொருவர் கசுமுசுவென்று ஏதோ பேசத் தொடங்கினார்கள். கீழே விழுந்த மூவரைத் தவிரப் பாக்கியுள்ள ஏழு பேர்களும் அப்படியே அசையாது நிற்க, அவர்களில் நல்ல உயரமும் பருமனுமுள்ள ஒருவன், ''சரி, நாங்கள் இப்படியே நிற்கிறோம். நீ இப்பொழுது சொல்லப் போவது என்ன?'' என்றான்.

காக்க வந்தவர் :—ஆ, அப்படி வாருங்கள் வழக்கிற்கு. கூடியவரையில் நீங்கள் யாவரும் புத்திசாலிகள்தான். நீங்கள் யாவருமாய்ச் சேர்ந்து ஒரு மனிதனைக் கொலை செய்யப் பிரயத்தனம் செய்து கொண்டிருந்தீர்கள் அல்லவா?

கூட்டத்தின் தலைவன் :—(முதல் பேசியவன் தைரியமாய்) ஆமாம், ஆனால் அதைத்தான் நீ வந்து கெடுத்து விட்டாயே!

வந்தவர், ''ஆம், கடவுள் ஒருவர் இருப்பதை முழுவதும் மறந்து நீங்கள் அக்கிரமம் புரிய ஆரம்பித்தாலும், கடவுள் நீதியுள்ளவரானபடியால் அவர் அருளால்

நான் சமயத்தில் வந்து சேர்ந்தேன். இல்லாவிட்டால் கட்டாயம் நீங்கள் இதற்குள் இவ்வாலிபனது உயிரைச் சித்திரவதை செய்து வாங்கியிருப்பீர்கள். இப்பொழுதாவது உங்களுடைய அக்கிரமம் ஜயிக்க முடியாதென்பது தெரிந்திருக்கலாம். இருக்கட்டும். உங்களுக்கு இந்த வாலிபன் என்ன தீங்கு செய்தான்?" என்றார்.

"அவன் எங்களுக்குத் தீங்கு ஒன்றும் செய்யவில்லை. அவனை நாங்கள் முன்பின் கூடப் பார்த்தது கிடையாது. நாங்களாக அவனைக் கொலை செய்யவும் எண்ணவில்லை."

"உங்களுக்குத் தீங்கு செய்யாதவனைக் கொல்ல உங்களுக்கு எண்ணமில்லாவிட்டாலும், நீங்கள் பத்துப் பேர்களாகச் சேர்ந்துகொண்டு அவனொருவனைக் கொல்ல முயன்றிருக்கிறீர்கள். அப்படி நேர்ந்ததற்குக் காரணம், உங்களுக்கு யாரோ பண ஆசை காட்டியிருக்கவேண்டும்."

"ஆம், அது உண்மைதான்."

"இவ்வாலிபனைக் கொல்லுவதற்காக எவ்வளவு பணம் பேசியிருக்கிறீர்கள்?"

"ஐந்நூறு ரூபாய்."

"ஐந்நூறு ரூபாயும் பெற்றுவிட்டீர்களா?

"இல்லை, இருநூற்றைம்பது ரூபாய் பெற்றோம். பாக்கி, வேலை தீர்ந்தபின் தருவதாய்ப் பேச்சு."

"உங்களை இந்த வேலைக்குப் பேசியவர் பெயர் என்னவென்று தெரியுமா?"

"இல்லை, பெயர் தெரியாது."

"சரி, ஆனால், அந்தப் பேர்வழி இப்பொழுது ரஸ்தாவில் காரில் வந்திருப்பவர்களில் சற்றுக் குட்டையாய்ப் பருமனாக இருப்பவர்தானே?"

"ஆம், உங்களுக்கு விஷயம் எல்லாமே தெரியும் போலிருக்கு!"

"எனக்கு யாவும் தெரியும். இந்த வாலிபனைக் கொன்றபின் என்ன செய்யவேண்டுமென்று ஏற்பாடு?"

"இவனைக் கொன்றபின் பிணத்தை எடுத்துச் சென்று அவர்களிடம் ஒப்படைத்து விடவேண்டியது."

"அதன் பின் உங்களுக்குச் சேரவேண்டிய பாக்கி இருநூற்றைம்பது ரூபாயும் கொடுத்துவிடுவார்கள்."

"ஆமாங்க, அப்படித்தான் பேச்சு."

"சரி, இப்பொழுது நான் சொல்லப் போவதை நிதானமாய்க் கேள். அதாவது நீ இப்பொழுது உன்னை இவ்வேலைக்கு நியமித்தவரிடம் சென்று, 'வேலை கஷ்டத்தின் மேல் தீர்ந்துவிட்டது! பிணத்தைக் கொண்டு வரலாமா?' என்று கேள். பிறகு 'பிணத்தை எதில் கிடத்துவது?' என்பதை விசாரி. அதற்கவர்கள் அநேகமாய்ப் பின்னுலிருக்கும் காரில் பிணத்தைக் கிடத்தும்படி கூறுவார்கள். அப்புறம் உனக்குச் சேரவேண்டிய பாக்கிப் பணத்தைக் கேள். அதற்கவர் பிணத்தைக் கொண்டுவந்து சேர்த்தபின் தருவதாய்ச் சொல்லுவார். நீ சரியென்று சம்மதித்துத் திரும்பி வந்துவிடு. பின்பு எல்லோருமாய் மூர்ச்சித்திருக்கும் வாலிபனைப் பிணம்போல் தூக்கிக்கொண்டு போய்க் காரில் சேர்த்துவிடுவோம். அதன் பிறகு நீ பாக்கிப் பணத்தைப் பெற்றுக்கொண்டு உனது ஆட்களுடன் திரும்பிச் சென்று விடுவதுபோல் சிறிது தூரம் வந்து, இங்கே காலில் சுடப்பட்டுக் காயம்பட்டுக் கிடப்பவர்களைக் கவனித்துச் சிகிச்சை செய்யும்படி உன் ஆட்களை யெல்லாம் அனுப்பிவிடு. நீ மட்டும் பாதையில் ஒரு மறைவில் மறைந்திரு. நானும் அவ்விடம் எங்கேயாவது மறைந்திருப்பேன். பிறகு நீயும் நானும் பின் காரில், அதாவது 'பிணம்' கிடத்தப்பட்டிருக்கும் காரில் ஏறிக்கொள்வோம். இப்பொழுது நான் சொல்லியபடி செய்வதற்கு ஒப்புக்கொண்டால் நான் உன்னைப் போலீசுக்குக் காட்டிக் கொடுக்காமலிருப்பதுடன், தக்க இனாம்கூடத் தருவேன். என்ன? சம்மதமா? சீக்கிரம் தெரிவி. இல்லாவிட்டால், நான் மற்ற ஜவான்களை அழைக்கும்படி நேரிடும். கடைசியாக நீங்களும் போலீஸாரிடம் சிக்கும்படி நேர்ந்துவிடும்" என்றார்.

சொல்லியவற்றைக் கேட்ட தலைவன் தன் கூட்டாளிகளுடன் சிறிது நேரம் கலந்து பேசி முடிவில், "நான் நீங்கள் சொல்லுவதை எப்படி நம்புவது? என்னை ஒருத்தனை, வேணுமானுல் சாட்சியாப் போட்டு உட்டுடுவிங்க. ஆனுல் என் கூட்டாளிங்களைப் போலீசாருக்குக் காம்பிச்சுடுவிங்களே!" என்றுன்.

"நான் சொன்னபடியே நம்பிக்கையாக நடந்துகொண்டால், உன் பெயரோ உன் கூட்டாளிகளின் சேதியோ துளிகூட வெளிவராமல் பார்த்துக்கொள்வது என் பொறுப்பு. உங்கள் விஷயம் துளிகூடப் போலீசுக்கு எட்டாதபடி செய்துவிட முடியும். ஆனுல் அத்தனையும்

நீ எவ்வளவு உண்மையாக நடந்து கொள்ளுகிறாயோ அதைப் பொறுத்திருக்கிறது. என் பேச்சை நீ முழுதும் நம்பலாம், உங்களை நான் இந்த நிமிஷமே கைதியாக்கிவிட அனுகூல மிருந்தும், 'எய்தவனிருக்க அம்பை நொந்து கொள்வது' போல், ஏவினவனை விட்டு ஏழைகளாகிய உங்களை வீண் கஷ்டத்திற்குள்ளாக்கக் கூடாதென்ற எண்ணத்தினால்தான் சும்மா இருக்கிறேன். நீ என் பேச்சை நம்பி நடந்தால் உனக்கு அனுகூலம் ஏற்படும். இல்லை என்றால் மறுக்ஷணமே நான் விஸிலடிக்க வேண்டியதுதான். உங்கள் கூட்டத்துடன், மூல காரணமாக இருப்பவர்களையும் பிடித்துச் செல்லுவேன். என்ன, இரண்டிலொன்று? ஜல்தி பதில்!" என்று சற்று அதிகாரக் குரலில் துரிதப்படுத்தினார் புதியவர். தலைவன் மறுத்துச் சொல்ல முடியாமல் குழம்பினான். தான் மறுத்துக் கூறினால் அடுத்த நிமிஷத்திற்குள் விஸில் சத்தங் கேட்டுப் போலிசார் வந்து சூழ்ந்துகொண்டு விடுவார்கள். எப்படியும் தங்களில் சிலராவது பிடிபட வேண்டி யிருக்கும். அத்துடன் தாங்கள் கைக்கொண்ட வேலைக்காகப் பெறவேண்டிய பணம் வராமல், எல்லாம் தோல்வியாக முடியும். இவர் இஷ்டப்படியே நடந்து கொண்டால் தன் ஆட்களுக்கும் பயமில்லை, பணமும் கிடைத்து விடும்—என்று எண்ணமிட்டான். ஆகவே அவன், "உங்கள பேச்சை நம்பி உண்மையாய் நடந்து கொள்ளுகிறேன். நீங்களும் வாக்குப்படி நடந்துக்குங்க!" என்றான்.

"நான் சொன்னபடி உண்மையாக நடந்து கொள்வதாக உன் குலதெய்வத்தின் மேல் ஆணை யிடு."

"என் சாமி! நாங்க இந்தக் கொடுஞ் செயலுக்கு வந்தோமேன்னு எங்க பேச்சில் நம்பிக்கை இல்லையா? சித்த மிந்திக்கூடப் பணம் வாங்கி ஒப்புக்கிட்டு வந்தோமென்னுதானே,—அந்த ஆள் ஒண்டிக்காரனை இருந்தும் இத்தினி பேரோடே எவ்வளவு வஸ்தாதுத்தனம் பண்ணினான்னு எனக்கே ஆச்சரியமாப் பூடுத்தே—இருந்தாலும் வாக்குப்படி நடக்கணுமின்னுட்டுத்தானே — அவனைத் தித்துப்புட இருந்தோம்!............உங்களுக்கு எதுக்குச் சந்தேகம்? அதோ அந்த ஆகாசம் இந்தப் பூமியறிய, எங்க குல தெய்வத்து மேலே ஆணையா, உங்களிடம் உண்மையா நடந்துக்குறேனுங்க"

தலைவன் ஆணையிட்டுத் தனது சகாக்களையும் அவ்விதமே ஆணையிடச் செய்தான்.

பிறகு அவர் தலைவனைக் கார் இருக்குமிடம் சென்று விசாரித்து வரும்படி கூறினர்.

உடனே தலைவன், "ஐயா, இனிமேல் நீங்க என்னை என் சொந்தப் பேரிட்டு 'இராகுலன்' என்று கூப்பிடுங்கள்" என்று சொல்லி அவ்விடம் விட்டகன்ருன். அப்பொழுதுகூட அவனது கையில் பாறைத் தடி காணப்பட்டது.

இராகுலன் பத்து நிமிஷத்திற்குப் பின் ஓடிவந்தான். "நீங்க சொன்னபடியே விஷயம் முடிஞ்சுதுங்க. ஆனல் அந்த மனுசன், 'ஏண்டா, நடுவில் துப்பாக்கி வெடிச் சத்தம் கேட்டுதே, யாரு சுட்டது?'ன்னு கேட்டான். அதுக்குச் சமயப்படி, 'ஆமாங்க, அந்த ஆசாமி ரொம்பத் திமிறி ஓடிக் கிடிக் கஷ்டப்படித்திட்டான். இருட்டில்லே! என் ஆளு ஒருத்தன் ஓடறவனை மூணு நாலு வாட்டி சுட்டுட்டானுங்க. அது மொதல்லே காலுலே பட்டுதா, அதான் அவன் பிடிபடறதுக்கு லகுவாயப் போச்சு. நம்ம சிஷ்யன் கோபத்துமேலே கத்தியாலே ரெண்டு மூணு தடவை ஒரே மூச்சில் போடவும் ரத்தத்தைக் கக்கிக்கினு ஒழிஞ்சான்! இருந்தாலும் எங்களை ரொம்ப ஆட்டிவெச்சுட்டா'ன்னு ஒரு போடுபோட்டேன். அவன் சரிதான்னு நம்பி, பிணத்தைக் கொண்டு வந்து பின்காரில் போடச் சொன்னன். பேசினத்துக்கு மேலே நூறு ரூபாய் கூடவே கொடுப்பதாய்ச் சொல்லியிருக்கான்" என்ருன்.

இராகுலன் பேச்சிலிருந்து அவன் சொல்வது உண்மைதான் என்பதை உணர்ந்து கொண்டார் புதியவர். "சரி, நீயும் மற்றவர்களுமாய் இவனைத் தூக்கிக் கொண்டு போங்கள். நானும் உங்களுடன் சாலை வரையில் வந்து பிறகு மறைந்து கொள்ளுகிறேன்" என்று சொல்லித் தோளில் துவண்டு மூர்ச்சையாகக் கிடந்த நிரஞ்சனைக் கீழே படுக்க வைத்தார். உடனே இராகுலன், சுடப்பட்டு உட்கார்ந்திருக்கும் ஆட்களிடம் போய், அவர்கள் காயத்திலிருந்து இரத்தம் பெருகி நனைந்திருந்த துணிகளை எடுத்துக்கொண்டு வந்து நிரஞ்சன் மேலே போர்த்தி மூடிவிட்டு, "ஒருவேளை அவங்க கவனித்தாலும் நம்பகமா இருக்கனுமில்லே; அதனலே தானுங்க இவனை இப்படிச் சுத்தி வெச்சுட்டோமான, திறந்தா இன்னும் ரொம்பக் கோரமா இருக்கும்னு சொல்லித் தட்டிக் கழிச்சுக்கலாமுன்னுதான்!" என்று சொன்னன்.

"ஆம், அதுவும் நல்ல யோசனைதான். இருந்தாலும் சந்தேகிக்க இடமில்லை. ஏனெனில் இந்தப் பேர்வழியும் பிணத்தைப் போலவே மூர்ச்சை அடைந்திருக்கிறான்!"

"ஆமாங்க, இந்த ஆளுக்குத் தோளுக்குக் கீழே சதை வெட்டுப்பட்டிருக்குது. ரத்தப்போக்கால் மூர்ச்சை யடைஞ்சிருக்கான். இதோ அந்தக் காயத்துக்குப் பச்சிலை வைச்சுக் கட்டிடறேன்" என்று சொல்ல, அவனது ஆளில் ஒருவன் அந்த இருட்டில் எங்கோ சென்று ஒரு நிமிஷத்தில் கையில் பச்சிலையுடன் வந்தான். இராகுலன் அந்தப் பச்சிலையின் சாற்றை நிரஞ்சனுக்குப் பட்டிருந்த காயத்தின் மேல் பிழிந்தான்.

காக்க வந்தவர் டார்ச்சைப் போட்டுக் காயத்தைக் கவனிக்க அது பலமான கத்தி வெட்டு என்பதைக் காணவும் அவர் மனம் மிகவும் சங்கடப்பட்டது.

காயத்தைக் கட்டிவிட்ட இராகுலன் மறுபடியும் நிரஞ்சன் கழுத்திலிருந்து கால்வரையில் நன்கு போர்த்தி விட்டு, "உம், தூக்கிக்கொண்டு போகலாமா?" என்று நிரஞ்சனைத் தூக்கத் தயாரானான்.

"இராகுலா! மூர்ச்சித்திருக்கும் இந்த வாலிபன் உயிருக்குத் துளிகூட அபாயம் வரக்கூடாது, தெரிந்ததா?" என்றார்.

பிறகு யாவருமாய்ப் பிணம்போல் இருந்த நிரஞ்சனைத் தூக்கிக்கொண்டு சாலையை நோக்கிச் சென்றனர்.

## 15. கல்நெஞ்சருக்குப் பெண்ணென்றுமில்லை!

நிரஞ்சனைத் தூக்கிக்கொண்டு சென்றபின், ஸ்ரீவத்ஸாவும் மறைவாய்ப் பச்சைக் கார் அருகில் ஒரு பெரிய பூவரச மரத்தின் பின் பதுங்கிக் கொண்டார்.

பகவன்தாஸும் பிரகாசமும் காரைவிட்டுக் கீழே இறங்கி, பிணத்தைக் கறுப்புக் காரில் வைக்கும்படி கூறி இவர்களைக் கறுப்புக் கார் நிற்கும் இடத்திற்கு அழைத்துச் சென்றார்கள்.

உடனே கறுப்புக் கார் 'சாபர்' கதவைத் திறந்து விட்டு, பிணத்தைக் கிடத்துவதற்காகச் சாமான்களை ஒழுங்கு செய்துவைத்தான். அச்சமயம் சாபர் தலையில் துணியைப்போட்டு முகத்தைப் பாதி மூடிக்கொண்டிருந்த

துடன், பகவன்தாஸ் கட்டளையிடும் முன்பே வேலையைத் துரிதமாய்ச் செய்து முடித்தான். எனினும் அவன் தனது முகத்தை இருண்ட பக்கமாகவே வைத்துக்கொண்டிருந்தான்.

பிணத்தைக் கிடத்திய பின், ட்ரைவர் கதவை மூடிவிட்டுக் காருக்கு மறுபுறமாய் நின்றுகொண்டான்.

உடனே பிரகாசம், "சாபர்! நீ வழக்கப்படி நமது காருக்குப் பின்னாலேயே வந்துகொண்டிரு" என்று சொன்னான்.

பிறகு, பிரகாசம் சற்று எட்டச்சென்று இராகுலனிடம் மூன்று நூறு ரூபாய் நோட்டுகளைக் கொடுத்து, "வீரா! இந்தச் சமாசாரம் இங்கிருந்த உன் கூட்டாளிகளைத் தவிர வேறு ஒரு பிராணிக்கும் தெரியக்கூடாது. நீங்களும் இப்பொழுது நடந்த விஷயங்களை இத்துடன் கண்டிப்பாய் மறந்துவிடவேணும்" என்றான்.

"ஒ, அதைப்பற்றிச் சந்தேகமே வேண்டாங்க, நீங்க போங்க!" என்று இராகுலன் சொல்லிவிட்டுத் தன் ஆட்களுடன் திரும்பிவிட்டான்.

மேற்படி விஷயங்கள் நடந்து கொண்டிருக்கையில் பூவரச மரத்தின் கீழே பதுங்கியிருந்த ஸ்ரீவத்ஸா மெல்லப் பச்சைக் காரின் மறுபுறமாய் (மனிதர்கள் இருந்த வரிசைக்கு எதிர் வரிசையாய்)ச் சென்று, அக்காரின் பின் ஸீட்டில் படுத்திருக்கும் அமிர்தாவின் தலையைத் தொட்டுக் கூப்பிட்டும், அசைத்தும் கூட அவள் எழுந்திராமல் இருப்பதைக் கண்டு, சந்தேகப்பட்டு அவளது மூக்கருகில் கையை வைத்துப் பார்த்தார். மூச்சு விடும் உஷ்ணம் கையில் படுவதை உணர்ந்து, அவள் எப்படியோ மூர்ச்சையுற்றிருக்கிறாள் என்று ஊகித்துக் கொண்டார். பிறகு முன் போலவே மரத்தின் பின் வந்து பதுங்கினார்.

பகவன்தாஸும் பிரகாசமும் தங்கள் பச்சைக் காரில் ஏறிக்கொள்ளக் கார் புறப்பட்டுவிட்டது. சில விநாடிகளுக்கெல்லாம் கறுப்புக் காருக்குள் இராகுலனும் வந்து ஏற, அதுவும் புறப்பட்டது.

அதுவரையில் இருபத்தைந்து மைல் வேகத்தில் சென்று கொண்டிருந்த பச்சைக் கார் முப்பத்து ஐந்து மைல் வேகத்தில் செல்ல ஆரம்பித்தது. பதினைந்து நிமிஷம் பொறுத்து முன் செல்லும் கார் தன் வேகத்தைக்

குறைத்து மெள்ளச் சென்று கடைசியில் பாதையிலேயே நின்றது.

சுமார் எண்பது கஜ தூரம் பின்னால் வந்து கொண்டிருந்த கறுப்புக் காரும் முன்கார் நின்றதை அறிந்தவுடன் நின்றுவிட்டது.

“ட்ரைவர்! முன் செல்லும் கார் நிறுத்தப்பட்டிருக்கும் காரணம் யாதோ தெரியவில்லை. இருந்தாலும் அக்காரினிடம் யாதாயினும் சம்பவம் நிகழக் கூடுமானால், நாம் மிக்க கவனத்துடன் கவனித்தாலொழிய இவ்விருளில் நமக்குப் புலப்படாது” என்றார் பின் ஸீட்டில் இருந்த பேர்வழி.

“ஆம், இன்று நள்ளிரவில் நடுவழிகளில் என்னென்னவோ சம்பவங்களெல்லாம் நிகழ்வது போலிருக்கிறது. எவ்வளவு இருண்ட இரவு!” என்று பீதியுடன் உரைத்தான் ட்ரைவர்.

“ஆம், பயங்கரமான இரவுதான். இன்னும் புதிதான பயங்கரச் செயல்கள் ஏதாவது சம்பவிக்கலாம். கடவுள்தான் என்னை இந்த வழியில் திருப்பினார்!” என்றார் பின் ஸீட்டில் இருந்தவர்.

அவர் மனம் முன்காரினிடம் பதிந்திருந்தது. நடக்கப்போகும் சம்பவம் யாதாக இருக்கலாமென்றும், அப்படி ஏதாவது நேர்ந்தால் தாம் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்றும் ஆராய்ச்சி செய்துகொண்டிருந்தார்.

கறுப்புக் கார் நின்றுகொண்டிருந்த இடத்தில் இருபுறமும் சப்பாத்திக் கள்ளிப்புதர் படர்ந்திருந்தது. ஆனால் காரின் இடது புறத்தில் இருபது அடி தூரத்திற்குத்தான் அப்புதர் காணப்பட்டது. அதற்கு மேல் வெறும் பொட்டல் காடுதான். அவர் காரிலிருந்து கீழே இறங்கி இடது புறமுள்ள புதரருகில் மெல்ல உட்கார்ந்தபடியே நகர்ந்து சென்று பொட்டலுக் கப்பால் என்ன காணப்படுகிறது என்பதைக் கவனித்தார். ஆனால் அந்தக் காரிருளில் பொட்டல் காட்டுக்கு அப்பால் மேடாக ஒரு ரஸ்தா செல்வது போல் உணர்ந்தாரே தவிர வேறெதையும் அவர் பார்க்க முடியவில்லை. அதைப் பற்றி அவர் மேலும் சிந்திக்கு முன், பச்சைக் கார் அருகில் நடக்கும் சம்பவம் அவரது கவனத்தைக் கவர்ந்தது.

அந்த இருளில் சுமார் ஐம்பது கஜ தூரத்திற்கு அப்பால் நடக்கும் நிகழ்ச்சிகள் நிழலைப்போல் புலப்பட்டதே தவிர நன்கு புலப்படவில்லை. எனினும் தமது கவனம் முற்றும் செலுத்திக் கூர்ந்து கவனித்தார். அவருக்கு நடக்கப் போகும் விஷயங்கள் ஒருவிதமாகப் புரிந்தன.

பச்சைக் காரிலிருந்து முதலில் ஒருவனும், பிறகு மற்றொருவனும் கீழே இறங்கினர். பிறகு அக்காரினுள்ளிருந்து ஒரு ஆளையோ, அல்லது ஒரு மூட்டையையோ ஒருவன் எடுத்துக்கொண்டு பொட்டலை நோக்கி நடந்தான். காரிடம் ஒருவன் நின்றுகொண்டிருந்தான். பொட்டல் காட்டை நோக்கி மூட்டையுடன் சென்றவன் அதைக் கடந்து எதிர்நோக்கிச் சென்றதுபோல் சப்பாத்திக் கள்ளிக்கப்பால் இருந்தவருக்குத் தோன்றிற்று. ஆனால் அதற்குமேல் இவருடைய கண்களுக்கு ஒன்றும் புலப்படவில்லை. இவருக்கு ஒவ்வொரு வினாடியும் ஒரு யுகம்போலத் தோன்றவே அமைதி யற்றுப் பொட்டல் காட்டைக் கடந்து சென்ற பேர்வழியை எதிர்பார்த்துக் காத்திருந்தார். ஐந்து நிமிஷம் பொறுத்து, சென்ற ஆசாமி திரும்பி வருவதைப் பார்த்தார். அந்தப் பேர்வழி, கொண்டு போன மூட்டை இல்லாமல் கையை வீசி நடந்து வருவது தெரிந்தது. காத்திருந்தவரின் மனம் குழப்பத்தையும் பரபரப்பையும் அடைந்தது. "அப்பேர்வழி கொண்டு போன மூட்டை என்ன மூட்டை? ஒருவேளை அது...... நாம் சிந்திக்கிறபடி இருந்தால்......ஐயோ......" என்று எண்ணினார். அவரது மனமும் கை கால்களும் காட்டைக் கடந்து பச்சைக் கார் - மனிதன் கொண்டுபோன மூட்டை என்ன மூட்டை என்பதைக் கண்டறியத் துடித்தன.

பொட்டல் காட்டுக்குள் போன மனிதன் திரும்பிப் பச்சைக் கார் அருகில் வந்து சேர்ந்ததும், அவனும் மற்றவனும் காரில் ஏறிக்கொள்ள, மறு நிமிஷமே கார் 'புர்' என்ற சத்தத்துடன் புறப்பட்டுவிட்டது. அதே சமயம் "குப் குப்"பென்று வெகு தூரத்திற்கப்பால் ஓடிவரும் சத்தம் காத்திருந்தவரின் காதில் விழுந்தது. உடனே நடுங்கினார்; மனம் பதைத்தது. இரண்டு எட்டில் தன் கறுப்புக் காரை அணுகி, "ட்ரைவர்! நீ காரை மெல்ல மெல்ல ஓட்டிச் செல்லு. நான் ஓடிவந்து சேர்ந்து விடுகிறேன்" என்று கூறிவிட்டுப் பொட்டலை நோக்கிக் கண் தலை தெரியாமல் ஓடினார், நாலுகால் பாய்ச்சலிலே. ஆம், அவருக்குப் பிசாசு, வெறி, பயம், திகில் யாவும்

ஒருங்கே பிடித்து விட்டவோ என்னவோ! அவரது மனம் அத்தகைய நிலைக்கு வரத்தக்க காரணம் என்ன?

நிரஞ்சன் மூர்ச்சித்துக் கிடந்ததைக் கண்டதும் அமிர்தா பரபரப்புடன் வந்து நிரஞ்சனைப் பற்றிக் கவலையுடன் விசாரித்த சமயம் அவளது முகபாவத்தி லிருந்து அவனிடம் மிக்க அக்கரை பூண்டவளாக இருக்கிறு ளென்பதைத் தெரிந்துகொண்டார். பிறகு நிரஞ்சன் அமிர்தாவுக்கு உறவினன் அல்ல, வந்த விருந் தாளிதான் என்பதைத் தெரிந்துகொண்டதும், அமிர்தா நிரஞ்சனை நேசிக்கிருள் என்று நினைத்துக்கொண்டார்.

டெபுடியும் அமிர்தா - அருணுவின் வசிகரத் தன்மையை உணர்ந்திருந்தார். அதனுல்தான் 'யுவனுன ஸ்ரீவத்ஸா மையலில் சிக்கிவிடப் போகிருனெ'ன்று முன்பு எச்சரித்தார். ஸ்ரீவத்ஸாவின் உள்ளத்தை அமிர்தா ஒரு விதமாய்க் கவர்ந்திருந்ததுபோல் அருணுவும் ஒரு விதமான கவர்ச்சியை உண்டுபண்ணுமலிருக்கவில்லை. ஆனுல் அவை பற்றி யெல்லாம் சிந்தித்துப்பார்க்க ஸ்ரீவத்ஸாவுக்கு நேரமேது?

ஸ்ரீவத்ஸாவின் உள்ளத்தில் அமிர்தாவைப் பற்றி உயர்ந்த மதிப்பு ஏற்பட்டிருந்தபடியால், தம்மால் முடிந்த மட்டும் அமிர்தாவுக்கும் அவளால் நேசிக்கப் பட்டவனுக்கும் உதவி செய்து விடுவதென்று தீர்மா னித்துவிட்டார். இந்த நிலையில் அவர் தண்டவாளப் பாதையின் மத்தியில் ஒரு பெண்ணைக் கிடத்தி யிருந்ததைக் கண்டார். ரயிலோ அவளை அனுக இன்னும் அறுபது கஜ தூரந்தான். அவர் மான் குட்டிபோல ஒரே துள்ளில் தண்டவாளத்தின் மத்தி யில் பாய்ந்து அப்பெண்ணை எடுத்தார். தண்ட வாளத்தைத் தாண்டினுர். ரயிலும் பாய்ந்து சென்றது.

## 16. பிரேதம் வைத்த அறை

பச்சைக் கார் நேராகப் பெரிய சாலையிலேயே போய்க் கொண்டிருக்கிறது. அதைத்தொடர்ந்து கறுப்புக் காரும் செல்லுகிறது. இரவின் ஆதிக்கம் சிறிது சிறிதாய் விலகிப் பொழுது விடிய இன்னும் ஒரு மணி நேரந்தான்.

இது வரை காரில் பிரேதம்போல் கிடந்தவள் மூர்ச்சை தெளிந்து புரண்டு கொண்டிருந்தாள். சிறிது

நேரத்திற்கெல்லாம் "ஐயோ, அநியாயம், போகாதே, வேண்டாம், இல்லை........நான் விட முடியாது........ ஐயையோ...ஆபத்தமா?......இதோ நானும் வருகிறேன் ......இல்லை......நான் போகிறேன்......தெய்வமே, ஆ ....." என்று இப்படிப் பலவிதம் தலையைப் போட்டுப் புரட்டிப் பிதற்ற ஆரம்பித்துவிட்டாள். அந்த இரவில் காப்பாற்ற வந்தவர் அவளைப் பலவாறு கூப்பிட்டும் அவள் உணர்ந்து கொள்ளாதவளாய்ப் பிதற்றியபடியே இருந்தாள். காரில் மூர்ச்சித்துக்கிடந்தவன், பேசமுடியா விட்டாலும் அமிர்தாவின் குரலைக் கேட்டதும், தன்னைக் காப்பாற்றிய பெரியாரைத் தொட்டு, "அது யார்? அமிர்தாவா?" என்று தீன ஸ்வரத்தில் கேட்டான்.

"இருக்கலாம். உனக்குண்டான ஆபத்தை யுணர்ந்ததும் புத்தி பேதித்துவிட்டது போலத் தோன்றுகிறது" என்றார் அவர்.

ஐந்து நிமிஷத்திற்குப் பின் அமிர்தா பிதற்றுவதை விட்டு மௌனமாகக் கிடந்தாள். அப்பொழுது ட்ரைவர், "எஜமான்! கார் இப்பொழுது சந்திரபுரிக்குச் செல்லுகிறது. ஒரு சமயம் கார் இவ்வூருக்குள்ளேயே நிற்கலாமோ?" என்று கேட்டான்.

"அது போகப் போகத்தானே தெரியும்?"

கார் ஒரு மைல் தூரம் சென்றது. அச்சமயம் எதிரில் ஒரு கார் வந்துகொண்டிருந்தது. அதைக் கண்டதும் கறுப்புக் காரில் இருந்தவர் ட்ரைவரிடம், "எதிரில் வரும் கார் நமது காரினருகில் வரும் சமயம் நீ நமது காரை நிறுத்து" என்று கட்டளையிட்டார். எதிரில் வரும் கார் சமீபித்ததும் அக் காரை நிற்கும்படி கையால் சைகை செய்தார். அவரது கோரிக்கையின் படியே கறுப்புக் காரின் பக்கத்தில் எதிர்க் கார் வந்ததும் நின்றது.

வந்த காருக்குள் ஒரு கிழவரும் ஒரு வாலிபனும் காணப்பட்டனர். கறுப்புக் காரில் இருந்தவர், "இங்கே சமீபத்தில் தேர்ச்சி பெற்ற டாக்டர் யாராவது இருக்கிறாரோ?" என்று விசாரித்தார்.

அதற்கு அந்தக் காரில் இருந்த பெரியவர், "சந்திரபுரியில் பேர்பெற்ற டாக்டராக இருப்பவர் என் மருமகன் டாக்டர் ரமேசம்தான். அவருடைய மாளிகை

இதே பாதையில் ஒரு பர்லாங்கு தூரம் சென்றதும் வலது புறமாகத் திரும்பும் பாதையில் மூன்ருவது கட்டடம், நீல நிறச் சுண்ணம் தீட்டிய கட்டடம்" என்ருர். தாம் அவசரமாய் ரயில்வே ஸ்டேஷனுக்குச் செல்வதாகவும் அவர்களுடன் வர முடியாததுபற்றி மன்னித்துக்கொள்ள வேண்டுமென்றும் சொல்லிவிட்டுப் போய்விட்டார் அந்த எதிர்க் காரிலே.

பின்பு கறுப்புக் காரில் இருந்தவர், "ட்ரைவர்! உன் உடையை நான் அணிந்துகொண்டு காரை ஓட்டுகிறேன், நீ என் ட்ரஸ்ஸை அணிந்துகொள்" என்ருர்.

அப்படியே உடை மாற்றிக்கொண்டார்கள். ட்ரைவர் எஜமான் ஆனுன். எஜமான் ட்ரைவரானுர்.

"ட்ரைவர்! நான் டாக்டர் மாளிகையின் எதிரில் காரை நிறுத்தியவுடன் நீ கீழே இறங்கிச் சென்று அம் மாளிகையின் முன் கதவைத் திறக்கச் செய்யவேணும். உடனே நான் பிரக்ஞையற்றுக் கிடக்கும் இந்தப் பெண் மணியை எடுத்துக்கொண்டு வருகிறேன். அதற்குள் நீயும் இராகுலனும் என் சாமான்களை மட்டும் எடுத்துக் கொண்டு டாக்டர் மாளிகையிலேயே இந்தப் பெண் ணுக்குத் துணையாக இருங்கள், நான் வருமளவும். இவளை மிக்க உஷாராக டாக்டர் சொற்படி மருந்துகள் கொடுத் துக் கவனித்துக் கொள்ளவேணும். மேலும், நீயும் இராகுலனும் இங்கே யிருப்பது பச்சைக் காரில் செல்லு பவர்களுக்குச் சிறிதும் தெரியவே கூடாது. நீங்கள் ரகஸ்யமாகவே யிருந்துவர வேணும்" என்று கூறினுர்.

ட்ரைவர் "உம்" மென்று ஏதோ கூறப்போகுமுன் கறுப்புக்கார் நேராகச் செல்லும் முன்காரைத் தொடா ராமல் வலதுபுறம் திரும்பிச் சென்று டாக்டர் மாளிகை யின் முன் நிற்கவும், ட்ரைவர் ஒரே பாய்ச்சலில் கீழே குதித்து மாளிகையின் முன் கதவைத் திறந்து வைத்தான். அம்மாளிகையின் கதவைத் திறக்கப் பங்களா வேலைக்காரனும் ஓடிவந்தான்.

அவன் வேலையை ட்ரைவர் செய்துமுடித்துவிட்டே அவன் வழி விட்டு விலகி நின்ருன்.

கார் மாளிகைக் காம்பவுண்டு வாசலின் வழியாக நுழைந்து மாளிகையின் எதிர்ப்புறம் சென்று நின்றதும் இருமுறை ஹார்ன் செய்தார்,—காரிலிருந்து இறங்கி நின்ருர், ட்ரைவர் உடையில் இருந்தவர்.

ஹாரன் சத்தம் கேட்டு வைத்தியர்போலிருந்த ஒருவர் வெளியில் வந்தனர். அவர்களைக் கண்டதும் ட்ரைவர் உடையில் இருந்தவர், "டாக்டர் ரமேசம் தாங்கள் தானே?" என்று கேட்க, அப்புருஷர் "ஆம், நான் தான் டாக்டர் ரமேசம்" என்று பதில் அளித்தார். உடனே ட்ரைவர் உடையில் இருந்தவர் தமது உள் ஜேபியிலிருந்து ஒரு விஸிடிங் கார்டை எடுத்து டாக்டர் ரமேசத்திடம் கொடுத்தார். அதைப் பார்வையிட்ட டாக்டர் ரமேசம் "ஓ, தாங்களா?" என்று கூறுகையில், காரில் வந்தவர் குறுக்கிட்டு, "ஆம். நான் இப்பொழுது தாமதித்து நின்று விஷயங்களைச் சொல்ல முடியாது. நான் மிக அவசரமாய்ச் செல்லவேணும். தாங்கள் இப்பொழுது தயவு செய்து, பெருத்த அபாயம் நேர்ந்த இடத்திலிருந்து காப்பாற்றப்பட்டு வந்திருக்கும் ஒரு பெண்மணியைக் கவனித்துச் சிகிச்சை செய்யவேணும். இப்பொறுப்பைத் தங்களிடம் விட்டுச் செல்லுகிறேன்" என்று சொல்லிப் பிரக்ஞையற்றுக் கிடந்தவளைக் குழந்தைபோல் எடுத்துக்கொண்டு மாளிகையின் உட்புறம் சென்றார். டாக்டரும் உடன் சென்று அந்தப் பெண்ணைக் கிடத்த உதவி செய்ததுடன், "ஐயா! இனி இப்பெண்ணைப் பற்றித் தாங்கள் கவலைப்படவேண்டாம். நான் நன்றாய்க் கவனித்துக் கொள்ளுகிறேன்" என்றார்.

"தங்களுக்கு மிக்க வந்தனம். நான் பிறகு வந்து உங்களைப் பார்க்கிறேன்" என்று சொல்லி அவசரமாய்க் காரில் வந்து ஏறிக்கொண்டார். ட்ரைவரையும் இராகுலனையும் நோக்கி "பத்திரம்" என்று ஒரே ஒரு வார்த்தைமட்டும் சொல்லிவிட்டுக் காரை ஓட்டிக்கொண்டு போய்விட்டார்.

மூன்று நிமிஷங்களுக்குப் பின் கறுப்புக் கார் பச்சைக் காருக்குப் பின் அறுபது கஜ தூரத்தில் சென்றுகொண்டிருந்தது. பின்னும் இரண்டு நிமிஷங்கள் செல்லவே, பச்சைக் கார் இரு பக்கங்களிலும் நெருக்கமாக நட்டிருந்த தூண்களில் பிரகாசிக்கும் விளக்குகளோடு விளங்கிய ஒரு பாதையில் திரும்பி அரண்மனை என்னும்படி தோன்றிய பெரிய மாளிகை ஒன்றின்முன் சென்று நின்றது.

உடனே சில வேலையாட்கள் வந்து சூழ்ந்து நிற்க, அதிலொருவன் "தாங்கள் யார்?" என்று விசாரிக்கவும், பச்சைக்காரில் இருந்த நெடியவர் தமது ஜேப்பிலிருந்து

ஒரு விஸிடிங் கார்டை அவர்களில் ஒருவனிடம் எடுத்துக் கொடுத்து, "எஜமானிடம் கொண்டுபோய்க் கொடு" என்றார். உடனே இந்த ஆள் மாளிகைக்குள் சென்றான். சிறிது நேரம் சென்றதும், ஐம்பத்தைந்து வயது மதிக்கத் தகுந்தவரும், நல்ல உயரமும் சிவந்த மேனியும் சாந்தமான பார்வை யுடையவருமான ஒருவர், "வாருங்கள். ஏது? காரிலேயே வந்தீர்களா?" என்றார்.

நெடியவர் :—ஆமாம், நேற்று......

சந்திரபுரி ஜமீன் காரியதரிசியான லீலாராம், "ஆம், நேற்று மாலை உங்கள் தந்தி கிடைத்தது" என்றார்.

அதுவரையில் காரிலேயே இருந்த குறளர் கீழே இறங்கினார்.

நெடியவர் :—நான் நேற்றுத் தந்தி கொடுத்தபின் ஆலோசனை செய்தேன். எனக்குச் சந்தேகமே இல்லை. எனினும் எவ்வளவோ பாக்கியங்களை அனுபவிக்க இருந்தவன், யாவும் கெட்டு அனாதரவாய் எங்கேயோ ஒரு காட்டில் கொலையுண்டு கேட்பாரற்று நாறிக்கிடப்பது என்றால், அதை நினைக்க என் மனம் மிக்க சங்கடத்தை அடைந்தது.

லீலாராம் :—த்ஸ, த்ஸ, த்ஸ, என்ன பரிதாபம்!

நெடியவர் :—ஆம்; ரொம்பக் கண்ணராவியான விஷயம். அதனால்தான், ஏதோ அனுபவிக்காத துரதிர்ஷ்டனாய்ப் போனாலும் அவனது பிரேதமாவது அவனது ஜன்ம பூமியில் அடக்கம் செய்யப்படட்டுமே என்று எண்ணி, இரவோடிரவாய் ஒரு காரில் கொண்டு வந்திருக்கிறேன்.

லீலாராம் முகத்தில் மிக்க விசனக்குறி தென்பட்டது. "ஆம், தாங்கள் செய்த வேலை ரொம்ப உசிதமானது. நல்ல காலமாய்ச் சிரமத்தைப் பாராமல் எடுத்து வந்ததற்கு ரொம்ப வந்தனம். தங்கள் நண்பருக்கும் ரொம்பத் தொந்தரவு இதனால்!" என்றார்.

குறளர் :—அதனால் பரவாயில்லை. நட்பு என்றால் ஒருவருக்கொருவர் உதவியாக இருப்பதுதானே?

லீலாராம் :—இந்தக் காரில்தான் பிரேதம் இருக்கிறதோ?

நெடியவர் :—இல்லை, இல்லை. அதோ பின்னால் நிறுத்தப்பட்டிருக்கிறதே அந்தப் பெரிய காரில்தான்

பிரேதம் வைக்கப்பட்டிருக்கிறது. பிரேதத்தை எடுத்து இந்த வராண்டாவிலேயே கிடத்திவிட்லாமா?

லீலாராம்:—வேண்டாம்: ஜமீன் பிரஜைகள் யாவரும் சற்று நேரத்தில் வந்து கூடி வேடிக்கை பார்க்க ஆரம் பித்து விடுவார்கள். அவ்விதமான களேபரம் ஒன் றுக்கும் நாம் இடங்கொடாமல், நடு ஹாலின் பக்கத்திலே உள்ள அறைக்கு வெளிப்புறமும் கதவு இருக்கிறபடியால் அவ்வறையில் வைத்துவிடலாம்.

நெடியவர்:—இரண்டொரு ஆட்களை உதவிக்கு அனுப்புங்கள். எங்கள் ட்ரைவரும் கூட இருந்து பிரே தத்தை எடுத்து வருவான்.

லீலாராம்:—(அவ்விடத்தில் நின்று கொண்டிருந்த ஆட்களை நோக்கி) நந்தா! கோவிந்தனையும் மலைய னையும் அழைத்துக் கொண்டுபோய் அந்த மோட்டாரில் இருக்கும் பிரேதத்தை எடுத்துக்கொண்டு வந்து, அந்த வலதுபுறம் அறையிலுள்ள பெஞ்சியில் கிடத்திக் கதவைப் பூட்டி வையுங்கள். மற்றதை விடிந்தபின் கவ னித்துக் கொள்ளலாம்.

உடனே நந்தனென்பவன் கோவிந்தன் மலையன் என்ற இருவருடன் கறுப்புக் கார் அருகில் சென்றான். அச்சமயம் அம்மோட்டார் அருகில் ட்ரைவர்-வேஷத்தில் நின்றவர் கதவைத் திறந்து நிரஞ்சன் காதருகில் குனிந்து மெல்ல ஏதோ கூறினார். நிரஞ்சனது தலைப் புறத்தைத் தாமே தாங்கிப் பிடித்துக்கொண்டு, மற்ற வர்களைக் கால்-புறமாகப் பிடித்துக் கொள்ளும்படி கூறினார்.

பிணம் குறித்த அறையில் கொண்டுபோய் வைக்கப் படுகையில் நெடியவரும் குறளரும் லீலாராமும் அருகில் நின்று பார்த்துக் கொண்டிருந்தனர்.

பிணம் அறையில் வைக்கப்பட்ட பின் லீலாராம் அவ்வறையினுள் சென்று பிணத்தைப் பார்க்க விரும்பவே, மற்றிருவரும் உடன் சென்றனர். சில விநாடிகள் பிணத்தின் முகத்தைப் பார்த்துவிட்டுத் திரும்பிய லீலாராம், “அடடா, பிணமாக இருந்தும் அந்த முகத்தில் எவ்வளவு சௌந்தரியம்! கொலையுண்டு இறந் தவனாகவே தோன்றவில்லையே!” என்றார்.

நெடியவர்:—முகத்தில் கோரமே இல்லை. ஆனால், உடல் முழுவதும் மூடியிருப்பதால் சித்திரவதையாகச்

செய்திருக்கும் இதர கோரங்களெல்லாம் நமக்குப் புலப்படாமல் இருக்கிறது.

நூருளர்:—அப்பப்பா! அதைப் பார்த்தால் ரொம்ப மனக் கலக்கமாக இருக்கும்.

மற்றிருவரும் மாடிக்குச் சென்றபின் லிலாராம் உள்ளே செல்லாமல் மாளிகையின் முன் வராண்டாவில் வந்து நின்றுகொண்டிருந்தார். அப்பொழுது அண்ணாஜி ராவ் அங்கே வந்து லிலாராமிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்தார். லிலாராம் விளக்கு வெளிச்சத்தில் படித்துவிட்டு, "வரவேணும், வரவேணும்! தங்களைப் பற்றி ரொம்பக் கேள்விப்பட்டிருக்கிறேன். என்ன விசேஷம்? அவசரமாக என்னை அதிகாலை வேளையிலே பார்க்க வந்ததைப் பார்த்தால் ஏதோ ரொம்ப விசேஷம் இருக்க வேணும் என்று தெரிகிறது; உள்ளே வாருங்கள்" என்று உபசாரத்தோடு அரண்மனைக்குள் அழைத்துச் சென்றார்.

"தங்களிடம் கொஞ்சநேரம் அந்தரங்கமாகப் பேசிக்கொண்டிருக்க வேண்டும். நம்முடைய சம்பாஷணையை ஈ காக்கையும் கேட்கலாகாது!" என்றார் அண்ணாஜி ராவ்.

உடனே லிலாராம் அவரை அந்த மாளிகையின் ஏகாந்தமான சம்பாஷணைக் கூடத்திற்கு அழைத்துச் சென்றார். அந்தக் கூடத்திற்குச் செல்லும் பாதையில் வரிசையாக அமைக்கப்பட்ட மூன்று கதவுகளில் முதல் கதவை நன்றாய்த் தாளிட்டுவிட்டு வந்தார். வந்ததும், "அண்ணாஜி ராவ்! இப்பொழுது தாங்கள் எந்த ரகஸ்ய விஷயத்தையும் பேசலாம். அவை நமது செவிகளைத் தவிர மற்றெவரது செவிகளுக்கும் எட்டாது" என்று நிதானமாக ராயரை உற்றுப்பார்த்த வண்ணமே கூறினார். மனத்தில் ஏதோ சந்தேகம் எழுந்தது. உடனே, "ராயர்வாள்! தங்களுக்கு ஸ்ரீவத்ஸாவை எவ்வளவு காலமாகத் தெரியும்?" என்றார்.

அண்ணாஜி ராவ்:—சில வருஷங்களாகத் தெரியும். மிஸ்டர் லிலாராம்! ஏது அப்படிக் கேட்கிறீர்கள்? சில வருஷங்களுக்கு முன் நாம் சந்தித்திருக்கிறோமே, மறந்துவிட்டீர்களா?

லிலாராம்:—மறக்கவில்லை. அப்போ ரொம்ப வாலிபமாக இருந்தேன். அடடா, மனுஷாள்தான் எப்படி

கிடு கிடு என்று வளர்ந்து விடுகிறுர்கள்! ஆள் அடையாளம் கண்டு பிடிக்கிறதோ ரொம்பக் கஷ்டமாக இருக்கிறது. அதிருக்கட்டும், அப்புறம் ?

அஞ்ஞுஜி ராவ் :—மாடியிலே இளைப்பாறுகிறவர்களுக்கு, நேற்று இரவு கார் ஓட்டியவன் தங்களுடைய ட்ரைவர் இல்லையென்றே தெரியாது. அது தங்களுக்குத் தெரியுமோ ?

லீலாராம் :—இருட்டிலே கவனிக்கவில்லை அவ்வளவாக. அது எப்படித் தெரியும் தங்களுக்கு ?

அஞ்ஞுஜி ராவ் :—நான்தான் கார் ஓட்டியாக வந்தேன். அந்த அறையில் பூட்டி வைத்திருப்பது பிணமும் அன்று, அவன் உயிரோடிருக்கிறுன் !

லீலாராம் :—என்ன ? தூக்கி வாரிப் போடுகிற செய்திகளையே சொல்லுகிறீர்களே. உண்மைதானு ? இதைவிடச் சந்தோஷமான செய்தி எனக்கு வேறெதுவும் இந்த உலகத்திலேயே இல்லை என்று தங்களுக்குத் தெரியுமோ ?

அஞ்ஞுஜி ராவ் :—நன்ருய்த் தெரியும். சந்தேகமே வேண்டாம். நான் சொல்வதெல்லாம் உண்மை. நேற்று அந்த வாலிபன் கொலை செய்வதைத் தடுக்கும்படி பகவானே கிருபை செய்தார். நான்தான் அவனைப் பிணம்போல் நடிக்கச் செய்தேன். அவன் உயிரோடிருப்பதாகத் தெரிந்தாலே அந்தக் கிராதகர்கள் மறுபடியும் அவன் உயிருக்கு உலை வைக்க வழி தேடுவார்கள்.

லீலாராம் :—அவனைக் கொல்வதினல் அவர்களுக்கு என்ன லாபம் ?

அஞ்ஞுஜி:—மிஸ்டர் லீலாராம்! இன்னும் சில நாட்களிலே மகா ஆச்சரியமான விஷயங்களை யெல்லாம் தாங்கள் கேள்விப்படுவீர்கள். அது மட்டும் அந்த வாலிபனைத் தாங்கள் பத்திரமாகக் காப்பாற்றி வைக்க வேண்டும். அறையில் வைத்திருப்பதை அவ்விருவர்களும் மற்றவர்களும் அறிந்திருக்கிறபடியே அந்த அறை பூட்டிய சாவி தங்களிடம் இருக்கிறது. ஆனல் நாம் இன்னும் பத்து நிமிஷத்திற்குள் அபாய நிலையிலிருக்கும் நிரஞ்சனைப் பிறர் எவரும் அறியாதபடி ஒரு காரில் ஏற்றி ரகஸ்யமான ஓரிடத்தில் மறைத்து வைத்து, தேர்ந்த டாக்டர் ஒருவரைக் கொண்டு சிகிச்சை செய்தால்தான் அவன் பிழைக்கக்கூடும். இரண்டு தினங்கள் வரையில்

மேற்படி அறையிலேயே அவர்கள் கொண்டு வைத்த பிணம் பந்தோபஸ்தா யிருப்பதாக அவர்கள் பூர்ணமாய் நம்பிக்கொண்டிருக்கட்டும். அப்படி நம்பச் செய்து அவ்விருவரையும் தங்கள் கண்காணிப்பிலேயே வைத்திருக்க வேணும்.

லிலாராம்:—என்ன ஆச்சரியம்! நீங்கள் சொல்லும் விஷயம் ஏதோ கதைகளில் படிப்பதுபோ லிருக்கிறதே—அதனாலே பொய்யென்று சொல்லவில்லை! அடாடா...... ஆனால் இந்த நிரஞ்சன் என்ற வாலிபன் யாரையோ கொலை செய்துவிட்டுத் தலைமறைவாய் ஓடியதாகத் தகவல் கிடைத்ததே?

அண்ணாஜி:—நானும் அப்படித்தான் கேள்விப்பட்டேன். அதைப் பற்றிக் கூறுவதற்கு முன் அநேக மர்மங்கள் ருஜுவாகவேணும். நீங்கள் நான் கூறிய விஷயங்களை மிகவும் ரகஸ்யமாய் நடத்துவதுடன் நிரஞ்சனைக் காப்பாற்றவேணும், இது தங்கள் முதல் கடமை. அதை நான் அதிகம் சொல்லவேண்டியதில்லை.

லிலாராம்:—ஆம், வாருங்கள் நாம் முதலில் அந்த வாலிபன் விஷயத்தைக் கவனிக்கலாம்.

இருவரும் அவ்வறையைவிட்டு மாளிகையின் முன் பக்கம் வந்து சேர்ந்தனர்.

## 17. மர்மக் கடிதம்

மணி டங், டங், டங், டங்கென்று சந்திரபுரி ஜமீன் மாளிகையில் ஆறு அடித்தது. அதே சமயம் அம்மாளிகையின் வாசலிலிருந்து ஜமீன் காரை அண்ணாஜிராவ் ஓட்ட, அவருக்குப் பக்கத்தில் லிலாராம் உட்கார்ந்திருந்தார். பின் ஸீட்டில் திரை மறைவில் நிரஞ்சன் படுத்துக்கொண்டிருந்தான்.

மாளிகையில் நந்தன் முதலானவர்கள் தாங்கள் கொண்டுபோய் வைத்த பிணம் அப்படியே அவ்வறைக்குள் இருப்பதாகவே நினைத்திருக்க, மாடியில் படுத்தபடி தங்கள் சூழ்ச்சி பலித்து விட்டதைக் கனவின் தோற்றத்திலும் கண்டு களித்துக்கொண் டிருந்தனர் இருவர்.

கார் அமிர்த குடீரத்தின்முன் சென்றதும் லிலாராம் கீழே இறங்கி, "மிஸ்டர் அண்ணாஜி ராவ்! இதுவும் நமது ஜமீனைச் சேர்ந்த பங்களாதான். இதில் ஒரு பென்ஷனர் தமது மனைவியுடன் வசித்துவருகிறார். அவர்களுக்குக்

குழந்தைகளில்லை. மிகவும் நம்பத் தகுந்தவர்கள். நாம் இந்த இடத்தில் நமது வாலிபனைப் பத்திரப்படுத்திவிடலாம்'' என்றார். ராயரும் அந்த ஏற்பாட்டுக்கு இசைந்தார்.

அமிர்த குடீரவாசியான பென்ஷன் சுப்ரதாஸ் வெளியில் வந்து லீலாராமை வரவேற்க, இவர் அவருக்கு அண்ணாஜிராவை அறிமுகம் செய்தார். பிறகு, "ஒரு காயம்பட்ட வாலிபனைக் கொண்டுவந்திருக்கிறேன். தங்கள் வீட்டில் வைத்துச் சில நாள் காப்பாற்றவேணும். ஆனால் இந்த விஷயம் ஜமீன் மாளிகைக்கோ, அண்டை அயலகத்தாருக்கோ, வேலையாட்களுக்கோ சிறிதும் தெரியக்கூடாது'' என்றார். இன்னும் ஏதோ குறிப்பாய்ச் சில வார்த்தைகளும் சொன்னார். சுப்ரதாஸ் சந்தோஷமாகச் சம்மதித்தார்.

பிறகு அண்ணாஜி ராவும் லீலாராமும் சேர்ந்து நிரஞ்சனை இருபுறமும் பிடித்தபடியே மெள்ள அமிர்த குடீரத்திற்குள் அழைத்துச் சென்று வசதியான ஓர் இடத்தில் இருக்கச் செய்தார்கள். லீலாராம் அமிர்த குடீரத்திலே இருந்த டெலிபோன் மூலம் சிறிது நேரம் பேசியபின் ராயரிடம், "இன்னும் கால் மணி நேரத்தில் டாக்டர் ரமேசம் வருவார்'' என்று கூறினார்.

அண்ணாஜி ராவ்:—டாக்டர் ரமேசமா?

லீலாராம்:—ஆம், மிகவும் கெட்டிக்காரர். ஜமீன் மாளிகைக்கு அவர்தான் டாக்டர், கைராசி உள்ளவர்.

சுப்ரதாஸ்:—ஏன், சொல்லப்போனால், இந்தச் சந்திரபுரியிலேயே அவர்தான் மிகவும் கியாதிபெற்றவர்.

லீலாராமும் சுப்ரதாஸும் அவ்வறையிலிருந்து டாக்டர் வரவை எதிர்பார்த்து வெளியில் செல்லவும், அண்ணாஜிராவ் "நிரஞ்சன்'' என்று கூப்பிட்டார்.

நிரஞ்சன் கண்விழித்துப் பார்த்தான்.

அண்ணாஜிராவ்:—உன்னை அவ்விருவரும் நடுவழியில் இறக்கி அக்கூட்டத்தாரிடம் ஒப்படைத்த பொழுதே அவர்கள் உன்னைக் கொலைசெய்து விடுவார்கள் என்று உனக்குத் தெரியுமா?

நிரஞ்சன் தெரியுமென்பதற்குப் பாவனையாக 'உம்' என்றான்.

அன்னாஜிராவ்:—அப்படியானால் நீ ஏன் அவர்களுடன் போகச் சம்மதித்தாய்?

நிரஞ்சன்:—ஆனாலும் நான் போகவேண்டி யிருந்தது.

அவன் குரல் கிணற்றுக்குள் இருந்து பேசுவது போல் அவ்வளவு மெலிந்திருந்தது. அவன் அப்படிச் சொன்னதும் அன்னாஜிராவ் தலையை மேலும் கீழும் ஆட்டிவிட்டுச் சிந்தனையில் ஆழ்ந்தார்.

லீலாராம் அவ்விடம் வந்து "டாக்டர் வந்துவிட்டார்" என்று சொல்லவே, அன்னாஜிராவ் டாக்டரைப் பார்க்கச் சென்றுவிட்டார்.

டாக்டர் நிரஞ்சனுக்குச் செய்ய வேண்டியதை யெல்லாம் செய்துவிட்டுப் புறப்பட்டபோது ராயரும் டாக்டருடன் புறப்பட்டார். "நான் அங்கிருந்து என் பெட்டி, படுக்கைகளை எடுத்துக்கொண்டு, இன்னும் சில வேலைகளையும் முடித்துக்கொண்டு, பத்து மணிக்கெல்லாம் அமிர்த குடீரம் வந்து சேருகிறேன்" என்றார்.

லீலாராம்:—பத்து மணிக்குத் தங்களை அழைத்துவர, சுப்ரதாஸின் கார் டாக்டர் மாளிகைக்கு வந்து சேரும். நானும் சீக்கிரம் ஜமீன் மாளிகைக்கு விருந்தாளிகளைக் கவனிக்கப் போகவேணும்.

அன்னாஜிராவ்:—சரி; முன் தெரிவித்தபடி வக்கீல் வந்து பார்த்த பிறகுதானே அடக்கத்திற்கு ஏற்பாடுகள்?

லீலாராம்:—ஆம், நான் இன்னும் அரை மணிக்குள் லாயருக்குத் தந்தியடித்து விடுகிறேன். அவர் வந்த பிறகுதான் யாவும். அது மட்டும் அந்த அறையின் கதவைத் திறப்பதில்லை. இதோ சாவி என்னிடமே பத்திரமாக இருக்கிறது. சிறு சந்தேகத்திற்கும் இடமின்றி நடந்துகொள்வேன். ஆனால் அவர்களுடைய ட்ரைவர் காணப்படாததுதான் அவர்களுக்கு அதிக ஆச்சரியத்தை உண்டுபண்ணும்.

"ஆம், கட்டாயம் ஆச்சரியத்தில் மூழ்கிவிடுவார்கள். சரி, நான் புறப்படுகிறேன்" என்று சொல்லி டாக்டருடன் ஓடிப்போய்விட்டார் அன்னாஜிராவ்.

போனவர், கரிமை ட்ரைவர்-உடை அணியச் செய்து நிரஞ்சனைப் பத்திரமாகக் கவனித்துக்கொள்ள என்ன என்ன செய்யவேண்டு மென்பதையும் கூறி, அவனை அமிர்த குடீரத்திற்கு அனுப்பினார்.

ராயரின் கட்டளையைச் சந்தோஷத்துடன் ஏற்றுக் கொண்ட கரீம், "எஜமான், அமிர்த அம்மாளைப் படுக்கையில் எடுத்துவிடச்சே, அந்தம்மாளின் இடுப்பிலிருந்து இந்தக் கவரும் அதனுள்ளிருக்கும் இந்தக் கடிதமும் கசங்கியபடி கிழே விழுந்தன. ஆனால் இது ஏதோ தாறுமாருன நம்பர்கள் குறித்திருக்கும் கணக்குக் கடிதமாக இருந்தாலும் தங்களிடம் காட்டிவிட்டுக் கிழித்து எறிந்துவிடலாமென்று வைத்திருக்கிறேன்" என்று ஒரு நீலநிறக் கவரைக் கொடுத்தான்.

அக்கவரின் உள்ளிருந்த கடிதத்தைப் பிரித்துப் பார்த்த ராயர், "கரீம்! நீ நல்ல வேலை செய்தாய். சபாஷ்! அந்த கொலையின் ரகஸ்யம் இதில் இருக்கலாம்" என்ருர். கரீமின் முதுகில் தட்டிக்கொடுத்தார். அக்கடிதத்தைக் கவருடன் பத்திரப்படுத்திக் கொண்டார்.

கரீம் அமிர்த குடீரத்திற்குப் புறப்பட்டான். ராயர் டாக்டருடன், அமிர்தா இருந்த இடத்திற்குச் செல்ல, அவ்வறையில் அமிர்தா ஒரு கட்டிலில் தன்னை மறந்து பிதற்றல் ஏதுமின்றி நிம்மதியாக உறங்கிக்கொண்டிருப்பதை ஒரு நிமிஷ நேரம் பக்கத்தில் நின்று பார்த்துக்கொண்டிருந்தார். "பாவம்! இப்பொழுதுதான் நிம்மதியுடன் இருக்கிருள்" என்ருர் மெதுவாய்.

டாக்டர் அமிர்தாவைப் பரிசோதனை செய்து அவ்வறையை விட்டுச் சென்ற பின் அண்ணாஜிராவ் ஒரு ஸோபாவில் அமர்ந்து நிதானமாய் நடந்த விஷயங்களைப் பற்றி எண்ணினுர். அப்பொழுதுதான் முக்கியமாய் ஒரு விஷயத்தை மறந்து விட்டது அவரது நினைவிற்கு வந்தது. உடனே ஒரு கடிதத்தை எடுத்து அதில்,

"மோகன் மாளிகையில் சாந்தி உயிருடனிருந்தால் பத்திரமாகப் பாதுகாக்க வேணும். அருந்தக்கூடிய பதார்த்தத்தில் உஷாராக இருக்க வேணும்" என்று குறித்துக்கொண்டு, நேரே தந்தி ஆபீசுக்குச் சென்று தாம் குறித்துக்கொண்டு வந்தபடி தந்தி யடித்துவிட்டுத் திரும்பி டாக்டர் மாளிகைக்கு வந்து சேர்ந்தார்.

அது மட்டும், ராயராகவே நிரஞ்சனைப் பற்றிச் சொல்லுவார் என்று எதிர்பார்த்திருந்தான் இராகுலன். ஆனல் அண்ணாஜிராவ் வாயைத் திறக்காமல் இருக்கவே அவன் பொறுமை இழந்தவனுய் அவர்

அருகில் வந்து, "எஜமான்! அந்த வாலிபன் சுகமாக இருக்கிறானா?" என்று விசாரித்தான். ராயர் இராகுலன் முகத்தை உற்றுப் பார்த்தபடி, "உன்னிடமிருந்து, அந்த கண்டத்திலிருந்து, அவனைக் காப்பாற்றிய கடவுள் இன்னமும் அவனைக் காப்பாற்றமாட்டாரா? ஆமாம், இராகுலா! அவனும் இந்த அம்மாளைப்போலவே தூங்கிக் கொண்டிருப்பான். அவனைக் கவனித்துக்கொள்ளத் தான் கரீம் போயிருக்கிறான். அதிருக்கட்டும், நீ காலையில் ஏதேனும் ஆகாரம் சாப்பிட்டாயா?" என்று கேட்டார்.

இராகுலன் :—சாப்பிட்டேன் ஐயா! கரீம்தான் இதே வீதியின் கோடியிலுள்ள ஹோட்டெலுக்கு அழைத்துப் போனான். நாங்களிருவரும் சாப்பிட்டு வந்தோம்.

அன்னாஜிராவ் :—சரி. ஆனால் குடிக்கும் வழக்கமிருந் தால் இங்கிருக்குமட்டும் குடிக்கப் போய்விடாதே. குடித்தால் அது உனக்கு அநர்த்தமாய் முடியும்.

இராகுலன் :—இல்லிங்க, நான் குடிக்கமாட்டேன்.

அன்னாஜிராவ் :—இந்தா இந்த அஞ்சு ரூபாயை வைத்துக்கொள் செலவுக்கு.

இராகுலன் :—வேண்டாம், எசமான்! நான் அந்த ஆசாமிகளிடமிருந்து வாங்கிக்கொண்டதில் நூறு ரூபாய் அப்படியே என்னிடம் இருக்குதுங்க.

அன்னாஜிராவ் :—இருந்தால் அப்படியே அதை என் பெட்டிக்குள் பத்திரமாக வைத்துவிடு. ஏனெனில் கையில் அதிகப் பணத்தை வைத்துக்கொள்வது அவ்வளவு உசிதமன்று. நான் கொடுப்பதைச் செல வுக்கு வைத்துக்கொள். நீ திரும்பிப் போகும்போது உன் நூறு ரூபாயுடன் நான் கொடுக்கும் ரூபாயையும் எடுத்துப் போகலாம்.

என்று சொல்லித் தமது பெட்டியின் சாவியை அவனிடம் போட்டார்.

ஒரு போக்கிரிக் கூட்டத்திற்குத் தான் தலைவனென்று நன்றாக அறிந்திருந்தும், தன்னை நம்பிப் பெட்டிச் சாவியையும் கொடுத்துவிட்டாரே!—என்று எண்ணிய இராகுலன் அப்படியே சில விநாடிகள் அசைவற்று நின்றுவிட்டான்.

அதைக் கண்ட அண்ணுஜிராவ்," என்ன, இராகுலா! உன்னை நம்பிப் பெட்டிச் சாவியைக் கொடுத்துவிட்டதற்காகவா அப்படிப் பிரமித்துவிட்டாய்? அதில் பிரமிப்பதற்கு ஒன்றும் இல்லை. நீ ஆணையிட்டு என்னை எப்படி நம்பி வந்தாயோ, அப்படியே நானும் உன்னை நம்பி விசுவாசிப்பதில் அதிசயப்பட ஒன்றுமில்லை. பெட்டியைத் திறந்து பணத்தைப் பத்திரமாய் அதில் வை. ஆனால், பெட்டியை மூடித் திறக்கும்போது, சிறு துண்டுக் கடிதமானலும் வெளியில் தவறவிடாதே" என்ருர்.

இராகுலன், "பிரபுவான தங்களை நான் நம்பியது பிரமாதமில்லைங்க. ஆனல் கொலை பாதகனை என்னை நீங்க இப்படி நம்பிட்டீங்களே! எனக்கு ரொம்பவும் அதிசயமா இருக்குங்க......என்னிக்கும் நம்பிக்கையுடன் நடந்துகொள்ள ஆண்டவன்தான் எனக்கு அருளணும். இந்த நாய் ஆண்டவனிடம் கேட்டுக்கொள்வது அது ஒண்ணுதானுங்க!" என்று சொல்லிச் சாவியுடன் பெட்டி இருக்குமிடத்திற்குச் சென்ருன். அவன் அவ்விதம் கூறியபோது, கண்களில் நீர் நிறைந்தது. பிறகு ராயர் தமக்கு முன்னுலிருந்த மேஜையின்மேல் அமிர்தாவிடமிருந்து கீழே விழுந்ததாகக் கூறிக் கரீம் கொடுத்த கடிதத்தை எடுத்துப் பிரித்து வைத்துக்கொண்டு அதிலுள்ளதைப் படிக்க முயன்ருர். அந்த மர்மக் கடிதத்தில் கீழ்க் கண்டபடி எண்கள் குறிக்கப்பட்டிருந்தன:

10—3× ×14—1× ×15—1=,
11—2× × 4—3=,
8—8× × 8—3=17.

10=6× × × 4= 9× × ×1=1× × ×18=9× × ×
12=3× × ×14=13× × ×1=3× × ×13=1× × ×
19=2× × ×13= 1× × ×6=3× × × 8=1× × ×

..............................................................
..............................................................
..............................................................

1=3× × ×10=13× × ×10= 1×
4=1× × × 9=13× × × 8= 3×
4=1× × ×11= 4× × ×19=13×
4=1× × ×11=13× × ×10= 5×

இப்படியாக வெறும் எண்ணிக்கையாகவே காணப்பட்ட அக் கடிதத்தின் ரகஸ்யத்தை அறியக் காலை மணி பத்தடிக்கும் வரையில் எப்படி எப்படியோ சிந்தனை

பண்ணியும் ராயரால் ஒன்றையும் கண்டுபிடிக்க முடிய வில்லை. ஆகவே அவர் தமது மூளையில் அதன் விவரம் அச்சமயம் சிறிதும் புலப்படாதென்று சலிப்படைந்த வராய் அக் கடிதத்தை மடித்துப் பத்திரப்படுத்திக் கொண்டார்.

அச்சமயம் அமிர்தா புரண்டு கொடுத்துச் சற்று நேரத்திற்கெல்லாம் கண்களைத் திறந்து பார்த்தாள். உடனே அவள் திருஷ்டியில் ராயர் தென்பட்டார்.

அமிர்தாவின் ஆலோசனைக் கிடங்கொடாமல் ராயர், "அம்மா! உன்னையும் நிரஞ்சனையும் காப்பாற்றப் பகவான் தான் என்னை நேற்றிரவு கொண்டுவந்து சேர்த்தார். ஏதாவது தெரிந்துகொள்ள வேணுமானல் கேளுங்கள்" என்ருர். அமிர்தா கண்களை அகல விரித்து, "நாம் இருக்குமிடம்......?" என்று கேட்டாள்.

அண்ணுஜிராவ் :—இது சந்திரபுரியிலுள்ள டாக்டர் ரமேசம் மாளிகை.

அமிர்தா :—ஆ......சந்திர புரி......யா......?

அண்ணுஜிராவ் :—அம்மா! என்னைக் கண்ட பிறகு கூட நீங்கள் திகிலுக் கிடங் கொடுக்கலாமா? மிக்க அபாயத்தில் சிக்கிய நீங்களே பிழைத்திருக்கும்பொழுது ......அந்த வாலிபர்......நிரஞ்சன்மட்டும் காப்பாற்றப் படாமல் இருப்பாரா? சத்தியமே ஜயம், பயப்படாதே யுங்கள். (முகமலர்ச்சியுடன் சிறிது சிறிதாயும், அன்பு ததும்பவும் கூறினர்.)

அமிர்தா :—அப்........ப......டியா? உண்மையில் அவர் உயிருடன் இருக்கிருரா?

அண்ணுஜிராவ் :—ஆம், நீங்களும் நானும் இப் பொழுது எப்படி உயிருடன் இருக்கிருேமோ, அப்படியே நிரஞ்சனும் அமிர்த குடீரத்தில் இருந்து வருகிருன். என் வார்த்தையை நீங்கள் நிச்சயமாய் நம்புங்கள்.

அந்த உறுதி மொழியைக் கேட்டதும் தன் இரு கைகளையும் கூப்பிக் கண்களை மூடினுள். அவளது மனம், மகா பயங்கரமான ஆபத்திலிருந்து நிரஞ்சனைப் பிழைப் பித்ததற்காகக் கடவுளைத் துதித்ததெனச் சொல்லவும்

வேண்டுமா? அப்பொழுது அவள் கண்களிலிருந்து கண்ணீர் பெருகித் தலையணையை நனைத்தது.

இராகுலன் வந்து 'கார்' வந்துவிட்டதாய்க் கூறினன். அண்ணஜிராவ் அமிர்தாவை நோக்கி, "நான் இப்பொழுது நிரஞ்சனிருக்கும் அமிர்த குடீரம் செல்ல வெணும். வரக்கூடிய நிலையில் உன் உடம்பு இருந்தால் நீயும் வரலாம்" என்று மேலும் கூறுமுன் அமிர்தா, "ஆம், நானும் வருகிறேன்" என்று எழுந்திருக்க முயன்ருள். ஆனல் அவள் மிகவும் பலவீனப்பட்டிருந்த படியால் எழுந்திருக்க முடியவில்லை. அதை உணர்ந்த ராயர் அவள் எழுந்திருந்து உட்காருவதற்குச் சற்று உதவிசெய்யவே, அமிர்தா படுக்கையில் உட்கார்ந்து கொண்டாள்.

அச்சமயம் அவ்விடம் வந்து சேர்ந்த டாக்டர், அமிர்தா உட்கார்ந்திருப்பதைக் கண்டு, "இப்பொழுது எப்படியம்மா இருக்கிறது உடம்பு?" என்று விசாரித்து விட்டுத் தமது பரிசோதனைக் குழாயால் (Stethoscope) சோதித்துப் பார்த்துச் சந்தேகத்தை நிவர்த்தி செய்து கொண்டு, "இப்பொழுது உடம்பு சரியான நிலைக்கு வந்துவிட்டது. என்ருலும், நொந்த உடம்பு, பலவீனமான நிலை, இன்னும் இரண்டு தினங்கள் பத்திரமாகவே யிருப்பதுதான் நலம்" என்ருர்.

அண்ணஜிராவ் :—விழித்துக்கொண்ட சமயம் நான் அருகிலிருந்தது நல்லதாயிற்று. இவள் இவ்வளவு சிக்கிரம் குணமடைந்ததைப் பற்றி மிகவும் சந்தோஷப் படுகிறேன். இப்பொழுது இவளையும் அழைத்துக் கொண்டுதான் அமிர்த குடீரம் போக உத்தேசித்திருக்கிறேன்.

டாக்டர் :—சரி, செய்யுங்கள், கம்பௌண்டரிடம் மருந்து அனுப்பிவைக்கிறேன்.

பிறகு ராயர் அமிர்தாவை மெல்ல நடத்தி அழைத்துக்கொண்டு காரில் ஏறச் செய்தார். இராகுலன் அண்ணஜிராவின் பெட்டி படுக்கைகளைக் கொண்டுவந்து வைத்து, மருந்துப் புட்டிகளையும் பத்திரமாய் வைத்துக் காரில் முன்ஸீட்டில் உட்கார்ந்து கொண்டான். ராயர் டாக்டரிடம் விடைபெற்றுப் புறப்பட்டார்.

## 18. சாபர் எங்கே?

காலை அஞ்சரை மணிக்கு மேல் படுத்துக்கொண்ட பகவன்தாஸும் பிரகாசமும் ஏழரை மணி சுமாருக்கு விழித்துக்கொண்டனர். பிறகு கேசவன் அவர்களைச் சிற்றுண்டி அருந்தும் இடத்திற்கு அழைத்துச் சென்றான்.

அவ்விடம் தங்கள் வரவை லிலாராம் எதிர்பார்த்திருப்பதைக் கண்ட பகவன்தாஸ், "ஓ, நாங்கள் களைப்பினால் வெகு நேரம் நித்திரை போய்விட்டோம்" என்றார் உபசாரமாய்.

லிலாராம் :—அதற்கென்ன பரவாயில்லை. நீங்கள் இரவு முற்றும் கண்விழித்து வந்தவர்கள். அதற்கு இன்று பகலில்கூடச் சற்று ஓய்வு எடுத்துக்கொள்வது நலம்.

பிரகாசம் :—ஆனால் நாங்கள் பகலில் நித்திரை செய்யும் வழக்கம் வைத்துக்கொள்ளவில்லை.

அதற்கு லிலாராம் பதில் ஒன்றும் சொல்லாமலிருக்கவே, மூவரும் தங்களுக்கு வைக்கப்பட்டிருந்த சிற்றுண்டிகளைச் சாப்பிடுவதில் ஈடுபட்டனர்.

பிறகு மூவரும் அவ்வறையை விட்டு ட்ராயிங் ரூமுக்கு வந்தமர்ந்ததும் பகவன்தாஸ் லிலாராமைப் பார்த்து, "இனிப் பிரேத அடக்கத்திற்கு ஏற்பாட்டைத் துவக்கவேண்டு மல்லவா? அதிகமாக வைத்துக்கொள்வதும் உசித மல்ல. ஏற்கெனவே இரண்டு நாட்கள் ஆன பிணம் நாறத் துவக்கிவிடும்" என்றார்.

லிலாராம் :—ஆம், சீக்கிரமே அந்த விஷயத்தைத் முடித்துவிட வேணுமென்பதுதான் எனது அவா. ஆனால் ஜமீன் வக்கீல் வந்து பிரேதத்தைப் பார்வையிட்ட பிறகுதான் நாம் அதை அடக்கம் செய்யவேணும். அதுதான் தாமதம்!

பகவன்தாஸ் :—ஜமீன் வக்கீல் வந்து எதற்குப் பார்க்கவேணும்? அவர் பார்க்கவேண்டியது அவ்வளவு முக்கியமா? நாம் பார்த்ததில் தவறுதல் ஏற்படுமென்றா?

லீலாராம் :—அப்படியல்ல; ஜமீன் நிர்வாகத்தை நான் இங்கிருந்து கவனித்துக்கொண்டு வந்தாலும், ஜமீன் சம்பந்தப்பட்ட விஷயங்களை நானாகச் செய்துவிட முடியாது. அவ்வளவு சுதந்திரம் எனக்கிருக்கவில்லை. நான் சாதாரணமல்லாத எவ்விஷயங்களையும் வக்கீலைக் கலந்தே செய்ய வேண்டியவன். மேலும், மேற்படி வாலிபனை அவர் நேராகவே ஒரு முறை பார்த்தவர். ஆகவே அவர் வந்து பார்த்து இறந்தவன் அவ்வாலிபன் தான் என்று சொல்லிவிட்டாரானால் நமக்குச் சள்ளை இல்லை. மேலும் இரண்டொரு நாளில் ஜமீனை ஒப்புவிக்க வேண்டிய விஷயங்களுக்கு அவர் வராமல் முடியா தல்லவா? இரண்டு நாள் பின்னால் வருவதற்கு, முன்னதாகவே வந்துவிட்டாரானால் பின்னால் யாதொன்றுக்கும் சங்கைக் கிடமில்லாது போகும். இல்லையா? வக்கீல் வந்து பார்த்தால்தான் எல்லாவற்றுக்கும் அனுகூலம்.

பகவன்தாஸ் லீலாராம் சொல்லிய விஷயங்களைப் பற்றி ஒரு நிமிஷம் யோசனை செய்தபின், "ஆனால் ஜமீன் வக்கிலுக்கு விஷயம் தெரியப் படுத்தியாச்சா?" என்றார்.

லீலாராம் :—ஆஹா! அரை மணி முன்புதான் தந்தி அனுப்பினேன். அநேகமாய் மாலையில் வரலாம்.

பகவன்தாஸ்:—ஒ, அப்படியானால் அநேகமாய்ப் பிரேத அடக்கம் நாளைக் காலையில்தான்.

லீலாராம் :—அப்படித்தான் தோன்றுகிறது. பின்னிட்டு உங்களுக்கும் சரி, எனக்கும் சரி, ஒரு சிக்கலும் இருக்கக் கூடாது. அதற்காகத்தான் நாம் சந்தேகத்திற்கே இடங்கொடாமல் நமது கடமைப்படி நடந்துவிட வேண்டி யிருக்கிறது. பொறுப்புக்குத் தக்க கடமையும் இருக்கிறதல்லவா?

பகவன்தாஸ் :—ஆம், ஆம், கடமையிலிருந்து மயிரிழைகூடத் தவறுவது மகா தவறு. அது ஒரு போதும் கூடாது.

லீலாராம்:—தாங்கள், கடமையை ஒழுங்காக நடத்தித் தீரவேணு மென்ற மனப்பான்மை யுடையவ ரென்பதை நானும் நன்குணர்ந்துகொண்டேன். இல்லாவிட்டால் அந்த வாலிபன் விஷயம் பராபரியாய்க் காதில் விழுந்ததும், அவனைத் தேடிச் செல்வீர்களா? அப்படிச் செல்லு முன்பே அவன் தனது வினையால் கொல்லப்பட்டுக் கிடக்க, அந்த ஒரு கடமையைக் கடைப்பிடித்துத் தானே

இவ்வளவு கஷ்டங்களையும் பாராது அப் பிரேதத்தை இங்கே கொண்டுவந்து சேர்த்தீர்கள்? இவ்வளவு தூரம் நியாயப்படி நடக்கும்போது, குடும்ப வக்கில் வந்து பார்த்து நமக்கொரு திருப்தி யளிப்பதுடன் மற்ற விஷயங்களையும் சிக்கலில்லாது ஒழுங்காக ஒப்புவித்து விடுவார். இவ்விஷய மெல்லாம் நீங்கள் படுக்கைக்குச் சென்ற பின் ஆலோசனை செய்து பார்த்துத்தான் வக்கிலுக்குத் தந்தி யடித்தேன். ஏன், அது ஒருவேளை தங்களுக்கு சம்மதமாக இல்லையோ?

பகவன்தாஸ் :—அப்படியல்ல, நீங்கள் செய்தது ரொம்பவும் சரியானதுதான். தவிர, வக்கில் வந்து பார்ப்பதிலோ, மற்றவர் வந்து பார்ப்பதிலோ எங்களுக்கு ஒரு வித ஆக்ஷேபனையு மிருக்க நியாயமில்லையே!

பிரகாசம்—அதுவரையில் மௌனமாக இருந்தவர் அப்பொழுதுதான் வாய் திறந்தார்—"அவருக்குச் சொல்லவேணுமோ? அவருக்கே அது தெரிந்த விஷயந் தானே" என்று தலையை ஆட்டிக்கொண்டு கூறினார். ஆனால் அவரது மனம் ஏதோ பலத்த சிந்தனையில் ஈடுபட்டிருந்தது. அதை உணர்ந்துகொள்ளப் பெரிய ஜமீன் நிர்வாகத்தை வகிப்பவரும், ஆழ்ந்த கருத்துடன் நிதானமாய்ப் பழகுபவருமான லீலாராமுக்கு அதிக நேரம் செல்லவில்லை. அத்துடன் அவர் பகவன்தாஸ் முகத்தையும் ஊன்றிக் கவனித்துக்கொண்டார். ஆனால் பகவன் தாஸுக்கோ, பிரகாசத்துக்கோ லீலாராம் தங்களைக் கூர்ந்து கவனிக்கிறார் என்பது துளிகூடத் தெரியாது. ஆம், லீலாராம் மனத்தில் எத்தனை ஆலோசனைகள் இருந்தாலும் அவரது பார்வையில் அந்த நிதானம் தவறுவதே யில்லை. அதனால் பிறர், தம்மைப் பற்றி அவர் என்ன நினைக்கிறார் என்பதை லகுவில் அறிந்து கொள்வது சாத்தியமில்லை.

அவ்விடம் சிறிது நேரம் மௌனம் நிலவியது. பிறகு பகவன்தாஸ்தான் பேசினார். "நேற்றைய சிரமம் இப்பொழுதுதான் தெரிகிறது. இன்று சற்று ஒய்வு எடுத்துக் கொள்ளவும் போதிய நேரமிருக்கிறது."

லீலாராம் :—ஆம், வேண்டிய அளவு நேரமிருக்கிறது.

என்று சொல்ல, அப்பொழுது கேசவன் அவ்விடம் வந்து பத்திரிகைகளை மேஜைமீது வைத்தான்.

அவனைக் கண்டதும் பகவன்தாஸ், "எங்கள் மோட்டார் ஒட்டி எங்கே?" என்று கேட்டார்.

கேசவன், "நான் அவனைக் காணவேயில்லை. இதோ மற்றவர்களை விசாரித்துச் சொல்லுகிறேன்" என்று கூறிச் சென்றான்.

அம்மூவரும் பத்திரிகையை எடுத்துப் புரட்ட ஆரம்பித்தனர்.

ஐந்து நிமிஷத்தில் கேசவன் திரும்பிவந்து, "உங்கள் சாபரைக் காணவில்லை. மற்றவர்களும் அவனைப் பார்க்கவில்லை என்று சொல்லுகிறார்கள்" என்றான்.

பகவன்தாஸ் :—என்ன? அவனைக் காணவில்லையா? அவனுக்கு இந்த இடம் புதிதாச்சே, எங்கும் போயிருக்க முடியாது. ஒருவேளை காரிலேயே படுத்திருக்கிறானோ?

கேசவன் :—காரிலும் பார்த்தாய்விட்டது, இல்லை.

பிரகாசம் :—இல்லை, அவன் எங்கும் போயிருக்க மாட்டான். வாருங்கள், நாமே போய்ப் பார்க்கலாம்.

லீலாராம் :—குழந்தையா, என்ன? எங்கும் போயிருக்க முடியாது. அப்படியே வெளியில் போயிருந்தாலும் தானே வந்துவிடுகிறான்.

பிறகு பகவன்தாஸும் பிரகாசமும் கேசவனும், ஏன், லீலாராமும் கூடத்தான் சாபரைத் தேடினர். ஆனால் சாபர் ஜமீன் மாளிகையில் காணப்படவில்லை.

மணி பத்தடித்தும் கூட, சாபர் வந்து சேரவில்லை. பகவன்தாஸும், பிரகாசமும் சாபரைக் காணாத மர்மம் புரியாமல் திகைத்தனர். அவர்கள் மனம் 'சாபர் எங்கே? அவன் எங்கே போயிருக்கக்கூடும்?' என்பதைப் பற்றியே திரும்பத் திரும்ப நினைத்துக் குழப்பத்தை அடைந்து கொண்டிருந்தது.

## 19. அந்தப் பயல்

அன்று பகல் ஒரு மணி சுமாருக்குச் சந்திரபுரி ஜமீன் மாளிகையின் மாடியறை ஒன்றில் பகவன்தாஸும் பிரகாசமும் நாற்காலிகளில் எதிரெதிராக அமர்ந்து தங்கள் சாபர் காணப்படாததைக் குறித்துப் பேசிக் கொண்டிருந்தனர்.

பிரகாசம் :—அவனது சாமான் பெட்டிகூட இவ்விடமிருக்கையில் அவன் மட்டும் எங்கே போயிருக்கக்கூடும்?

அவன் இப்படித் திடீரென்று காணுமலிருப்பது ஆச்சரிய மாகத்தான் இருக்கிறது.

பகவன்தாஸ் :—ஆம், இதில் ஏதோ மர்மம் இருக்க வேணுமென்று தோன்றுகிறது. ஆனல்......அந்த மர்மந்தானென்ன ?

பிரகாசம் :—மர்மம்.........உஹூம் எப்படி ?.........நம் பின்னுலேயே காரை ஓட்டி வந்திருக்கிறுன்.

பகவன்தாஸ்:—ஆம், அந்த நிரஞ்சனது பிரேதத்தைக் கூட ஒருபுறம் பிடித்து அவ்வறையில் போட்டான், நீயும் பார்த்திருப்பாயே !

பிரகாசம் :—பார்த்தேன். இருந்தாலும் பிரேதத்தை வைத்த பிறகு அவன் நம்மிடம் வந்து குறிப்பாக வாவது தான் வெளியில் போவதாய்ச் சொல்லிவிட்டுப் போயிருக்கலா மல்லவா ? அவனே இதற்கு முன் நம் மிடம் சந்திரபுரியைப் பற்றித் தனக்கொன்றுமே தெரியா தென்று கூறினன். அப்படி யிருக்க அவன் எவ்விடம் போயிருக்கக்கூடும் ?

பகவன்தாஸ் :—வெளியில் சென்றவன் இதுவரையில் திரும்பவே யில்லை !

பிரகாசம் :—ஹூம், போனவன் புதைந்தே போய் விட் டான்! இல்லை, காற்று விழுங்கி யிருக்கவேணும் !

பகவன்தாஸ் :—நீ என்ன வேடிக்கை செய்கிறுயா ? வேடிக்கைக்கு இதுவா சமயம் ?

பிரகாசம் :— வேடிக்கையா ? இல்லை, நீங்கள்தான் சொல்லுங்களேன், அவன் என்னவானன் ?

பகவன்தாஸ் :—அதுதான் மர்மமாக இருக்கிறது, நமக்குச் சிறிதுகூடப் புரியவில்லை. அத்துடன் தந்தி யாபீசுக்குப் போனதில் அந்த விஷயமும் நம் மனசைத் திகைக்கச் செய்து விட்டதே! இது வரையில் நமது புள்ளிகள் ........,................இப்பொழுது திடீரென்று சாபர் காணப்படாதது ஒரு கலக்கம், இரண்டாவது அவள் பிழைத்துக் கொண்டதுடன் இனி நெருங்க் முடியாத நிலை ஏற்பட்டதொன்று. ஆனல் அவளால் கவலை யில்லைதான். ஏனெனில் அவளுக்குச் சந்தேகமே தவிர ஊர்ஜிதமில்லை. குறுக்குக் கேள்வி ஏற்பட்டால் அவளே மாட்டிக்கொள்ள நேரிடும். ஆகவே அவள் வாய் திறக்க மாட்டாள்தான் !

பிரகாசம் :—எப்படிச் சொன்ஞலும், சாக்ஷி வேறு விதமாக ஏற்பட்டிருக்கிறது. அதை நீங்கள் கவனிக்க வில்லை.

பகவன்தாஸ் :—ஓ, ஆம், தொலைந்து போகிறது!

பிரகாசம் :—நமக்கு இதுவரையில் தெரியாமலிருந்த ஒரு விஷயம் அச்சிறு பெட்டியிலிருந்த கடிதங்கள் மூலமாகத் தெரிந்ததல்லவா?

பகவன்தாஸ்;—ஆம், ஆம், இதுவரையில் அவ்விஷயத்தைப்பற்றி நான் அணுவளவுகூடச் சந்தேகிக்கவில்லையே! எவ்வளவு சாமர்த்தியமாக நடந்துகொண் டிருக்கிறேன். ஆச்சரியம் தான்.

பிரகாசம் :—அது இருக்கட்டும். முதல் தடங்கல்—இன்னும் பிரேதம் அடக்கமாகவில்லையே!

பகவன்தாஸ் :—அதைப் பற்றித்தான் இவ்வளவு கவலையும்.

பிரகாசம் :—அதைப்பற்றிக் கவலை எதற்கு? இன்று அடக்கமாகாவிட்டால் நாளை ஆகிறது. வக்கில் இல்லை, அவன் முப்பாட்டன் வந்து பார்த்தால்கூட அந்தப் பேர்வழி என்று சொல்ல முடியாதோன்னே?

பகவன்தாஸ் :—அது முடியாது. அந்த ஆசாமியே தானே இவன். அதற்குச் சொல்ல வில்லை. நமது வேலை சிக்கிரத்தில் நமது எண்ணப்படி முடிந்து விட்டால் நலம். என் மனம் தளர்வடைவதற்கும் அவசரப்படுவதற்கும் காரணம் அந்தப் பயல் விஷயம்...........

பிரகாசம் :—அதான் நாம் கட்டிலோடு கட்டிப் போட்டு, அறையையும் பூட்டிக்கொண்டு வந்தோமே!

பகவன்தாஸ்:—ஆம், பூட்டிக்கொண்டுதான் வந்தோம்!

பிரகாசம் :—அதைப் பற்றி நாம் பயப்பட்டால் சுத்த மூடத்தனந்தான். அந்தத் துணிச்சல்-பயலுக்கோ இன்று காலை பத்து மணி வரையில் பிரக்ஞையே வந்திராது. இப்பொழுது தான் அவனுக்குப் பூரண சுயபுத்தியும் ஏற்பட்டிருக்கும். இவ்வளவு நேரம் வரிந்து கட்டப் பட்டிருந்த சுகத்தால் இப்படி அப்படிக்கூட உடலை அசைக்க முடியாதபடி, 'ஐயோ, அப்பா!' வென்று முனகிக்கொண்டிருப்பான். ஒரு வேளை அவன் முன்னெச்சரிக்கையாய்க் கடிதம் கொடுத்திருந்தால்கூடக் குறித்த நேரத்திற்குப்பின்தான் அவர்கள் அவனை விடுவிக்க

முடியும். அதுவும் இரண்டு பூட்டை உடைத்து உள்ளே செல்லவேணும். அதுவும் வந்தவன் கொஞ்சம் புத்திக் குறைவுள்ளவனுக இருந்தால் வீடு பூட்டப்பட்டுக் கிடக்கிறதே என்று திரும்பி விட்டால், அந்தப் பயல் பாடு இன்னும் திண்டாட்டம்தான். இந்த ரீதியில் அந்தப் பயல் அங்கே திண்டாடிக் கொண்டிருக்கையில் அவனைப் பற்றி நாம் பயப்பட வேண்டிய அவசியம்?

பகவன்தாஸ்:—ஒரு வேளை இன்று அவன் எப்படியோ சுயேச்சை அடைந்துவிட்டால், எப்படியாவது அந்த வேட்டை நாய் மோப்பம் பிடித்துக்கொண்டு, இங்கு வந்துவிடக்கூடிய அவ்வளவு சாமர்த்தியம்—அந்தச் சிறு பயலுக்கு இருக்குமா?—என்ற சந்தேகந்தான்!

பிரகாசம்:—சே, அவ்வளவு தூரத்திற்கு எங்கே, அவன் இன்னும் சிறு பயல்தானே. ஆனல் பேர்வழி இன்னும் பத்து வருஷம் ஆயுளோடு இருந்தானுனல் அத்தகைய சாமர்த்தியத்திற்கு வந்து விடுவான்தான்! ஆனல், இப்பொழுது அவ்வளவு சாமர்த்தியம் அவனிடம் கிடையாது. அது நிச்சயம். அவ்வளவு சாமர்த்திய மிருப்பவனுக இருந்தால் நம்மிடம் அவ்வளவு சுலபமாய்ச் சிக்கி யிருப்பானு?—என்பதை நினைக்கவில்லையே.

பகவன்தாஸ், 'உம்' என்று தலையை அசைத்து விட்டுச் சற்றுப் பொறுத்து, "இருந்தாலும் நாம் ஒரு பிசகு செய்துவிட்டோம்" என்ருர்.

பிரகாசம்:—என்ன பிசகு?

பகவன்தாஸ்:—என்ன பிசகா?......நாம் அந்தப் பயலைக் கட்டிப் போட்டிருக்கக்கூடாது. அவன் நம்மேல் குற்றம் சாட்டக்கூடியது அது ஒன்றுதான்.

பிரகாசம் சற்று நேரம் பேசவில்லை. ஆலோசனையிலிருந்த பிறகு, "ஆம், அது நமது அவசரத்தில் ஆலோசிக்காம லிருந்துவிட்டோம். ஆனல்......"

பகவன்தாஸ்:—ஆனல்......

பிரகாசம்:—அவன் நம்மை முழுவதும் குற்றம் சாட்டவும் முடியாது. நாம் கட்டினதாய் அவன் கூற முடியாது, சாக்ஷியும் இல்லை. நாம் கட்டினதை அவனே அறிந்துகொள்ளாம லிருக்கையில் நம்மேல் எவ்விதம் குறை கூற முடியும்?

பகவன்தாஸ்:—நாமிருந்த் வீட்டில் கட்டுப்பட்டுக் கிடந்தால் நம்மீது சந்தேகப்படாம லிருக்க முடியாதே!

பிரகாசம் :—அவன் கிட்டிமுட்டி வந்தால் எப்படியும் நமக்குத் தப்பிக்கொள்ள வேண்டிய இடமிருக்கிறது. அந்தப் பயலுக்காக இவ்வளவு தூரம் கவலைப்பட இடமே யில்லை. அவன் நாளையே இங்கு வந்தால்கூட அவன் மனசுக்குள்ளாக எதையாவது சந்தேகப்பட்டுக்கொண் டிருக்கலாமே தவிர, மற்றப்படி சிறு குற்றத்தைக்கூட நம்மீது ருசுவுடன் காட்ட முடியாது. ஆம், அவனது சந்தேகம் எதுவாக இருப்பினும் 'ஊமையன் கண்ட கனு' வாகவே முடியும். ஆகவே அந்த நாய்ப் பயலைப்பற்றிய வீண் சிந்தனைகளை விட்டுவிடலாம். இப்போது நாம் கவலைப் படவேண்டியதெல்லாம் நமது சாபர் எங்கேயாவது குடிக்கச் சென்றிருந்து அவனுக்கு அரை குறையாகத் தெரிந்திருக்கும் விஷயங்களை வெளியிட்டுத் துன்பம் விளை விக்காமலிருக்கவேணுமே என்பதுதான்.

பகவன்தாஸ் :—அவன்தான் குடிக்கும் வழக்கம் கிடையாதென்று கூறினுயே?

பிரகாசம் :—ஆம், இதுவரையில் அவன் குடித்தது கிடையாதுதான். இப்போது அவனைத் திடீரென்று காணுதிருக்கவே, ஒருவேளை பிறர் தூண்டுதலால் குடித்துவிட்டுக் கிடப்பானே?—என்ற சந்தேகங்கொண்டு கூறினேன். ஆனுல் குடித்தே வழக்கமில்லாத அவன் குடிக்க முடியாதுதான்!

பகவன்தாஸ் :—ஏன்? நாம் சற்று வெளியில் போய் வருவது நலமல்லவா ?

பிரகாசம் :—நானும் அதையேதான் எண்ணினேன். உம்......இந்த லிலாராமைப் பற்றி......பெருத்த அழுத் தக்காரன் என்பதே என் அபிப்பிராயம்.

பகவன்தாஸ் :—இருக்கட்டுமே, அதனுல் நமக்கென்ன? இன்னும் மூன்றே தினம்தானே, பிறகுமா......

பிரகாசம், "ஆம், மூன்று தினம்...." என்று தலையை ஆட்டினுன். அவன் மனசில் பல பல எண்ணங்கள் ஆழ்ந்து கிடப்பதை முகம் பிரதிபலித்தது.

மணி இரண்டடித்ததும் பிரகாசம் கேசவனிடம் தங்கள் காரைக் கொண்டுவந்து நிறுத்தும்படி கூற, கேசவன் சற்று நேரத்தில் காரைத் தயாராகக் கொண்டுவந்து நிறுத்தினுன். உடனே பகவன்தாஸும் பிரகாசமும் காரில் ஏறிக்கொண்டதும், பிரகாசம் காரைச் செலுத்தக் கார் ஜமீன் மாளிகையை விட்டுப் புறப்பட்டு மறைந்தது.

# 20. கடிதத்தின் மர்மம்

பகவன்தாஸும் பிரகாசமும் காரில் சென்ற அதே சமயம் அமிர்த குடீரத்தில் ஓர் அறையில் நாற்காலியில் அமர்ந்திருந்த ஸ்ரீவத்ஸா, தன் எதிரில் மேஜைமேல் ஒரு கடிதத்தை வைத்துக்கொண்டு ஆழ்ந்த கவனத்தைச் செலுத்திக் கொண்டிருந்தவர், திடீரென்று "ஆ, அப்படியா? பேஷ்" என்று மெல்லக் கூவினார். அதுவரையில் மூளையைக் கலக்க அடித்துக் கொண்டிருந்த விஷயம் கண்டுபிடிக்கப்பட்டதால், அவரது முகம் பிரகாசம் அடைந்திருந்தது.

உடனே அவர், எண்ணிக்கை குறிக்கப்பட்டிருந்த அந்த மர்மக் கடிதத்தை எடுத்து, முதல் எண்களின் முன் அ-னா, ஆ-வன்னா வரிசையை முதல் வரிசையாகக் கொண்டு, வரிசையாய் க-னா, ங-னாக்களை வரிசை எண்களாகக் கொண்டு அதன்படி முதல் எண்களின் முன் இத்தனாவது வரிசையில் இன்ன எழுத்து என்பதைக் குறித்து, அதற்கடுத்தபடி உள்ள எண்ணிக்கையின்

10 = 3 ××× 44 = 1 ××× 15 = 1 = ,<br>
ப = பி ××× ல = ல ××× வ = வ = ,<br>
11 = 2 ××× 4 = 3 = ,<br>
ம = மா ×××ச = சி = ,<br>
8 = 8 ××× 8 = 3 = 17 ,<br>
த = தே ××× த = தி = 17 ,<br>
10 = 6 ××× 4 = 9 ××× 1 = 1 ××× 18 = 9 ××<br>
ப = பு ××× ச = சை ××× அ = அ ××× ற = றை ××<br>
12 = 3 ××× 14 = 13 ××× 1 = 3 ××× 13 = 1 ××<br>
ய = யி ××× ல = ல் ××× அ = இ ××× ர = ர ××<br>
19 = 2 ××× 13 = 1 ××× 6 = 3 ××× 8 = 1 ××<br>
ன = னா ××× ல = ல ××× ட = டி ××× த = த ××

.....................................................................

.....................................................................

.....................................................................

1 = 3 ××× 10 = 13 ××× 10 = 1 ×<br>
அ = இ ××× ப = ப் ××× ப = ப ×<br>
4 = 1 ××× 9 = 13 ××× 8 = 3 ×<br>
ச = ச ××× ந = ந் ××× த = தி ×<br>
4 = 1 ××× 11 = 4 ××× 19 = 13 ×<br>
ச = ச ××× ம = மீ ××× ன = ன் ×<br>
4 = 1 ××× 11 = 13 ××× 10 = 5 ×<br>
ச = ச ××× ம = ம் ××× ப = பு ×

மேலே குறித்த எழுத்தின் வரிசையில் இத்தனைவது எழுத்து என்பதையும் மேல் கண்டபடி குறித்துக் கொண்டு வந்தார்.

மேற்கண்டபடி எண்ணிக்கைகளின் கீழ் எழுத்துக்களை எழுதிய பின், ஸ்ரீவத்ஸா படித்துப் பார்த்தார். அது எழுதிய ஒழுங்கின்படியே படித்தால் தத்தல் போன்ற பாஷையாக வரவே, மற்றொரு கடிதத்தை எடுத்து மேல் குறித்த கடிதத்தினின்றும் முதல் எண்ணிக்கையின் எழுத்தை விட்டுவிட்டு, அடுத்துவரும் எண்ணின் கீழ்வரும் எழுத்துக்களை மட்டும் எழுதிக் கொண்டுவந்தார். பிறகு அதைப் படிக்க, கீழ்க் காணும் வாக்கியங்கள் இருந்தன.

பிலவ
மாசி
தேதி 17

பூசை அறையில் இர
ணலடி தள்ளு பத்த
துர அறையில் முப்ப
வெள்ளி ரத்தினமும் கா
ட்டது. ஆனல் இதனை எ
டுத்துக் கை
றைந்து போனு
லொழிய எடு
யில் வம்சத்து வா
ர்சு தாரன்
க வேண்டும்
குறிப்பு மீ
றி அப்பொரு
ளை எ
உபயோகிக்
கக் கூடாது
இது பாட்ட
த கட்டளை
யும்

இ ப் ப
ச ந் தி
ச மீ ன்
ச ம் பு

மேற் குறித்த அரை குறையர்கக் காணப்பட்ட வாக்கி யங்களைப் படித்ததும் ஸ்ரீ வத்ஸா, "பலே, இந்த மர்மக் கடிதத்தின் மற்ருெரு பாதி மற்ருெருவர் கையிலிருப்பது நிச்சயம். ஆம், இக்கடிதத்தில் பாதி விஷயம் துண்டிக்கப் பட்டிருக்கிறது. இதன் மற்றைப் பாதி பாகத்தையும் சேர்த்துப் படித்தால்தான் அதன் முழுக் கருத்தையும் ஒருவன் புரிந்து கொள்ள முடியும்......இந்தக் குறிப்புக் கடிதத்திற்கும் மோகன் மாளிகைக் கொலைக்கும் உள்ள சம்பந்தம் என்ன? எப்படிப் பட்டது?......நாம் முதலில் மோகன் மாளிகை சென்ற சமயம் அங்கு நிகழ்ந்திருந்த கொலை தற்கொலை யல்ல வென்றும், பிறகு கொலையாளி மாளிகையினுள்ளிருந்தே சத்தமின்றிச் சுடும் துப்பாக்கி யால் சுட்டிருக்கவேணும் என்றும் தீர்மானத்திற்கு வந்தேன்......ஆனல் அதில் எவ்வளவு குழப்பம்! உண்மையில் கொலை செய்த பேர்வழி யார்?......இந்த அமிர்தா......அந்தச் சாந்திக்கு இதில் எவ்வளவு தூரம் தெரியும்? ஆனல் அவள் ஒன்று மறியாதவள்போல் நடந்து கொண்டது உண்மையா, நடிப்பா? ஆம், அப் படித்தான் இருக்கவேணும். அவளுக்கு நிச்சயமாய்த் தெரியாத விஷயத்தில் முன் எச்சரிக்கையாய் பீதி அடைந்திருக்கலாம். அப்பா, எனினும் இதில் சிக்கல் அதிகம். வர வரச் சிக்கல் அதிகரித்து வருகிறதே தவிர, சிக்கெடுபடவில்லைதான்! இருந்தாலும் நான் தவறுத லான பாதையில் செல்லவில்லை....ஆம், நான் டெபுடிக்கு அருணு, சாந்தி இருவருடனும் நாளை புறப்பட்டு வரும் படி தந்தி கொடுத்துவிடுகிறேன்" என்று பலவிதமான எண்ணத்திலிடுபட்டிருந்தார். பின், தந்தி பாரத்தில் ரகஸ்யக் குறிப்பில் சிலவற்றை எழுதிக் கரிமிடம் கொடுத்து அதைத் தந்தி மூலம் அனுப்பிவிட்டு வரும்படி அனுப்பினர். அவ்வுண்மையான வேலையாள் அவர் கட்டளையைச் சிரமேற்கொண்டு சென்ருன்.

கரிம் சென்றதும், ஸ்ரீ வத்ஸா அவ்விடத்தைவிட்டு அமிர்த குடீரத்தின் மற்ற இடங்களைப் பார்த்துக் கொண்டே வந்தார். அப்படி வருகையில் வரவேற்பு-அறையின் எதிர்ப் புறமுள்ள ஒரு ஹாலை அடையவும் அந்த ஹாலின் சுவர் மத்தியில் மாட்டப்பட்டிருந்த ஒரு போடோவைப் பார்த்ததும் அப்படியே திடுக்கிட்டு விட்டார். தம் கண்களை நம்பாதவர் போல அப் படத்தினருகிலேயே நின்று அதை வெறிக்கப் பார்த்த படி யிருந்தார்.

அப்படம் ஒரு யுவதியினது. படத்தில் காணப்பட்ட் யுவதிக்கு சுமார் பதினேழு வயதிருக்கலாம். அப்படத்தி னடியில் குறிப்பிட்டிருந்த தேதியினுல் அப்படம் எடுத்து இருபத்திரண்டு வருஷங்களும் மூன்று மாதங்களும் ஆகிவிட்டன என்று தெரிய வந்தது. அந்தத் தேதி அதில் குறிப்பிடப்படாம லிருந்தால் ஸ்ரீவத்ஸா அப்படத்திலிருப்பது நமது கதா நாயகியான அமிர்தாதான் என்று எண்ணி யிருப்பார், ஆம், அப் படத்தை நாம் பார்ப்போமாயினும் அது நிச்சயம் அமிர் தரவின் படம்தானென நினைப்போம். அமிர்தாவின் உருவத்திற்கும், அப் படத்திலுள்ள உருவத்திற்கும் அவ்வளவு ஒற்றுமை காணப்பட்டது.

அப்படத்தைக் கண்டு அதிசயித்தபடி ஸ்ரீவத்ஸா நிற்கையில் அவ்விடம் வந்த சுப்ரதாஸ், "அந்தப் படத்தி லிருப்பது யார்? — என்று சிந்திக்கிறீர்களா?" என்று கேட்டார்.

ஸ்ரீவத்ஸா :—ஆம், இப்படத்தின் விவரத்தைச் சொல்லத் தங்களுக்கு ஆக்ஷேபனை இல்லை என்ருல், நான் கேட்கத் தயார்.

சுப்ரதாஸ் :—ஆக்ஷேபனை ஏதும் இல்லை. ஆனால் அவள் இப்பொழுது உயிருடன் இல்லை, படத்திலிருப் பவள் எனது ஒரே குமாரியே. இவளுக்குப் பதினெட்டு வயதாக இருக்கையில் நாங்கள் விமலபுரியில் இருந்தோம். அச்சமயம் சந்திர கிரகணத்தன்று யாவரும் கடற்கரைக் குச் சென்று கடலில் நீராடினேம், பிறகு நாங்கள் கரை ஏறும்பொழுது நானும் எனது மனைவியுமே கரை ஏறி னேம். சமுத்திர ராஜனுக்கு எங்கள் அருமைக் குமாரி ஸுகுணை இரையானாள். அஞ்சு நாளுக்குப் பின் எட்டு மைல்களுக்கப்பால் பிரேதம் அகப்படத் தகனம் செய்து விட்டு வந்து சேர்ந்தோம். இப்படம் அவள் கடலுக் கிரையாக நாலு மாதங்களுக்குமுன் எடுக்கப்பட்டது. (அவரது நெஞ்சம் துயரத்தால் அடைபட்டது.)

ஸ்ரீவத்ஸா :—த்ஸு, த்ஸு, த்ஸு, மிக்க பரிதாபம்!... ஆனுல் இப்படத்தைக் கண்டதும் நான் மிக்க ஆச்சரிய மடைந்துவிட்டேன்.

சுப்ரதாஸ் :—ஆம், உங்களது ஆச்சரியத்தைப் போலவே, நீங்கள் அக்குழந்தை அமிர்தாவுடன் வந்த வுடனேயே அவளைக் கண்டு நானும் என் மனைவியும் எங்கள் ஸுகுணாவின் சாயல் அப்படியே அவளுக்கு

அமைந்திருப்பதை க்ஷணத்தில் அறிந்து அதிசயப்பட்டோம். அதிலிருந்து என் மனைவி, சற்று மறந்திருந்த ஸுகுணாவின் நினைவை, மறுபடியும் அடைந்து இருபத்திரண்டு வருஷங்களுக்குமுன் கண்ட என் குழந்தையை அதே இளமையில் மறுபடியும் காண்கிறேன் என்று கூறுகிறாள். எனக்கும் ஆச்சரியமாகத்தானிருக்கிறது. இருபத்திரண்டு வருஷங்களுக்கு அப்புறம் எனது சுகுணாவைப் போன்ற அதே சாயலில் ஒரு பெண்ணைப் பார்ப்பதென்றால் ஆச்சரியமாக இராதா? தாங்களும் அந்தக் ஒற்றுமைக்காகத்தானே ஆச்சரியப்படுகிறீர்கள்?

ஸ்ரீவத்ஸா:—ஆம்.

சுப்ரதாஸ்:—உலகில் ஒருவரைப் போல் மற்றவர் இருக்கமுடியுமா?—என்பதற்கு இது ஒரு நிதர்சனமே தவிர வேறில்லை. ஏதோ தற்செயலாய் எங்கள் சுகுணாவைப் போன்ற ரூபம் அவளுக்கு ஏற்பட்டிருந்தாலும், அமிர்தாவுக்கும் எங்கள் சுகுணாவுக்கும் ஒரு விதமான சம்பந்தமுமில்லை. ஆனால் சுகுணாவின் சாயலைக்கொண்ட அப்பெண்ணிடம் எனக்கும் என் மனைவிக்கும் இச்சில மணிநேரத்திற்குள்ளாகவே அளவற்ற பிரேமை ஏற்பட்டுவிட்டது... நமக்குப் பிரியமான ஒருவரின் சாயலைக் கொண்டவரிடம் நம் மனம் பிரீதி கொள்வது இயற்கை. அது நம்மால் அதிகம் தடுக்கமுடியாத விஷயமல்லவா?

ஸ்ரீவத்ஸா:—ஆம், ஆம்,......இப்படத்திலுள்ள உமது பெண் இறந்துவிட்டது உண்மையாக இருக்கையில், சந்தேகத்திற்கிடமில்லை. உண்மைதான்......தங்களுக்கு இறந்துபோன சுகுணாவைத் தவிர வேறு பெண்களோ, பிள்ளைகளோ?......

சுப்ரதாஸ்:—இல்லை, வேறு பெண்களோ, பிள்ளைகளோ இல்லை. என் தாய்க்கும் நான் ஒரே மகன். என் மனைவிக்குக் கூடப் பிறந்தவர் இரண்டே சகோதரர்கள்தான். அவ்விருவரும் இரண்டு இரண்டு குமாரர்களுடன் ஜம்முபாத்தில் வசிக்கின்றனர். ஆகையால் எனக்குத் தெரியாமல் என் பந்துக்கள் வீட்டுப் பெண்ணாகவும் இருக்கமுடியாது.

ஸ்ரீவத்ஸா தலையை மேலும் கீழுமாய் அசைத்துக் கொண்டார். பிறகு "உங்கள் பெண்ணின் பிரேதம் அஞ்சு நாளுக்கப்புறம் அகப்பட்டதென்று சொன்

னீர்களல்லவா? அப்பிரேதம் தங்கள் குமாரியினுடையது தான் என்பதைப் பற்றிச் சந்தேகமே இல்லையே?

சுப்ரதாஸ்:—என்ன ஐயா! எங்கள் பெண்ணை எங்களுக்கு அடையாளம் தெரியாமலிருக்க முடியுமா? அப்படிச் சந்தேகம் ஏற்பட்டிருந்தால் நாங்கள் இத்தகைய துயரத்திற்கு ஆளாக வேண்டியதில்லையே. தண்ணீரில் ஐந்து நாள் ஊறினதால் முகமும் உடலும் ஊதிக் காணப்பட்டதுடன், உப்புத் தண்ணீரில் இருந்தபடியால் கறுத்தும் காணப்பட்டதைத் தவிர, அவள் அணிந்திருந்த நகைகளும் புடவையும் அப்படியே இருந்தன. அவள் எங்கள் பெண்தான் என்பதைக் கண்டுதான் அடக்கம் செய்தோம். அப்படியிருக்க நீர் திடீரென்று போலீஸ் வழக்கப்படி சந்தேகத்தைக் கிளப்பி விடுகிறீரே! எங்கள் ஒரே பெண்ணான அவள் இறக்க, நாங்கள் அடைந்த துயரமும், தற்சமயம் எங்கள் மனமுடைந்திருக்கும் தன்மையும் வெறும் சொற்களால் சொல்லக்கூடியதல்லவே!

ஸ்ரீவத்ஸா:—ஆம், ஆம், அது உண்மை. ஆனால் நான் வேணுமென்று உங்கள் மனத்தைப் புண்படுத்த விரும்பவில்லை. அமிர்தாவின் உருவத்திற்கும் இப்படத்திற்கும் அவ்வளவு ஒற்றுமை காணப்படுகிறதே என்ற ஒரு ஆச்சரியத்தினால் அவ்விதம் கேட்க நேரிட்டது.

சுப்ரதாஸ்:—ஓ! அதனால் பாதகமில்லை............ அதிர்ஷ்டமில்லாத நாங்கள் எங்கள் புத்திரியை இழந்தது உண்மை. யாவும் பூர்வ கர்மாவின் பலன். கர்ம பலனை அனுபவியாமல் முடியுமா? இந்த இருபத்திரண்டு வருஷ காலமாய்ப் புத்திர சோகத்திற்கு ஆளானோம்......யாவும் ஈசன் செயல், எம் செயல் எதுவுமில்லை!

ஸ்ரீவத்ஸா, சுப்ரதாஸ் மனம் மிக்க துயரை அனுபவிக்கிறது என்பதை உணர்ந்தாராதலால் அந்தச் சம்பாஷணையை மாற்ற எண்ணி, மறுபுறம் சுவரில் மாட்டியிருந்த ஒரு வயதான மனிதரின் போட்டோவைச் சுட்டிக் காட்டி, "இது யாருடைய படம்?" என்றார்.

சுப்ரதாஸ்:—அந்தப் படமா? கடைசியாய்ச் சந்திரபுரி ஜமீன்தாராக இருந்து ஏழு வருஷங்களுக்கு முன் இறந்து போன சம்புதாஸ்.

ஸ்ரீவத்ஸா:—அவருக்குப் பின் இப்பொழுது இந்த ஜமீனுக்குச் சொந்தமாக இருப்பவர் யார்?

சுப்ரதாஸ் :—ஓ...........அது ஒரு புரியாத விஷயம். வார்சு ஒன்றும் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. இறந்து போன ஜமீன்தாருக்கு இரண்டு பெண்கள் தான். மூத்த பெண் சந்ததி யில்லாமலே இறந்துபோய் விட்டாள். இரண்டாவது பெண் சந்ததியுடன் வாழ்ந்து வருகிறாள். வழக்கமாய் ஜமீனுக்குப் பிள்ளைகள்தான் வார்சாக வருவது. ஆனால் இறந்துபோன ஜமீன்தாருக்குப் பிள்ளை இல்லாதபடியால் பெண்களுக்குத்தான் சொந்தமாக வேணும். இரண்டு பெண்களில் ஒருத்தியைப் பற்றித் தான் கவலை இல்லை. இரண்டாவது பெண்ணுக்காவது, அவள் குமாரனுக்காவதுதான் சந்திரபுரி ஜமீன் சொந்தமாகலாம்.

ஸ்ரீவத்ஸா :—ஆனால் ஜமீன்தார் இறந்து எழு வருஷங்களாகியும் இதுவரையில் வார்சுக்காருக்கு ஜமீன் சேராமலிருப்பது ஓர் ஆச்சரியமில்லையா ?

சுப்ரதாஸ் :—ஆம், ஆச்சரியமாகத்தான் இருக்கிறது. ஆனால்.........இறந்துபோன ஜமீன்தார் தாம் இறக்கும் போது தம் ஜமீனுக்கு வார்சு ஏற்படுத்த இன்னும் ஏழு வருஷ காலம் முடிவடைய வேணுமென்று கருதினாராம். அந்த ஏழு வருஷம் வரையில் தமது குடும்ப வக்கில் பார்வையில் தமக்கதுவரையில் ஜமீன் விஷயங்களைப் பற்றிச் சிறிது கவலைகூடக் கொடாமல் மிக்க நம்பிக்கையுடன் ஜமீன் விஷயங்களை நிர்வகித்து வரும் லிலாராமே ஜமீன் மாளிகையில் இருந்துகொண்டு, எப்பொழுதும்போல் ஜமீன் விவகாரங்களையும் மாளிகையையும் பாதுகாத்து வரவேணுமென்றும், ஏழாவது வருஷம் முடிந்தபின் லிலாராமும் வக்கிலுமாய் வார்சுதாரிடம் ஜமீனை ஒப்படைத்துவிட வேணுமென்றும் ஏற்பாடு செய்திருப்பதாய்க் கேள்வி.

ஸ்ரீவத்ஸா :—சற்று நூதனமான ஏற்பாடாகவே இருப்பதாய்ப் படுகிறதல்லவா ?

சுப்ரதாஸ் :—ஆம், ஆனால் அறிவாளியான ஜமீன்தாரின் ஏற்பாட்டில் நமக்கு அறியமுடியாத நியாயங்கள் இல்லமல்போகாது என்பதே என் எண்ணம்.

ஸ்ரீவத்ஸா :—இருக்கலாம்.

ஸ்ரீவத்ஸா இவ்விதம் கூறியதும், சுப்ரதாஸ் ஸ்ரீவத்ஸாவின் முகத்தை உற்றுப் பார்த்தார். அவர் மனத்தில் "ஓ! இந்த மனுஷ்யன் நம்முடன் சகஜமாய்ப் பேசிக் கொண்டிருப்பதுபோல் காணப்பட்டாலும் இவர்

மனத்தில் மிக்க ஆழ்ந்த ஆலோசனைகள் அலைந்து கொண்டிருக்கின்றன" என்று நினைத்தார். மறு க்ஷணமே, "இது போலிசார்களுக்கே உள்ள கெட்ட வழக்கம். பிறர் விஷயங்களைப் பற்றிப் பிரமாதமாய் மண்டையை உடைத்துக் கொள்வார்கள்!" என்றும் நினைத்தார்.

ஸ்ரீவத்ஸா சுப்ரதாஸிடம் படங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தபின் நேரே தமது அறைக்கு வந்து சேர்ந்தார். அதே சமயம் அவ்விடம் கரீம் வந்து நின்றான்.

ஸ்ரீவத்ஸா:—தந்தி கொடுத்து விட்டாயா?

கரீம்:—ஆம், கொடுத்து விட்டேன்.

ஸ்ரீவத்ஸா:—சரி, ஏன், என்ன சமாசாரம்? ஏதோ சொல்ல நினைக்கிறாய் போலிருக்கிறதே.

கரீம்:—ஆம், எஜமான்! நான் தந்தியாபீசிலிருந்து திரும்பி வருகையில் கறுப்புக் காரில் அந்த இரண்டு ஆசாமிகளும் போனதைப் பார்த்தேன்.

ஸ்ரீவத்ஸா:—ஓ ஹோ, அப்படியா? நல்ல சமாசாரமே கொண்டு வந்தாய், உம்...காரை ஓட்டிப் போவது யார்?

கரீம்:—சற்றுக் குள்ளமாக இருந்த மனிதர்.

ஸ்ரீவத்ஸா:—சரி, நான் இப்பொழுதே அவ்விடம் போய் வரவேணும். நீ இம்மாளிகையின் சொந்தக்காரரான சுப்ரதாஸின் காரைக் கொண்டுவந்து தயாராக வை.

## 21 கடிதமும் நகைகளும்

ஜமீன் மாளிகையின் முன் ஹாலிலேயே இருந்த லிலாராம் கார் வந்து நின்ற சத்தத்தினால் திரும்பிப் பார்க்க, ஸ்ரீவத்ஸா இறங்குவதைக் கண்டார்.

ஸ்ரீவத்ஸா:—தங்கள் விருந்தாளிகள் திரும்பி வருமுன் அவர்களது சாமான்களை நான் சற்று ஆராய்ந்து விடவேணும்.

லிலாராம்:—அப்படியானால் தாங்கள் இப்பொழுது ஒரு குற்றம் செய்யப் போகிறீர்கள். அதற்கு நானும் உடன்பட்டதற்கு அடையாளமாய் அனுமதி தரவேணும் என்கிறீர்கள்.

ஸ்ரீவத்ஸா:—ஆம் அப்படித்தான். என் உத்தியோக தோரணையில் நான் அவ்விதம் செய்துதீர வேண்டியிருக்கிறது. அது தங்களுக்கும் தெரிந்த விஷயம்தான்.

லீலாராம் ஸ்ரீவத்ஸாவின் முகத்தைப் பார்த்துப் புன்னகை செய்தார். பிறகு, "தாங்கள் மாடிமேல் செல்லலாம். பச்சை அறையிலும், அதை யொட்டி இடது புறமுள்ள அறையிலும்தான் அவர்களுடைய சாமான்கள் வைக்கப் பட்டிருக்கின்றன. ஆனால் அவ்வறைகள் பூட்டப்பட்டிருப்பதாய் நினைக்கிறேன்.

ஸ்ரீவத்ஸா :—பரவா இல்லை. ஆனால் நான் வருமளவும் மாடிக்கு ஒருவரையும் அனுப்பக்கூடாது. ஒருவேளை அவர்கள் வந்துவிட்டால் இந்த ஊதலால் வேடிக்கையாக இருமுறை ஊதுங்கள். நான் சமயோசிதப்படி எச்சரிக்கையாக நடந்து கொள்வேன்.

ஸ்ரீவத்ஸா தம்மிடமிருந்த ஒரு கொத்துச் சாவியிலுள்ள ஒரு சாவியினால் பூட்டைத் திறந்து, அந்த அறையிலிருந்த பெட்டிகளையும், இடது புறமுள்ள அறையிலிருந்த சாமான்களையும் ஒவ்வொன்றாய் எடுத்து ஏதோ தேடிப்பார்த்தார். கடைசியாக ஒரு கறுப்புப் பெட்டிக்குள்ளிருந்து ஒரு சிறிய மரப் பெட்டியை எடுத்தார். மிக்க சிரமத்தின்மேல் அதைத் திறக்க, அதனுள் சில நகைகளும் சில கடிதங்களும் காணப்பட்டன. அக்கடிதங்களைப் பார்த்த அவரது முகம் திருப்தியைக் காட்டவில்லை. அதில் ஒரே ஒரு கடிதத்தை மட்டும் எடுத்துப் பத்திரப் படுத்திக்கொண்டு, தமது குறிப்புப் புஸ்தகத்தில் அங்குள்ள நகைகளின் மாதிரியை மட்டும் குறித்துக் கொண்டார். பிறகு அவைகளை முன்னிருந்தது போலவே பத்திரமாக எடுத்து வைத்துவிட்டு, கதவுகளைப் பூட்டிக்கொண்டு கீழே வந்தார்.

லீலாராம் :—(புன்னகையுடன்) பலன் ஏற்பட்டதோ?

ஸ்ரீவத்ஸா :— கனி காயாகியது! எனினும் அபஜயமில்லை. நற்காலமாய் அவர்கள் இன்னும் வரவில்லை. நான் உத்தரவு பெற்றுக் கொள்ளலாமா ?

லீலாராம் :—நான் காலையில், அதாவது வக்கீல் வந்த பிறகு, அவ்விடம் வரவா ?

ஸ்ரீவத்ஸா :—இல்லை, இல்லை. அதற்குமுன் இன்றிரவே தங்களை மறுபடியும் பார்க்க விரும்புகிறேன். ஆகையால் தாங்கள் படுக்கைக்குப் போகுமுன் அமிர்த குடீரம் வரமுடியுமா ?

லீலாராம் :—ஓ, வருகிறேன்.

அமிர்த குடீரத்திற்கு வந்து சேர்ந்த ஸ்ரீவத்ஸா தாம் கொண்டுவந்த அந்தக் கடிதத்தை ஒரு முறைக்குப் பலமுறை படித்து ஆலோசனைசெய்து பார்த்தார். பிறகு அவரது முகம் ஒரு பிரகாசத்தை அடைந்தது.

## 22. சொந்த அம்மான்

அன்றிரவு சுமார் ஏழு மணிக்கு அமிர்தா கட்டிலில் படுத்திருக்க, ஒரு நாற்காலியில் அமர்ந்திருந்த ஸ்ரீவத்ஸா நிதானமாய் மெல்லிய குரலில் ஏதோ கேள்வி கேட்டுக்கொண்டிருந்தார். அதே அறையில் மற்றொரு புறம் போட்டிருந்த கட்டிலில் நிரஞ்சனும் படுத்துக் கொண்டிருந்தான்.

ஸ்ரீவத்ஸா :—நீங்கள் முதலிலிருந்தே என்னிடம் விஷயங்களை ஒளித்து வந்தீர்கள். அது எவ்வளவு தூரம் கஷ்டத்தைக்கொண்டுவந்து விட்டது, பார்த்தீர்களா? பரவா இல்லை. இது வரையில் ஏற்பட்ட பயங்கரமான விஷயங்களால் தங்கள் மனம் அதிர்ச்சி யடைந்திருக்கிறது. எனவே விஷயங்கள் முழுவதையும் விவரித்துரைக்கமுடியாது. எனினும், நான் இப்பொழுது கேட்கப்போகும் சில கேள்விகளுக்கு மட்டும் பதில் தெரிவிப்பீர்களா?

அமிர்தா :—தெரிந்தால் சொல்லுகிறேன்.

ஸ்ரீவத்ஸா :—இறந்துபோன பிரபு ஜகன் மோகன தாஸ் தங்களுக்குச் சொந்த அம்மான்தானா? அதில் யாதாயினும் சந்தேகமுண்டோ?

அமிர்தா ஸ்ரீவத்ஸாவின் கேள்வியினால் ஆச்சரியப் பட்டுப்போனாள். "பிரபு எனது சொந்த அம்மான்தான், அதில் சந்தேகமே வேண்டாம்!"

ஸ்ரீவத்ஸா :—உங்கள் தாய் தந்தையரை உங்களுக்கு நினைவிருக்கிறதா?

அமிர்தா :—(மேலும் ஆச்சரியத்தோடு ஸ்ரீவத்ஸாவின் முகத்தை நோக்கிவிட்டு) என் தாய் தந்தையர் இறக்கும் பொழுது எனக்கு ஏழு வயது. அவர்களை எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. என் தாயார் அழகாக இருப்பார், என் தந்தையும் அப்படியேதான்.

ஸ்ரீவத்ஸா :—உங்கள் தந்தையும், பிரபு ஜகன்மோகன தாஸும் ஒருவருக்கொருவர் மிக்க நேசமுடையவர்களாகவே யிருந்தார்களோ?

அமிர்தா :—ஆம், அவ்விருவரும் மிக்க நேசமுடையவர்களாகத்தான் இருந்திருக்கவேணும். இல்லாவிட்டால் மாமாவும் என் தந்தையும் அடிக்கடி தமாஷாகப் பேசிப் பொழுதுபோக்கி யிருக்கமுடியாது !

ஸ்ரீவத்ஸா :—உங்கள் தாயார் அவளது தாய் தந்தையரைப் பற்றி எப்பொழுதாவது பேசியதுண்டா ? அச்சமயம் குழந்தைப் பருவத்திலிருந்த உங்களுக்கு உங்கள் தாய் சொன்னது நினைவிலிருந்தால்......

அமிர்தா :—இல்லை,......இல்லை, அவள் தாய் தந்தைய பற்றி எங்களிடம் ஒன்றும் கூறினதே கிடையாது. ஆம், நிச்சயமாய் என் பாட்டன் பாட்டிகளைப் பற்றி எனக்கு ஒன்றுமே தெரியாது!

ஸ்ரீவத்ஸா :—உங்கள் அம்மான்கூட அவரது தாய் தந்தையரைப் பற்றி ஒன்றும் கூறினதில்லையோ ?

அமிர்தா :—இல்லை, அவரும் ஒன்றும் கூறினது கிடையாது.

ஸ்ரீவத்ஸா ஒரு நிமிஷம் பேசாமலிருந்து பிறகு, "உங்கள் தாயாரும் தந்தையும் ஒருவரை யொருவர் அதிகமாய் நேசித்திருந்தனரோ ?" என்றார்.

அமிர்தா :—ஆம், அவ்விருவரும் ஒருவரை யொருவர் மிகவும் அன்புடன் நேசித்திருக்கவேணு மென்பதுதான் என் எண்ணம்.

ஸ்ரீவத்ஸா :—உங்கள் தாயார் பெயர் என்னவென்று தெரியுமா ?

அமிர்தா:—என் தந்தை எங்கள் தாயாரைப் பிரேமா என்று கூப்பிடுவார்.

ஸ்ரீவத்ஸா :—உங்கள் தந்தை பெயர் ?

அமிர்தா :—தந்தையின் பெயர் எனக்கு வெகுநாள் வரையில் தெரியாது. சென்ற வருஷம்தான் அம்மாவிடம் என் தந்தையின் பெயர் என்ன வென்று கேட்டேன். அப்பொழுது அவர் எங்கள் தகப்பனாரின் பெயர் 'அமலதாஸ்' என்று தெரியப்படுத்தினார்.

ஸ்ரீவத்ஸா :—உங்கள் பெற்றோரில் யார் முதலில் இறந்தது ?

அமிர்தா :—காலையில் எனது தாயார் இறந்தாள். பிற்பகல், அதாவது மாலை மூன்று மணிக்குப் பிறகு, எனது தந்தையும் இறந்துபோனார். எனது தாயார்

இறந்தவுடனேயே எனது தகப்பனர் அம்மானிடம் என்னையும் தங்கை அருணவையும் ஒப்புவித்துவிட்டார். அவருக்குத் தாமும் சீக்கிரத்தில் இறந்துவிடுவோ மென்பது தெரிந்திருந்துதான் அப்படிச் செய்தார்போ லிருக்கிறது!......அன்றிரவு என் தாயாரையும் தந்தை யையும் சேர்த்தேதான் மயானத்திற்கு எடுத்துச் சென் ருர்கள்.

என்று சொன்னதும் தன் குழந்தைப் பருவத்தில் கண்ட சம்பவம் நினைவிற்குவர, அவள் மனம் சஞ்சலத்தை அடைந்தது.

ஸ்ரீவத்ஸா அதற்குமேல் அமிர்தாவைத் தொந்தரவு செய்ய இஷ்டப்படவில்லை.

இரண்டொரு நிமிஷங்களுக்குப் பின் அமிர்தா, "அவருக்கு உடம்பு குணமானதும் பிரபு ஜகன்மோகன தாஸ் மரண விஷயமான சந்தேகத்திற்காக அவரை அரெஸ்டு செய்யப் போகிறீர்களா?" என்று கவலையோடு கேட்டாள்.

அதைக் கேட்டதும் ஸ்ரீவத்ஸா சிரித்துவிட்டார்:

"என்னை அவ்வளவு பயங்கரமான மனிதன் என்று நினைத்துவிட்டீர்கள்? தாங்கள் பயப்பட்டு மறுபடியும் நிரஞ்சனை மோர்ட்டாரில் வைத்துக்கொண்டு, எழுபது எண்பது என்கிற ஸ்பீடில் விட்டடித்து விட்டீர்களானல், எங்களால் தொடர்ந்து பிடிக்கவும் முடியாது; அந்த அதிர்ச்சி நிரஞ்சன் உயிருக்கும் ஆபத்தை உண்டு பண்ணிவிடும்! டாக்டர் இன்னும் பத்துத் தினங்களுக்கு நிரஞ்சன் உடம்பில் எந்த அதிர்ச்சியும் ஏற்படக்கூடா தென்று வற்புறுத்திக் கூறி யிருக்கிருர்."

அதைக் கேட்டு எதிர்க் கட்டிலில் படுத்துக்கொண் டிருந்த நிரஞ்சன், "நண்பரே! உங்களிடமிருந்து இப் பொழுது தப்பியோட நினைத்தால், என் போன்ற நன்றி கெட்டவனும், மூடனும் வேறெவருமில்லை. இப்பொழுது நான் அப்படி ஓட மனத்தால்கூட நினைக்கமாட்டேன். அதைவிடத் தண்டனை உண்டானல், தங்கள் மூலமாய் ஏற்பதே எனக்குத் திருப்தி தரும்" என்ருன்.

ஸ்ரீவத்ஸா சந்தோஷத்தினல் புன்னகை செய்த தாய்த் தோன்றிற்று. பிறகு, "அடாடா, நான் உங்களையெல்லாம் தீவிரமான சிந்தனைகளுக்கெல்லாம் ஆளாக்கி விட்டேன். இனி நீங்கள் இன்றிரவு முழுதும்

நிம்மதியாய் நித்திரை செய்யுங்கள். அப்பொழுதுதான் நாளையதினம் உங்கள் உடல்நிலையில் பூரண சுகமுண்டாகும்" என்று கூறித் தம் இருக்கையிலிருந்து எழுந்தார்.

அச்சமயம் நிரஞ்சனுக்கும் அமிர்தாவுக்கும் மருந்து கொடுப்பதற்காக அவ்விடம் கரீம் வந்து சேர்ந்தான்.

## 23 'மோக்ஷம்'

இரவு மணி ஒன்பது அடித்து மூன்று நிமிஷங்களாயின. அமிர்தகுடீரம் சுப்ரதாஸின் காரில் ஸ்ரீவத்ஸாவும் கரீமும் சென்றுகொண் டிருக்கின்றனர்.

கார் ஓரிடத்தில் நிறுத்தப் பட்டதும் ஸ்ரீவத்ஸா காரை விட்டு இறங்கி, "கரீம், அதோ ஒரு சினிமாக் கொட்டகை இருக்கிறதல்லவா? அங்கே இப்பொழுது படக்காட்சி நடந்துகொண்டிருக்கிறது. நான் அது முடியுமுன்பே, அதாவது மணி பன்னிரண்டுக் குள்ளாகவே திரும்பி வந்துவிடுவேன். அப்படி வராமல் போனால் நீ திரும்பிப் போய்விடு" என்று கூறிவிட்டுச் சினிமாக் கொட்டகையை நோக்கிச் சென்றார்.

படக்காட்சி நடந்துகொண் டிருந்தபடியால் விளக்குகளெல்லாம் அணைக்கப்பட்டிருந்தன. ஸ்ரீவத்ஸா கொட்டகையினுள் நாலணு வகுப்பின் வாசற்படியின் ஓரமாய்க் கறுப்புத் திரைச்சீலையை ஒட்டி இருளில் நின்றபடி படம் பார்ப்பவர்களை ஒவ்வொருவராய்க் கவனித்துக்கொண்டிருந்தார்.

பத்து நிமிஷங்கள் பொறுத்து வெளியில் வந்து ஸோடாக் கடையினருகில் நின்றுகொண்டிருந்த ஒரு சிறுவனைத் தனியாக அழைத்துவந்து, "பையா! நீ எனக்கு ஒரு சிறிய உதவி செய்தால் அஞ்சு ரூபாய் சம்பாதித்து விடலாம். என்ன? சம்மதமா?" என்று கேட்டார்.

பையன் :—என்ன வேலை செய்யணும்?

ஸ்ரீவத்ஸா :—வேலை கஷ்டமானதல்ல. நான் ஒரு சிறிய கடிதம் கொடுப்பேன். அதை நான் காட்டும் மனிதரிடம் கொடுத்துவிட்டு வரவேணும். இந்தா, முன்பணமாய் மூன்று ரூபாய் இப்போதே பெற்றுக்கொள்.

சிறுவனுக்கு முழு ரூபாயாக மூன்று ரூபாய்களைக் கண்டதும் சந்தோஷம் தாங்கவில்லை. ஸ்ரீவத்ஸா ஜேபிக்குள்ளிருந்து தாறுமாறாய் மடிக்கப்பட்டிருந்த ஒரு

கடிதத்தை அச் சிறுவனிடம் கொடுத்தார். அவனோடு கொட்டகைக்குள் ஒன்பதணு வகுப்பு வாசற்படியில் நுழைந்து ஒரு ரூபாய் இரண்டணு ஸீட்டில் நடுவாக அமர்ந்திருக்கும் ஒரு மனிதனை அச் சிறுவனுக்கு நன்கு புரியும்படி காட்டி, மறுபடியும் அவனை வெளியில் அழைத்துவந்து, "பையா! நீ அந்த மனிதரிடம் இந்தக் கடிதத்தைக் கொடுத்து 'ஐயா! பக்கத்துத் தோட்டத்தில் குந்தியிருந்த ஒரு நோயாளி இந்தக் கடிதத்தை உங்களிடம் கொடுத்துவிட்டு வரச்சொன்னுன். உங்களை உடனே வரச்சொன்னுன்' என்று சொல்லி எப்படியாவது அந்த மனுஷ்யரைப் பக்கத்துத் தோட்டத்தில் இருக்கும் நோயாளியைப் போய்ப் பார்க்கும்படி செய்து விடு, தெரிந்ததா?" என்ருர்.

கடிதத்தைக் கொடுத்தனுப்பிய பின் ஸ்ரீவத்ஸா ஒரு கதவினருகில் மறைந்து கவனித்துக் கொண்டிருந்தார். சற்றுநேரத்தில் சிறுவனிடமிருந்து கடிதத்தைப் பெற்றுக்கொண்ட மனிதன், வெளிச்சம் இருக்குமிடத்தை அடைந்து கடிதத்தைப் படித்துப் பார்த்தான். சிறிது நேரம் ஏதோ ஆலோசனையிலிருந்த பின், தன் பக்கத்தில் உட்கார்ந்திருந்த ஒரு மனிதனிடம் சிறிதுநேரம் ஏதோ பேசிவிட்டு, தன்னிடம் கடிதம் கொடுத்த பையனை ஏதோ விசாரித்தான். பிறகு அவன் அச்சிறுவனுடன் அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டு விட்டான்.

தோப்பிற்குள் சென்ற மனிதன் அங்கங்கே காணப்பட்ட தென்னை மரங்களைத் தவிர மனிதர் எவரையும் காணுததால் சந்தேகத்துடன் தயங்கினுன். மறுபடியும் சிறிது முன் சென்ருன். அவன் முன் நோக்கிச் செல்லுமிடங்களுக்கு அவனது கையிலுள்ள டார்ச்சு வெளிச்சம் காட்டிற்று. மறுக்ஷணம் அவனது டார்ச்சு பிடித்த கரம் பலமாகப் பின்புறமாய் வந்த ஒருவனுல் பிடிக்கப்பட, சில விநாடிக்குள் இருவரும் கட்டிப் புரண்டு பூமியில் உருண்டார்கள். சற்றுநேரத்தில் ஒருவன் கீழே கிடக்க, மற்றவன் கீழே கிடக்கும் மனிதன்மேல் முழங்காலை ஊன்றி அமுக்கியபடி, சராய் ஜேபிகளையும் கோட்டு ஜேபிகளையும் ஷர்ட்டு ஜேபிகளையும் ஆராய்ந்து, சாவிகளையும் கைக்குட்டையையும் தவிர மற்றவைகளையெல்லாம் எடுத்துத் தன் சராய்க்குள் திணிப்பதில் ஈடுபட்டிருந்தான்.

அச்சமயம் மற்ருெரு மனிதன் அத்தோப்பிற்குள் உற்று உற்றுப் பார்த்துக்கொண்டே வந்தவன், இவர்

களைச் சமீபித்ததும் அங்கு நடக்கும் சம்பவத்தை க்ஷணத்தில் ஊகித்தறிந்தவனாய் மூர்க்காவேசத்துடன் ஓடிவந்தான். ஆனால் தன்னைப் பிடிக்க ஒருவன் ஓடி வருவதை உணர்ந்துகொண்ட மேற்படி ஆசாமி, வருபவனிடம் அகப்படாமல் தப்பிக்கும் பொருட்டுக் குபீரென எழுந்து ஓட்டம் பிடித்தான். வந்த மனிதனும் ஓடுபவனை எப்படியும் பிடித்துக் கொள்ள நினைத்தவன் போல் துரத்திக்கொண்டு ஓடினான்.

முன்னால் ஓடிய பேர்வழி துரத்துபவனிட மிருந்து தப்பிக்க எண்ணித் தோப்பிற்குள்ளேயே அங்குமிங்கும் ஓடுகையில், எதிரில் ஏதோ பலமாய்த் தாக்க, அந்த எதிர்பாராத தாக்குதலால் கையை விரித்தபடி பக்கவாட்டாய்த் தடாலென விழுந்துவிட்டான். அவன் சமாளித்து எழுந்திருக்கு முன்பாகவே பின்னால் துரத்திக் கொண்டு வந்த மனிதன் விழுந்தவனை நெருங்கிவிட்டான்.

விழுந்தவன், தன் விரோதி நெருங்கிவிட்டதை உணர்ந்து அவசரமாய் எழுந்தான். அந்த க்ஷணமே துரத்திவந்தவன் குனிந்து எழுந்தவனின் காலைப்பற்றி முன்புறமாய்த் தள்ளிவிட்டான். மறுக்ஷணம் தடாலென்ற சத்தத்துடன் அம்மனிதன் கிணற்றுக்குள் விழுந்தது நன்றாகக் கேட்டது.

உடனே கிணற்றருகில் நின்றுகொண்டிருந்த அம் மனிதன், "உம், ஒழிந்தது சனியன். யாரோ எவனோ அவன்; கடைசியில் என் கையால் கிணற்றுக்குள் தள்ளப்பட்டு மோக்ஷமடைந்தான்! திருட்டுப் பயலுக் கேற்ற மோக்ஷம்தான் கிடைத்தது!" என்று முணு முணுத்துவிட்டு, திருடனால் கீழே தள்ளப்பட்டிருந்த மனிதனைக் கவனிக்கச் சென்றான்.

சினிமாக் கொட்டகையில் படக் காட்சி முடிவடைந்து ஜனங்களெல்லாம் தத்தம் இருப்பிடம் நோக்கிச் சென்று விட்டனர். அதற்கு மேலும் அரை மணி நேரம் கரீம் தன் எஜமான் வரவை எதிர் பார்த்திருந்தான். ஸ்ரீவத்ஸா வந்து சேரவில்லை. கரீமின் மனத்தில் தன் எஜமான் சொன்னபடி வந்து சேராதபடியால், 'ஒருவேளை அவருக்கேதாயினும் அபாயம் நேர்ந்திருக்குமோ?' என்ற சங்கையும் தோன்றாமலில்லை. ஆனால் ஸ்ரீவத்ஸா சினிமா முடிந்த பிறகும் தாம் வராவிட்டால் தன்னைச் சென்றுவிடும்படி கட்டளை யிட்டிருந்தபடியால், அக் கட்டளையை மீறவும் முடியவில்லை. ஒருவேளை ஸ்ரீவத்ஸா

வேறு வழியாக அமிர்த குடீரத்தை அடைந்திருந்தால்? கரிம் காரை அமிர்த குடீரத்தை நோக்கிச் செலுத்தினான்.

பாவம், எவ்வளவோ சாமர்த்தியமாய் நிரஞ்சனையும் அமிர்தாவையும் காப்பாற்றிய ஸ்ரீவத்ஸா கடைசியாய்ப் பாவி பிரகாசத்தினால் மற்றவரெவரும் அறியாதபடி கிணற்றில் தள்ளப்பட்டான் என்ற விஷயம் சிறிதாயினும் கரிமுக்குத் தெரிந்திருந்தால், ஓடோடியும் சென்று தன் எஜமானைக் காப்பாற்றி யிருக்கமாட்டானா?

## 24. வக்கில் தாமோதரம்

சூரியன் உதயமானதும், சந்திரபுரி ஜமீன் வக்கில் தாமோதரம் ஜமீன் மாளிகைக்கு வந்து சேர்ந்தார். லீலாராமுடன் அவரது ஏகாந்த அறையில் சுமார் ஒரு மணிநேரம் ரகஸ்யமாய்ச் சம்பாஷித்துக்கொண்டிருந்தார். பிறகு பகவன்தாஸும் பிரகாசமும் நித்திரை தெளிந்து காலைக் கடன் முடித்துக்கொண்டு மாளிகையின் முன் ஹாலில் வந்தமர்ந்ததும், லீலாராம் வக்கிலுடன் அவ்விடம் வந்து, சற்று முன் வக்கில் வந்து சேர்ந்த விஷயத்தைக் கூறினார். வக்கிலும் பகவன்தாஸும் வெகு நாளைக்கு முன்பே அறிமுகமானவர்களாக இருந்தபடியால் பிரகாசத்தை மட்டும் வக்கிலுக்கு அறிமுகப் படுத்தினார்.

பிறகு யாவரும் நிரஞ்சன் விஷயமாய்ப் பேசியபடி சிற்றுண்டி அருந்தினர். அச்சமயம் இடையில் லீலாராம், "இரண்டு தினங்களாய்ப் பிரேதம் அறையில் பூட்டப்பட்டுக் கிடக்கிறது. இன்றுவது கட்டாயம் அடக்கம் செய்து விடவேணும்" என்றார்.

பகவன்தாஸ், "ஆம், ஆம், இதற்குள்ளாகவே அவ்வறையில் துர்க்கந்தம் பரவி யிருக்கும்" என்று ஆமோதித்தார்.

வக்கீல்:—ஆம், உண்மைதான். இன்றே அவ் விஷயத்தை முடித்துவிட வேண்டியதுதான். ஆனால் ......இப்பொழுது மணி ஆறுகிறதா? சரியாய் எட்டு மணிக்குப் பிரேத அறையைத் திறந்து பார்ப்போம்.

பிரகாசம்:—பிரேதமிருக்கும் அறையைத் திறக்க நல்ல வேளை பார்க்கவேணுமா, என்ன?

வக்கீல்:—(சிரித்துவிட்டு) இல்லை, இல்லை, இறந்த மனிதனுக்கு நல்ல வேளை பார்க்கவேண்டாம்! நான்

ஒரு முக்கிய விஷயமாய்ச் சிறிது நேரம் வெளியில் சென்று வர விரும்புகிறேன்.

பகவன்தாஸும் பிரகாசமும் அதற்கு மறுத்துச் சொல்ல முடியவில்லை. "ஓ, அப்படியானால் சரி; நாங்களும் சற்று வெளியில் சென்று வரவேண்டிய வேலை இருக்கிறது" என்று பகவன்தாஸ் கூறினார்.

லீலாராம்:—நீங்களெல்லாம் உங்கள் உங்கள் அலுவல்களை முடித்துக்கொண்டு வருவதற்குள் நானும் மேற்கொண்டு நடக்கவேண்டிய விஷயங்களுக்குச் சில ஏற்பாடுகளைச் செய்துவிடுகிறேன்.

அதன்பிறகு கால் மணி பொறுத்து வக்கீலும் லீலாராமும் ஒருகாரில் புறப்பட, பகவன்தாஸும் பிரகாசமும் மற்றொரு காரில் புறப்பட்டு வேறு மார்க்கமாய்ச் சென்றனர்.

அதே சமயத்தில் அமிர்த குடீரத்தில் அமிர்தாவும் நிரஞ்சனும் சற்றுத் திடம் பெற்றவர்களாய்க் காணப்பட்டனர். நிரஞ்சன் கட்டிலில் படுத்துக்கொண்டபடியிருக்க, அமிர்தா ஒரு ஸோபாவில் உட்கார்ந்துகொண்டிருந்தாள். சுமார் பத்து நிமிஷகாலம் அவ்விருவரும் ஒருவரை ஒருவர் விட்டுவிட்டுப் பார்த்துக்கொண்டிருந்தனரே தவிர, ஒரு பேச்சும் பேசவில்லை. நிரஞ்சனை உயிருடன் கண்டதில் அமிர்தா எவ்வளவோ சொல்ல முடியாத சந்தோஷத்தையும் நிம்மதியையும் அடைந்திருந்தாலும், அவளது முகத்தில் துயரத்தின் சாயலும் திகிலின் சாயலும் படிந்து காணப்பட்டன. அதேபோல்தான் நிரஞ்சனது முகமும் காணப்பட்டது.

கடைசியாக நிரஞ்சன் பேச ஆரம்பித்தான்: "அந்த மிகவும் ஆபத்தான நிலையில் எப்படியோ தேவதூதனைப்போல் பயங்காக் காட்டில் வந்து குதித்து என்னைக் காப்பாற்றினாரே அது எப்படி?—என்பது எனக்குத் துளிகூடப் புரியவில்லை. சிலம்ப வித்தையில் பழகிய நானே அக்கூட்டத்தாரின் முரட்டுச் செயலால் திக்கு முக்காடினேன். ஒருவர் எவ்வளவு தீரத்துடன் கைலாகவத்தைக் காட்டியிருந்தால் அக்கூட்டத்தாரிடமிருந்து என்னை விடுவித்திருக்கலாம்? ஆனால் அதைப்பற்றியெல்லாம் ஒன்றுமே ஆலோசிக்கக் கூடாதென்பது அவரது கட்டளை........ஆம், நீ எப்படி அவரிடம் வந்து சேர்ந்தாய்?"

அமிர்தா :—அதுதான் எனக்கும் தெரியவில்லை. உங்களை அந்தக் கிங்கரர்கள் இழுத்துச் சென்றதும், அந்தக் கடின சித்தன் என் முகத்தினருகில் எதையோ காட்டினனென்று நினைக்கிறேன். பிறகு விழிக்கும் பொழுது நம் ஸ்ரீவத்ஸாவைத்தான் கண்டேன்.

நிரஞ்சன் :—என்ன ஆச்சரியம்?.........மலை போன்ற பயங்கரமான ஆபத்துக்களெல்லாம் பனி நீங்குவதே போல் நாம் நினையாத விதம் நீங்கி விட்டிருக்கின்றன!...... ........ஸ்ரீவத்ஸா ஒருவரில்லாவிடில் நம் கதி இந்நேரம் எவ்விதமெல்லாமோ முடிவடைந்திருக்கும்..........அந்த ரெளடிகளின் கூட்டத் தலைவன், கொலைக்கஞ்சாத ராக்ஷஸன் போன்றவனை ஸ்ரீவத்ஸா எவ்வளவு மாற்றிவிட்டிருக்கிறார்!......ராத்திரியிலிருந்து ஸ்ரீவத்ஸா இவ்விடம் வரவே யில்லையே! ஒருவேளை அவர் இம் மாளிகை யிலேயே இல்லையோ?

அச்சமயம் அவ்வறைக்குள் வக்கில் தாமோதரமும் லீலாராமும் வந்து சேர்ந்தனர்.

வக்கில் நிரஞ்சனைக் கண்டதும் திடுக்கிட்டார். பிறகு, "நீ......நீ......உனக்கு என்னை யாரென்று தெரிகிறதா?" என்றார்.

நிரஞ்சன் அவரை நன்கு கவனித்துப் பார்த்தபின், "ஆம், தெரிகிறது. ஏழு வருஷங்களுக்கு முன் கலியாண புரியில் என்னையும் என் தாயாரையும் வந்து கண்டீர்கள்; என்னைக் கல்லூரியில் சேர்ந்து படிக்கும்படி சொல்லி அச் செலவிற்கும் குடும்பச் செலவிற்கும் மாதா மாதம் எங்களுக்குப் பணம் வந்து சேருமென்று கூறி, மூடி ஒட்டப் பட்டு வருஷம் தேதி மட்டும்மேலே குறிக்கப்பட்டிருந்த ஒரு லகோடாவைக் கொடுத்தீர்கள். ஏழு வருஷங்களான பின் செப்டம்பர் மாதத்தில், அதாவது அக்கவரின்மேல் குறிக்கப்பட்டிருந்த தேதியில், 'அந்தக் கவரைப் பிரித்துப் பார்த்து அதில் குறிக்கப்பட்டிருக்கும் கட்டளைப்படி நடந்துகொள். குறித்த தேதிக்கு முன் அக்கவரைப் பிரிக்காதே, பத்திரமாக வைத்துக்கொள்' என்றும் கூறினீர்களல்லவா? ஆம், அவை யாவும் என் மனத்தில் நன்றாக ஞாபக மிருக்கின்றன" என்றான்.

வக்கில் :—ஆம், சரிதான். நான் உன்னைக் கண்ட பொழுது சிறுவனாக இருந்தாய். இப்பொழுதோ அழகிய யெளவன வாலிபனாக வளர்ந்திருந்தாலும், உன் அழகிய கண்களின் அதே பார்வைதான் இப்பொழுது உன்னை

எனக்குத் தெரியப்படுத்தியது. இல்லாவிட்டால் ஒரே முறைகண்ட உன்னை ஏழு வருஷங்களுக்குப் பின் அவ்வளவு சுலபமாய்க் கண்டுகொள்ள முடியாது. அதுவும் தலையில் இவ்வளவு பெரிய கட்டுடனிருக்கையில் கண்டுகொள்ளவே முடியாது.

"முடியாது" என்று சொல்லி லீலாராம் பக்கம் திரும்பி, "என்ன ஐயா! ஏதோ சந்தேக மென்றீரே! சந்தேகமே கிடையாது......ஆம், நமக்கு இனிமேல்தான் முக்கியமான விஷயங்கள் இருக்கின்றன. அடாடா, என்ன வேலைத்திறம்! நம்பக்கூட முடியாததாக அல்லவோ இருக்கிறது? உம்,......உம்ம பேர்வழி எங்கே? அவரையல்லவோ முதலில் காணவேணும்!" என்றார்.

லீலாராம்:—அவரைத்தான் காணவில்லையாம். ராத்திரி வெளியில் சென்ற மனுஷ்யர் இன்னும் திரும்பி வரவில்லையாம். அவரது சாபர் மிகவும் கவலைப்படுகிறான். எனக்கும் சில விஷயங்களை ஆலோசனை செய்யக் கவலையே ஏற்படுகிறது! அவர் இன்னும் திரும்பி வராத காரணம் சிறிதும் புலப்படவில்லை.

நிரஞ்சன், "ராத்திரி சென்றவர் இன்னும் திரும்பி வரவில்லை!" என்று மெல்ல முணுமுணுத்தான். ஸ்ரீவத்ஸாவிற்காக அவனது மனம் மிகவும் கவலையை அடைந்ததென்று கூறவும் வேண்டுமா?

அமிர்தா ஒன்றுமே சொல்லவில்லை. ஆனால் அவளது மனம், "ஒருவேளை அவருக்கு ஏதாயினும் ஆபத்து நேர்ந்திருக்குமோ? அப்படி ஏதாயினும் ஆபத்து நேர்ந்திருந்தாலும், ஓ பகவானே! நீர் அவரைக் காப்பாற்ற வேணும்" என்பதாகப் பிரார்த்தனை செய்துகொண்டிருந்தது.

சுபாதாஸ்:—அவ்வாலிபர் புத்திசாலித்தனமும், முன் யோசனையும் உடையவரென்றுதான் அபிப்பிராயம். அதனால் கண்மூடித்தனமாய் ஒரு ஆபத்திற்குள்ளாக மாட்டாரென்றுதான் தோன்றுகிறது. எனினும் அவர் வந்து சேரும் வரையில் நமக்குக் கவலை விடாதுதான்.

லீலாராம்:—ஆம், வீணில் காலங் கடத்தித் தாமதமாய் நடந்துகொள்ளக் கூடியவரல்ல. ஏதோ நிர்ப்பந்தமான விஷயம் இருக்கிறபடியால்தான் அவர் இன்னும் வரவில்லை. அந்த நிர்ப்பந்தமான விஷயம் என்னவென்பது அவர் வந்தபிறகுதான் தெரியவேணும்!

அமிர்த குடீரத்தில் உள்ள ஒவ்வொருவரும் கவலை யுடன் ஸ்ரீவத்ஸாவின் வரவை எதிர்பார்த்துக்கொண் டிருந்தனர்.

## 25. கண்டம் தப்பிற்று

பிரகாசத்தினால் தள்ளப் பட்டதும் தடாலென்று ஸ்ரீவத்ஸா கிணற்றில் விழுந்தாரென்று தெரி வித்தோமல்லவா? அப்படி அவர் விழுந்த சமயம் பொறி கலங்கி விட்டதென்றே சொல்லவேண்டும். ஏனெனில், அவர் ஓடிவந்த சமயம் கிணற்றின் கைப்பிடிச்சுவர் தடுக்கிக் கீழே விழுந்ததும் அவரது தலையில் பலமான அடிபட்டு ரத்தம் கசிந்தது. அதை அவர் சமாளித்து நிற்பதற்குள் தள்ளப்பட்டுவிட்டதால் திடுக்கிட்டதாலும், எதிர்பாராமல் நேரிட்ட விஷயங்களை என்னவென்று ஊகிக்கக்கூட முடியாதபடியாலும், பொறி கலங்கிய நிலை ஏற்பட்டுவிட்டது. அத்துடன் அவர் தடாலென்று விழுந்ததில் முதலில் பின்பாகமே நன்கு அடிபட்டது. இரண்டாவதாக, பக்கவாட்டுச் சுவரில் தலை மோத் துண்டது. ஆகவே ஸ்ரீவத்ஸாவுக்குத் தாம் எவ்விடமோ பயங்கரமாக மோதி யடித்துக்கொண்டு பாதாளமான இடத்தில் விழப் போவதாய்க் கனவுபோல் ஒரு க்ஷண காலம் தோன்றிற்று. அதன்பின் அவரது பிரக்ஞை தவறிவிட்டது.

அக்கிணற்றில் சுமார் இரண்டடி உயரத்திற்குத் தான் தண்ணீர் இருந்தது. அத்துடன் அக்கிணறு அடிக்கடி இறைபடாத கிணருக இருந்தபடியால் அடியில் சேறும் கல்லும், மட்டையும் கட்டையுமாய்க் கிடந்தன. ஸ்ரீவத்ஸா அதனுள் விழுந்தபொழுது அவரது மேலே போட்டுக் கொண்டிருந்த கோட்டு ஒரு பிடிகல்லில் நன்ருய் மாட்டிக்கொள்ளவே ஸ்ரீவத்ஸா கிணற்றுக்குள் பிரக்ஞையின்றி விழுந்த சமயம் அவரது தலை தண்ணி ருக்குள் அமிழ்ந்து போகாதபடி உதவி புரிந்தது. அப்படி ஏற்படாது போயிருந்தால் மூர்ச்சை அடைந்திருக்கும் ஸ்ரீவத்ஸா தண்ணிருக்குள் மல்லாக்காகப் படுத்தபடி விழுந்திருப்பார். ஆகவே அந்த இரண்டடித் தண்ணிரே அவரது மரணத்திற்குப் போதுமானதாக இருந் திருக்கும்!

கடவுளின் அருளுக்குப் பாத்திரமாக இருப்பவன் கட்டாயம் நியாயத்திற்குப் பாடுபடுபவனுகவும், நல்ல மன

முடையவனுக்கும், கடவுள் ஒருவருண்டென நினைப்பவனு மாகத்தான் இருப்பான். அக்கிரமஸ்தனுக்குக் கடவுளின் அருள் இருக்குமெனச் சொல்ல முடியுமா? கொஞ்ச காலம் வேண்டுமானல் அக்கிரமஸ்தனுக்கும் காரியங்கள் இனிது நிறைவேறலாம். அதனல் அவனது அக்கிரமம் பெருகும். ஆனல், கடைசியில் அவனடைவது பெரு வீழ்ச்சியே. இவ்வுண்மை கண்கூடாகத் தெரிந்தும், மனிதன் இதைச் சமயத்தில் உணராமல் மேன்மேலும் பேராசைக்கு இடங் கொடுத்து அக்கிரமத்தில் இறங்குவது விந்தையா, விதியா? அல்லது இதுதான் மாயையின் கூத்தா? எவ்வளவோ நல்ல திவிரமான மூளையை நேர்வழிக்குச் செலுத்தாமல் அக்கிரம வழியில் செலுத்தினல் அது அவனது கர்ம பலன் போலும்—உம், விதி யாரை விட்டது?

ஸ்ரீவத்ஸாவின் நற்காலத்தால், கடவுளருளால், ஆயுள்—பலத்தால், அவரது தலை தண்ணீர் மட்டத் திற்குச் சற்று மேலாகச் சுவரில் உராய்ந்தபடி இருந்தது. அந்நிலையிலேயே ஸ்ரீவத்ஸா சற்றும் உணர்வின்றிச் சுமார் நாலு மணி நேரம் கிடந்தார்.

அவருக்குச் சிறிது சிறிதாய் உணர்வு ஏற்படத் தலைப்பட்டது. அவர் உணர்வு பெற்றதும் தம் உடல் கட்டைபோல் மரத்திருப்பதை உணர்ந்தார். மேலும் தம் மனத்தில் பெரும் பீதியையும் கஷ்டத்தையும் அனு பவிப்பது போலத் தோன்றிற்று. பிறகு அவர் தாம் இருக்குமிடம் எதுவென்று சிந்தனை பண்ணினர். கை களில் தண்ணீரின் ஸ்பரிசமும் கால்களில் சேறும் பட்டுக் கொண்டிருப்பது போன்ற உணர்ச்சி தென்படவும், தனக்கு என்ன நேர்ந்தது என்பதைப் பற்றி நினைத்துப் பார்த்து, நடந்த விஷயங்களை ஒரு தினுசாய் ஊகித்துக் கொண்டார். "அடாடா, நாம் எவ்வளவு நேரமாக இக் கிணற்றிலேயே கிடக்கிருேமோ தெரியவில்லையே, தலையில் வேறு ஏதோ மிக்க பாதையைக் கொடுக்கிறதே! நான் இப்பொழுது செய்யக் கூடியது யாது?" என்பதாக எண்ணினர். பிறகு ரொம்பவும் கஷ்டத்தின்மேல் பக்கச் சுவரைப் பிடித்துக்கொண்டு பிடிகல்லை எட்டிச் சாய்ந்த படி உட்கார்ந்து கொண்டார்.

அதன் பிறகு தம்மால் பிடிகற்களின் உதவியைக் கொண்டு ஏறிச்செல்ல முடியுமா? — என்று சந்தேகப் பட்டார். ஏனெனில், அவரது உடம்பு சுவாதீன மற் றிருந்தது. அத்துடன் அவ்விருளில் பிடிகற்கள்

முழுவதும் ஏறிச்செல்வதற்கு இருக்குமா, இல்லையா?—என்பதும் கண்களுக்குப் புலப்படவில்லை. ஆகவே அவர் 'சிவ, சிவா' என்று வெளிச்சம் வரும்வரையில் சிந்தனை பண்ணியே கழிக்கவேண்டியிருந்தது.

காலை ஐந்துமணி சுமாருக்கு அத்தோட்டக் குத்தகைக்காரன் ஒரு கையில் தாம்பையும் தோண்டியையும் எடுத்துக்கொண்டு, ஒரு கையால் மீசையை முறுக்கியபடி ஏதோ உரக்கப் பாடிக்கொண்டே வந்துகொண்டிருந்தான்.

'யாராயினும் உதவி செய்ய வரமாட்டார்களா?' என்றபடியே ஜபம் செய்துகொண்டிருந்த ஸ்ரீவத்ஸாவின் காதில் தோட்டக்காரன் பாடிக்கொண்டு போனது கேட்கவும், "உயரத் தோட்டத்திலே ஆரப்பா? ஓ, ஐயா! ஐயா!!" என்பதாகச் சத்தம் போட்டார்.

ஸ்ரீவத்ஸாவின் கூப்பாடு தோட்டக்காரன் காதில் விழவும், "யாரது?" என்று கிணற்றுக்குப் பத்தடி தூரத்திலே நின்று அவன் நாலுபுறமும் சுற்றிப் பார்த்தான். அச்சமயம் ஸ்ரீவத்ஸா மறுபடியும் கூப்பாடு போடவே, தோட்டக்காரன் சந்தேகத்துடன் கிணற்றருகில் வந்து எட்டிப் பார்த்தான். ஆச்சரியத்துடன் "ஏன்? நீ யாரு? எப்போது கிணற்றில் இறங்கினாய்?" என்று கேட்டான்.

ஸ்ரீவத்ஸா :—நீ நினைக்கிறபடி நானாகக் கிணற்றில் இறங்கவில்லை; ஒரு திருட்டுப் பயல் என்னைத் தள்ளி விட்டுப் போய்விட்டான். தலையில் நல்ல அடி, அத்துடன் இராமுழுவதும் தண்ணீரில் ஊறி விறைத்திருக்கிறேன். என்னாலே ஏறிவர முடியாது. நீ கொஞ்சம் தயவுசெய்து ஒரு கயிற்றைப் பக்கத்திலுள்ள மரத்திலாவது கட்டிக் கிணற்றுக்குள் தொங்கவிடு, நான் அதைப் பற்றிக்கொள்ளுகிறேன். நீயும் உதவி செய், நான் மேலே வந்துவிடுகிறேன்.

உடனே தோட்டக்காரன் தான் கொண்டுவந்திருந்த தாம்புக்கயிற்றைப் பக்கத்திலுள்ள ஒரு தென்ன மரத்தில் கட்டி, மற்றொரு நுனியைக் கிணற்றுக்குள் விட்டு, "ஐயா, நீங்கள் கெட்டியாய்க் கயிற்றைப் பிடித்துக் கொள்ளுங்கள். நான் தூக்கிவிடுகிறேன்" என்றான். ஸ்ரீவத்ஸா இடுப்பைச் சுற்றிக் கயிற்றைக் கட்டிக் கொண்டு தொங்கும் பாகத்தை இறுகப் பிடித்துக் கொண்டார்.

தோட்டக்காரன் நல்ல பலசாலியானதால் கயிற்றைப் பரபரவென்று மேலே இழுக்க, ஸ்ரீவத்ஸா கைப்பிடிச் சுவரருகில் வந்துவிடவே, அவன் இவர் கையைப் பிடித்து இப்புறம் வருவதற்கும் உதவி செய்தான். ஐந்து நிமிஷம் களைப்பினால் ஸ்ரீவத்ஸாவுக்குப் பேச முடியவில்லை.

அதற்குள் வெளிச்சம் வந்துவிடவே, தோட்டக்காரன் "ஐயா! உங்க தலையிலே பட்டிருக்கும் அடி பலமாய்த்தா னிருக்கு. ரத்தம் பெருகி உறைஞ்சு போச்சுங்க. இவ்வளவு பலத்த அடிக்கு நீங்க மூர்ச்சை போட்டிருப்பீங் களே?" என்றான்.

ஸ்ரீவத்ஸா:—ஆம், கொஞ்சநேரம் மூர்ச்சித்துத்தான் இருந்திருப்பேன்.

தோட்டக்காரன்:—ஆமாங்க, காயமேதான் சொல்லுதே! அதுவும், பொட்டுக் கிட்டப் பட்டிருக்கும் அடி பலத்த அடிங்க! இதோ ஒரு நொடியிலே பச்சிலை பறிச்சு வந்து கட்டிட்டா, சீழ் பிடிக்காமலிருக்கும்!

என்று சொல்லி ஸ்ரீவத்ஸாவின் பதிலைக் கூட எதிர் பாராமல் பச்சிலை கொண்டுவரப் போய்விட்டான்.

ஸ்ரீவத்ஸா தமது சராய் ஜோபிக்குள்ளும் கோட்டு ஜோபிக்குள்ளும் கையைவிட்டு நனைந்து போயிருந்த சில கடிதங்களையும் பர்ஸையும் எடுத்துப் பார்த்தார். எதையோ காணாதவர் போல் திடுக்கிட்டார். பிறகு ஒன்றைச் சுற்றிக் கவனித்தார். சற்றுத் தூரத்தில் இடிந்த செங்கல் குவிக்கப்பட்டிருந்த ஒரு சிறிய குவியலின் அடுக்கில் அவரது திருஷ்டிபட்டதும் அவ்விடம் சென்று அங்கே தம் கண்ணில் பட்ட வஸ்துவை எடுத்தார். இவர் முகம் சந்தோஷத்தால் மலர்ந்தது. அதைப் பத்திரமாய்த் தம் கோட்டு ஜோபிக்குள் வைத்துக் கொண்டார். செங்கற்களுக்கிடையில் இருந்த செந்நிறம் கொண்ட அந்தக் குறிப்புப் புஸ்தகம், இரவில் அதன் சொந்தக்காரன் தேடின சமயம் அவனுடைய கண்களில் அகப்படாமல் போனது ஸ்ரீவத்ஸாவின் அதிர்ஷ்டந் தான்.

தோட்டக்காரன் கையில் பச்சிலையுடன் திரும்பி வந்து, காயங்களைத் தன் தலைப்பாகைத் துணியைக் கிழித்துக் கட்டினான். பிறகு ஸ்ரீவத்ஸா தமது பர்ஸை எடுத்து அதிலிருந்து மூன்று ரூபாயைத் தோட்டக் காரனிடம் கொடுத்தார். பிறகு ஒரு கோச்சு அழைத்து

வரும்படி சொல்ல, அவன் பத்து நிமிஷத்தில் கோச்சுடன் திரும்பிவந்தான். ஸ்ரீவத்ஸா தோட்டக்காரனுக்கு நன்றி செலுத்திவிட்டு மெள்ளக் கோச்சில் ஏறிக்கொண்டார்.

## 26. நிகழப்போகும் சம்பவம் யாது?

அமிர்த குடீரத்திலுள்ள அனைவரும் ஸ்ரீவத்ஸா வராத காரணம்பற்றிக் கவலைப்பட்டுக்கொண்டிருந்த சமயம் வாசலில் ஒரு கோச்சு வந்து நிற்கவும், அதிலிருந்து ஸ்ரீவத்ஸா மெள்ள இறங்கினர். இவரது கோலத்தைக் கண்ட கரீமும் இராகுலனும் ஓடிவந்து மெள்ளப் பிடித்து அழைத்து வந்தனர். ஸ்ரீவத்ஸாவின் காதிலும் கழுத்திலும் இரத்தம் வடிந்திருப்பதையும், தலையில் பெரிய கட்டுப் போட்டிருப்பதையுங் கண்டு, இவர் பெரியதொரு கண்டத்தினின்றும் தப்பி வந்திருக்கிறார் என்பதை யாவரும் க்ஷணத்தில் ஊகித்தனர்.

ஸ்ரீவத்ஸா உள்ளே நுழைந்ததும் இவரைக் கண்ட அமிர்தா ரகஸ்யமாய்க் கைகளைக் கூப்பித் தங்கள் ஆப்தபந்து திரும்பி வந்து சேர்ந்ததற்காகக் கடவுளை வணங்கினாள். அதேபோல் நிரஞ்சனுக்கும் ஸ்ரீவத்ஸாவைக் கண்டபின்தான் நிம்மதி ஏற்பட்டது.

அனைவரும் ஏக காலத்தில், "என்ன நேர்ந்தது?" என்று பரபரப்புடன் கேட்டனர்.

ஸ்ரீவத்ஸா உடைமாற்றிக்கொண்டு ஒரு சோபாவில் சாய்ந்துகொண்டதும், "ஒன்றும் பிரமாதமில்லை. சொற்பக் காயம், அவ்வளவுதான். அடாடா, என் வரவுக்குத்தான் யாவரும் காத்துக்கொண்டிருப்பதுபோ லிருக்கிறது!" என்றார்.

உடனே லிலாராம், "இவர்தான் ஜமீன் வக்கில் தாமோதரம். இவர்தான் நாம் எதிர்பார்த்துக் கொண்டிருந்த ஸ்ரீவத்ஸா" என்று இருவரையும் அறிமுகஞ் செய்துவைக்க, இருவரும் கை குலுக்கிக் கொண்டனர்.

அச்சமயம் சுப்ரதாஸின் கட்டளைப்படி சூடான சிற்றுண்டியும் பாலும் கொண்டுவந்து வைக்கப்பட்டன. ஸ்ரீவத்ஸா சாப்பிட்டுக் களை தெளிந்தார். பிறகு ஒரு சிறு துண்டுக் கடிதத்தில் எதையோ எழுதி வக்கில் தாமோதரமிடம் காட்டினார். அதைப் படித்த வக்கில்

ஆச்சரியப்பட்ட தோற்றத்துடன், "ஆம், சந்தேகமே இல்லை" என்றார்.

வக்கீல் :—அவசியம் நேர்ந்த சமயம் நான் அழைப்புமணியை உபயோகி......

ஸ்ரீவத்ஸா :—ஆம், இருமுறை அடித்தால் போதும். மாளிகையின் திரைச் சீலைகள் யாவும் விடப்பட்டேயிருக்கவேணும். நடு ஹாலின் வடபுற அறையின் வெளிக் கதவு திறந்தும் திரைவிடைப்பட்டும் இருக்கட்டும். வேலையாட்களையும் எச்சரித்து வைக்கவேணும்.

லீலாராம் :—அப்படியே.

சுப்ரதாஸ் :—இவ்வளவு நேரம் நீங்கள் மூவரும் பேசிய விஷயத்திலிருந்து ஒன்றும் விளங்கவில்லை. ஆனால் ஏதோ ஒரு அதிசய சம்பவம் நிகழப் போகிறதென்று மட்டும் தெரிகிறது. அதை வந்துதான் பார்த்துவிடுகிறேனே!

ஸ்ரீவத்ஸா :—நிகழப் போவது ஒரு அதிசய சம்பவந்தானென்று எப்படி நினைத்தீர்கள்? ஒன்று, இரண்டு, மூன்றுக்கும் மேற்பட்ட அதிசய சம்பவமே நிகழ்ந்தாலும் நிகழலாம்.

லீலாராம் :—(ஆச்சரியத்துடன்) மூன்றுக்கும் மேற்பட்டா?

சுப்ரதாஸின் மனைவி அமிர்தாவிடம் வந்து, "கண்ணே! குழந்தாய், ஏதோ அதிசய சம்பவம் நிகழப் போகிறதாம், நாங்களும் பார்க்கலாமென்று போய் வருகிறோம்!" என்றாள்.

அவ்விருவரையும் கவனித்துக் கொண்டிருந்த ஸ்ரீவத்ஸா உள்ளுக்குள்ளே சிரித்துக்கொண்டார். பிறகு லீலாராம், வக்கீல், சுப்ரதாஸ், அவரது மனைவி யாவரும் புறப்பட்டுச் சென்றனர்.

அவர்கள் சென்ற இரண்டொரு நிமிஷம் கழித்து டாக்டர் ரமேசம் வந்து நிரஞ்சனையும் அமிர்தாவையும் பார்த்து அவர்களுடைய உடல்நிலை குணமாகி வருவதாய்த் தெரிவித்த பிறகு, ஸ்ரீவத்ஸாவுக்கு யாது நேர்ந்ததென விசாரித்தார். டாக்டர் கொடுத்த மருந்தைச் சாப்பிட்டுப் பத்து நிமிஷம் ஆனபிறகு தாம் பத்திரமாய் எடுத்துக் கொண்டுவந்த செந்நிறக் குறிப்புப் புத்தகத்தைப் பிரித்து, ஸ்ரீவத்ஸா அதிலிருந்து ஒரு கடிதத்தை

எடுத்து வைத்துக்கொண்டார். அக்கடிதம் முன்பு அமிர்தாவிடமிருந்து அகப்பட்ட கடிதத்தைப்போலவே எண்களுடன் இருந்தன. ஆகவே முன் கடிதத்தைப் போலவே எண்களை எழுத்தாக அமைத்து எழுதிக் கொண்டார். பிறகு முன் குறிப்புக் கடிதத்தின் பக்கத்தில் இதைப் பொருத்திச் சேர்த்துப் படித்துப் பார்த்தார். உடனே சந்தோஷத்தால் 'சபாஷ்' என்று கூவினார்.

பிறகு முதல் நாள் அபகரித்த ஒரு சிறு பையைத் திறந்து உள்ளிருந்த சில கடிதங்களை விளக்கேற்றி அதில் வாட்டினார் உலரும் பொருட்டு. அவ்வளவு நனைந்திராத படியால் சீக்கிரம் உலர்ந்துவிட்டன. பின் அதை ஒவ்வொன்றாய்ப் படித்துப் பார்த்து, இரண்டு கடிதங்களை மட்டும் எடுத்துத் தம் கோட்டின் உள்ஜோபிக்குள் வைத்துக்கொண்டார். தாம் அபகரித்துவந்த சிறு பையையும் மற்றவைகளுடன் கீழ் ஜோபிக்குள் போட்டுக்கொண்டார். அப்புறம் சற்று ஆலோசனை செய்து ஏதோ நினைத்துக்கொண்டவராய்த் தாம் ஜமீன் மாளிகையின் பச்சை அறையிலிருந்து எடுத்துக்கொண்டு வந்த அக்கடிதத்தையும் எடுத்து உள் ஜோபியில், அதாவது முன் இரண்டு கடிதம் வைத்துக்கொண்ட அதே ஜோபியில், வைத்துக்கொண்டார். அதன் பின் தம் பிஸ்டலில் குண்டு கெட்டித்துப் பத்திரப்படுத்திக்கொண்டு, கரீமைக் கார் கொண்டுவரச் செய்து ஏறிக்கொண்டு நேரே அவ்வூர்ப் போலிஸ் டெபுடி கமிஷனரின் இருப்பிடத்திற்குக் காரை ஓட்டச் சொன்னார்.

பத்து நிமிஷங் கடந்தபின் டெபுடி கமிஷனர் மாளிகைக்கு ஆறு கான்ஸ்டெபிள்கள் வந்து சேர்ந்தனர். ஸ்ரீவத்ஸா அந்த ஆறு கான்ஸ்டெபிள்களுடன் அமிர்த குடீரம் வந்து, நிரஞ்சனையும் அமிர்தாவையும் தம்முடன் காரில் ஓரிடத்திற்கு வரவேண்டுமென்று கூறி, முதலில் தம்முடன் நிரஞ்சன், அமிர்தா, இரண்டு கான்ஸ்டெபிள்களும் செல்லுவதென்றும், பிறகு கரீமும் இராகுலனும் மற்றக் கான்ஸ்டெபிள்களுடன் ஜமீன் மாளிகை வந்து சேரவேண்டுமென்றும், ஆனால் காரை ஜமீன் மாளிகைக்குள் கொண்டுவராமல் வெளிப்புறமே ஒதுக்கமாய் நிறுத்தி வைக்கவேண்டுமென்றும், அவர்கள் ஜமீன் மாளிகைக்கு வந்து சேருவது அம்மாளிகையினுள் இருப்பவர்களுக்குத் தெரியாமல் இருக்கவேண்டுமென்றும் எச்சரித்தார். மேலும் கரீமிடம் சில விஷயங்களைத்

தெரிவித்தபின், ஜமீன் மாளிகைக்கு நாலு புறமும் வாசற்படிகள் இருக்கிறபடியால் தம்முடன் வரும் இரண்டு கான்ஸ்டெபிள்களும் பிரதான வாசலுக்கு அப்பால் காவலிருக்கவேண்டிய தென்றும், கரீமுடன் வரும் நால்வரில் இருவர் பின்புறத்திலும், இருவர் தென் புற வாசலிலும் உஷாராக இருக்கவேண்டுமென்றும், வடபுற வாசலுக் கருகில் கரீமும் இராகுலனும் வந்து சேரவேண்டும் என்றும் கூறினார்.

பிறகு காரில் ஸ்ரீவத்ஸா நிரஞ்சன் அமிர்தா மூவரும் பின் ஸீட்டில் அமர, முன் பக்கம் இரண்டு கான்ஸ்டெபிள்கள் உட்கார்ந்துகொண்டனர். கரீம் காரை ஜமீன் மாளிகையை நோக்கிச் செலுத்தினன்.

காருக்குள்ளிருந்த அனைவரும் ஒரே மௌனமாக இருந்தனர். கான்ஸ்டபிள்களுக்கும் நிகழப் போகும் விஷயத்தைப் பற்றி ஒன்றும் தெரியாது. அவர்களுக்கு ஸ்ரீவத்ஸா என்ன கட்டளை யிடுகிருரோ அவ்விதம் நடந்துகொள்ளவேண்டும் என்று டெபுடியிடமிருந்து உத்தரவே தவிர மற்றெதுவும் தெரியாது.

நிரஞ்சனும் அமிர்தாவும் வாய் பேசாமலேயே ஒரு வருக்கொருவர் அடிக்கடி கண்ணோடு கண் பேசிக் கொண்டனர். அச்சமயத்தில் அவ்விருவர் முகத்திலும் ஏதோ ஓர் ஆபத்தை எதிர்நோக்குவது போன்ற திகில் பிரதிபலித்தது. ஸ்ரீவத்ஸாவோ, தாம் எதிர்பார்த் திருக்கும் சமயத்தில் எப்படி எப்படி நடந்துகொள்ள வேண்டுமென்பதைப் பற்றிய சிந்தனையில் ஈடுபட்டிருந் தார்.

## 27. பிரேதம் எங்கே?

ஜமீன் மாளிகையின் நடு ஹாலில் பகவன்தாஸ், பிரகாசம், வக்கில் தாமோதரம், லிலாராம், சுப்ர தாஸ், அவரது மனைவி அமிர்தாபாய் யாவரும் இரண்டு வட்டமேஜைகளைச் சுற்றிப் போட்டிருந்த சுழல் நாற் காலிகளிலும் ஸோபாக்களிலும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தனர். ஒவ்வொரு வாசற்படியிலும் நில நிறப் பட்டுத் திரைச்சீலை விரிக்கப்பட்டிருந்தது.

பிரகாசம்:—சாவி உங்களிடந்தானே யிருந்தது? அப்படி யிருக்க அவ்வறையிலிருந்த பிணம் எப்படிக்

காணமல் போகும்? எப்பொழுதாவது உங்களிடமிருந்த அந்த அறைச் சாவி காணமல் போயிருந்ததுண்டா?

லீலாராம்:—இல்லை, அது என் கொத்துச் சாவி யுடனேயே இருந்தது.

பகவன்தாஸ்:—ஜாலவித்தை போல்தான் இருக் கிறது! அறை பூட்டியபடியே இருக்க, அறையிலிருந்த பிரேதம் காணமல் போகிறதென்றால், கதைபோல் இருக்கிறதே தவிர நடக்கக்கூடிய விஷயமாக இல்லையே?

பிரகாசம்:—நல்ல நிலைக்கு வரவேண்டியவன் குரூர மாய்க் கொல்லப்பட்டதுடன், அநாதைப் பிரேதமாய்க் கிடப்பானேன் என்று நாம் ஒரு நல்ல எண்ணத்துடன் எவ்வளவோ கஷ்டங்களைப் பாராமல் எடுத்துக்கொண்டு வந்தும்,—அவன் செய்த பாவம்!—உம்,...பிரேதத்தைக் கூட......

பகவன்தாஸ்:—நிகழும் சம்பவமெல்லாம் மேலும் மேலும் ஆச்சரியமாகவும், நம்பக்கூடாததாகவும் இருக் கிறது. நேற்று இரவு நாங்கள் படக்காட்சி பார்க்கும் சமயம் எவனோ ஒரு பையன் ஒரு துண்டுக் கடிதத்தை என்னிடம் கொண்டுவந்து கொடுத்தான். அதில், எங்கள் காரோட்டி அடுத்த தோட்டத்தில் மயக்கமாய் நடக்க முடியாத நிலையில் கிடப்பதாயும், நான் தனியாக வந்து பார்க்க வேணுமென்றும் எழுதப்பட்டிருந்தது. எங்கள் காரோட்டியைக் காணுதபடியால் உண்மை என்றே நம்பி நான் இவரை விட்டுத் தனியாகச் சென்றேன். குறித்த தோட்டத்தில் முதலில் ஒருவரை யும் காணவில்லை. பிறகு குபீரென்று எவனோ வந்து என் ஜோபியில் கைபோட அவனும் நானும் கட்டிப் புரள வேண்டியதாச்சு!

பிரகாசம்:—கடைசியில் நான் சந்தேகப்பட்டு இவ ரைத் தேடிச்சென்று சரியான சமயத்தில் உதவி, அந்தத் திருட்டுப்பயலை விரட்டி யடித்தேன். கடைசியில் அவன் ஏதோ ஒரு பள்ளத்தில் விழுந்த பிறகுதான் நான் திரும்பிவந்தேன். அந்தப் பயல் எங்கள் சர்பரே அல்ல! எவனோ நாகரிகத் திருடன்! இந்தச் சந்திர புரியிலே இப்படி யெல்லாம் திருட்டு நடக்கும்போல் தோன்றுகிறது.

அவ்விஷயங்களைக் கேட்ட வக்கில், லீலாராம், சுப்ர தாஸ், அவரது மனைவி இவர்களுக்கெல்லாம் ஸ்ரீவத்ஸா வின் நினைவு வந்தது.

வக்கீல் நாமோதரம் :—அடடா, என்ன அக்கிரமம்! ஏதாவது களவு போச்சோ?

பகவன்தாஸ்:—ஆம், என் பணப்பை போய்விட்டது. அத்துடன் ஒரு குறிப்புப் புஸ்தகமும் சில கடிதங்களும் காணவில்லை. அவற்ருல் அவனுக்கு ஒன்றும் உபயோக மில்லை. திருடனுக்கு வேண்டியது பணம். ஐம்பது ரூபாய்போல் கிடைத்துவிட்டது.

லீலாராம் :—காணுமல் போன கடிதங்கள் முக்கிய மானவையோ?

பகவன்தாஸ் :—அப்படி ஒன்றும் இல்லை.

ஆனுல் பகவன்தாஸ் முகமும் பிரகாசத்தின் முகமும் எதிர் பாராத அதிசய சம்பவங்களால் கலவர மடைந் திருப்பதை லீலாராம் கண்டுகொண்டார்.

வக்கீல் :—ஒருவேளை அவ்வாலிபனைக் கொன்ற ஆட்களே திருட்டுத் தனமாய் வந்து, தங்கள் கொலை வெளிவராம லிருப்பதற்காகப் பிணத்தை எடுத்துப் போயிருக்கலாமோ?

பிரகாசம் :—அதெப்படி முடியும்? முதலில் அவனைக் கொன்ற ஆட்களுக்கு நாங்கள் பிணத்தை எடுத்து வந்ததே தெரியாது. மேலும் பிணம் இங்கே கொண்டு வரப்பட்டு வைக்கப்பட்டிருந்தது எப்படித் தெரியும்? அல்லும் பகலும் மாளிகையில் இத்தனை ஆட்கள் இருந்துகொண்டிருக்கையில் அவர்கள் வந்து அவ்வளவு சுலபமாய்ப் பிணத்தை எப்படி ஒருவரும் அறியாமல் எடுத்துச் சென்றிருக்க முடியும்?

வக்கீல் :—உம்......ஆம், அப்படி எடுத்துச் செல்லுவது சுலபம் இல்லைதான்..........நீங்கள் சென்று பார்க்கையில் அவ்வாலிபன் நிச்சயமாய் இறந்து போயிருந்தாரு? உண்மையில் பிரேதந்தாரு என்பதை அறிந்தீர்களா?

பகவன்தாஸ் :—அதில் சந்தேகமிருக்க நியாயமில்லை. அவனுடம்பில் அசாத்தியமான வெட்டுக் காயங்களால் விகாரம் ஏற்பட்டிருந்தபடியால்தான் உடல் மூடி வைக்கப்பட்டிருந்தது. அத்துணிகளின் மேல் இரத்தக் கறை படிந்திருந்தது. பிணம் இங்கே கொண்டுவரப் பட்டபின் லீலாராம்கூடப் பார்த்தாரே!

லீலாராம் :—ஆம், பார்த்தேன். அழகிய முகம்! பிணத்தின் முகமாக இருந்தும் விகாரப்படாம லிருந்ததைக் கண்டு ஆச்சரியப்பட்டேன்.

வக்கீல் :—அவ்வாலிபன் யாரென்று உங்களுக்குத் தெரியுமல்லவா ?

பகவன்தாஸ் :—சென்ற வாரம்தான் தெரியும் அவன் யாரென்று. பிரபு ஜகன் மோகனதாஸ் சொல்லித்தான் தெரிந்துகொண்டேன்.

வக்கீல் :—(திடீரென்று) சென்ற வாரம் அவனைப் பற்றி அவர் தெரிவிக்கவேண்டிய காரணம் என்ன ?

பகவன்தாஸ் :—சென்றவாரம்தான் அவ்வாலிபன் மோகன் மாளிகைக்கு விருந்தாளியாக வந்திருந்தான். பிரபு ஜகன்மோகனதாஸ் இறப்பதற்கு முதல் தினம், என்னையும் விருந்துக்கு வரும்படி அழைத்த சமயம், அவ்வாலிபன் இன்னான் என்பதையும், அவனுக்காகவே அன்று விருந்து ஏற்படுத்துவதையும் கூறினார். அப்பொழுதுதான் அவர், "ஜமீனுக்கு வரப்போகும் வாரிசுதாரன் அவன்தான். ஆனால் பையனின் நடத்தை ஒழுங்கானதா யில்லை. நானும் அவனைத் திருத்த முயல்கிறேன். அது பலனளியாது போலிருக்கு! ஆம், ரொம்பவும் கெட்டலைந்து போயிருக்கிறான்!" என்று வருத்தப்பட்டார். மறுதினம் விருந்து முடிந்த சமயம்தான் அவரே மரணமடைந்து கிடந்தார்!

வக்கீல் :—ஜகன்மோகனதாஸ் மரணம் இயற்கையில் ஏற்பட்டதுதான் என்று சொல்லுகிறீர்களா ?

பகவன்தாஸ் :—அகஸ்மாத்தாய் மரணம்தான் என்று பிரஸ்தாபம். ஆனால்......உண்மையில் அது கொலை தான்-!

வக்கீல் :—அப்படியா ? கொலையாளி யார் என்று விளங்கவில்லையோ ?

பகவன்தாஸ் :—நமக்குத் தெரியும், ஆனால் வெளியில் தெரிவிப்பது உசிதமல்ல. அந்தக் கொலையைச் செய்து விட்டுத்தான் தப்பி ஓடிவந்தான். பாவம் யாரை விட்டது ? அவனது சகாக்களே அவனைக் கொலை செய்து விட்டனர்.

வக்கீல் :—அப்படியானால், காணமல்போன பிணம் ஜகன் மோகனதாஸைக் கொலை செய்த வாலிபன்......

பகவன்தாஸ் :—ஆம், அதற்குச் சந்தேகமே யில்லை. பிரபுவைக் கொலை செய்துவிட்டு வந்த வாலிபனது பிணம்தான் அது!

வக்கில் :—அவ்வாலிபன் பிரபுவைக் கொலை செய்ய வேண்டிய அவசியம் என்ன? பிரபிவின் மரணத்தால் அவன் அடையக்கூடிய லாபம் என்ன?

பகவன்தாஸ் :—லாபம் இல்லாமலா அவ்விதம் செய்யத் துணிந்தான்? நிரஞ்சன் என்ற அவ்வாலிபன் இருபத்து நாலு வயது வரையில் நல்ல நட்வடிக்கையுட் னிருந்தால்தானே அவனுக்கு ஜமீன் பாத்தியதை ஏற் படும்? இல்லையானல் ஜமீனுக்கும் அவனுக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை என்பது குடும்ப வக்கிலான தங்க ளுக்குத் தெரியாத விஷயமா?

வக்கில் :—ஆம்; ஆம், இருந்தாலும் அவனைக் கொல்லவேண்டிய காரணம்?

பகவன்தாஸ் :—காரணம்தான் சுலபமாகத் தெரி கிறதே! வாலிபனது நடத்தை மோசமானது என்பது ஜகன்மோகனதாஸுக்குத் தெரியும். ஆகவே அவர் தன் நடத்தையைப் பற்றித் தங்களுக்கோ, லிலாராமுக்கோ தெரிவித்துத் தனக்கு ஜமீன் பாத்தி யதை அற்றுப் போகும்படி செய்யக்கூடுமோ என்ற பயம் தான்!

பிரகாசம் :—ஆம், அந்தப் பயத்தால்தான் அவரே இல்லாமலடித்துவிட்டால் அவரைப் பற்றிப் பயப்பட வேண்டாம் என்று எண்ணி யிருப்பான்!

வக்கில் :—சரி, அவரைப் பற்றிய பயம் தீர்ந்தது. ஆனல் அவனது நடத்தையைத் தெரிந்துகொண்ட நீங்கள் இருக்கிறீர்களே, உங்களைப் பற்றி ஏன் அவன் பயங்கொள்ளவில்லை?

பகவன்தாஸ் :—அவனைப் பற்றிய உண்மைகளை எனக்கு ஜகன்மோகனதாஸ் சொல்லி யிருப்பது அவ னுக்குத் தெரிந்திருக்க வழியில்லையே! அப்படித் தெரிந் திருந்தால் அவன் கட்டாயம் என்னைக்கூடத் தீர்த்திருப் பானே, என்னவோ?

வக்கில் :—உம்.........அவ்வாலிபன் பிரபு ஜகன் மோகனதாஸைக் கொன்றபின் வேறு இடத்திற்கு ஓடி விட்டான். எந்த இடத்திற்கு ஓடினனென்பதை நீங்கள் எப்படி அறிந்தீர்கள்?

பகவன்தாஸ்:—ஜகன் மோகனதாஸ் மரணத்திற்கு அவ்வாலிபன் காரணமாக இருக்கலாமோ என்று நாங்கள் சந்தேகப்பட்டோம். அதை ஊர்ஜிதப்படுத்துவதுபோல் மறுதினமே இரவில் ஒருவருமறியாதபடி ரகஸ்யமாய் மாளிகையைவிட்டு அவன் வெளியேறிவிட்டதை அறிந்தேன். பிறகு நான் அவனைக் கண்டு அவன் மேலுள்ள சந்தேகத்தைச் சொல்லி அவன் வாய் மூலமாகவே விஷயங்களை அறியவேணும் என்று தீர்மானித்து, ரயில்வே ஸ்டேஷனுக்குச் சென்று அவனது அடையாளங்களைக் கூறி இரவிலாவது விடியற்காலமாவது அவன் டிக்கெட் வாங்கியது உண்டா என்று விசாரித்தேன், அந்த அடையாளமுள்ள ஒரு வாலிபன் ராயல்பட்டிக்கு டிக்கெட் பெற்றதாய் தெரியவந்தது. நான் திரும்பி வீட்டை அடைந்து துணைக்கு இந்த என் நண்பரையும் அழைத்துக்கொண்டு ராயல்பட்டிக்குப் பிரயாணமானேன். மேலும் நான் அவ்வளவு தூரம் முயன்றதற்கு மற்றொரு காரணமும் உண்டு. அதாவது, ஜகன் மோகனதாஸ் மரணத்தைப் பற்றி அவ்வூர் டெபுடி கமிஷனர் ஆப் போலீஸ் ஆராய்ச்சி செய்துவந்தார். ஒரு வேளை அவரும் என்னைப்போல் நிரஞ்சனைச் சந்தேகப்படுகிறாரோ? — என்றும் எனக்குத் தோன்றிற்று. அப்படி அவனைப் பற்றிய சந்தேகம் ஊர்ஜிதமாகி அவனுக்கு வாரண்டு பிறப்பித்துவிட்டால், இதுவரையில் எவ்வளவோ கண்யமாய் வாழ்ந்துவந்த பிரபுவைப் பற்றியும், ஜமீனைப் பற்றியும் கோர்ட்டில் அடிபடுவதுடன் ஜமீன் வம்சத்திற்கே களங்கம் ஏற்பட்டுவிடுமே! அதனால் அவ்வளவு தூரம் செல்ல விடாமல் அவ்வாலிபனிடம் உண்மையை அறிந்து இவ்விடம் அழைத்துவந்து வக்கீலையும் கலந்து, நடக்க வேண்டிய விஷயங்களைக் கவனிக்கலாமென்ற எண்ணம். நாங்கள் ராயல்பட்டிக்கு மாலையில் வந்து சேர்ந்தோம். ஒரு ஹோட்டெலில் சாப்பிட்டுவிட்டு நிரஞ்சனைத் தேடிப் புறப்பட்டோம். ஆனால் நாங்கள் அதிகம் சிரமப்படு முன்பே, ஒருவழிப்போக்கன் மூலமாய் ஒரு தோப்பில் ஒரு வாலிபன் கொலை செய்யப்பட்டுக் கிடப்பதாகவும், அவ் வாலிபன் நல்ல அழகனாய்க் காணப்படுவதாகவும், அறிந்தோம். நாங்கள் சந்தேகப்பட்டுக் குறித்த இடத்திற்குச் சென்று பார்க்க, அங்கே கொல்லப்பட்டுக் கிடந்தவன் நிரஞ்சனாகை இருக்கவே, அவ்வாலிபனது ஊரும் பந்துக்களும் இருக்குமிடம் எங்களுக்குத் தெரியுமென்றும், அவர்களிடம் பிணத்தை ஒப்புவித்து விடுவதாகவும் அங்கே

கூடி யிருந்த ஜனங்களிடம் சொல்லிவிட்டு, உடனே லிலாராமுக்குத் தந்தி கொடுத்து விட்டு, பிணத்துடன் இரவே இங்கு வருவதற்குப் புறப்பட்டு விட்டோம்.

லிலாராம் :—ஆம், எனக்குத் தந்தி கிடைத்தது.

வக்கீல் :—ராயல்பட்டியில் அவ்வாலிபன் கொலை செய்யப்பட்டதற்கு அங்கே சாக்ஷிகள் இருக்கக் கூடு மல்லவா ?

பிரகாசம் :—ஆம், இருக்கும். ஆனால், யார் யார் பார்த்தவர்கள் என்பது எங்களுக்குத் தெரியாது. சாதாரணமாகவே சாக்ஷி சொல்லப் பயப்படும் சுபாவம் வாய்ந்த பாமர ஜனங்கள் தங்களுக்குத் தெரியுமென்று சாக்ஷிகளாக வருவார்களென்பதை நாம் எதிர்பார்க்க முடியுமா ?

வக்கீல் :—இன்னும் ஒரு சந்தேகம். நிரஞ்சன் என்ற வாலிபனைக் கொலை செய்த பேர்வழிக்கும், அக்கொலையால் யாதாயினும் லாபம் இருந்திருக்கலா மல்லவா? ஆகையால் நாம் முனைந்து நிரஞ்சனைக் கொலை செய்தவனையோ, கொலைசெய்ய முயன்றவனையோ கண்டுபிடிப்பது நமது கடமை யல்லவா ?

அச்சமயம் பகவன்தாஸ் முகமும் பிரகாசத்தின் முகமும் ஒரு க்ஷணம் திடுக்கிட, ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டனர்.

பிரகாசம் :—நமது கடமை சரிதான். ஆனால் கொலையுண்டவன் பேரிலும் ஒரு கொலைக் குற்றம் இருக்கிறது. இதைக் கிளறினால் அதையும் கிளறவேண்டிவரும். ஜமீன்-குடும்ப ரகஸ்யங்கள் வெளிப்பட்டுக் குடும்பத்திற்கு ஒரு களங்கம் உண்டாகுமே! மேலும் நிரஞ்சனைக் கொன்றவர்கள் அவனது கூட்டாளிகளான அயோக்கியர்கள் தான் என்று தெரியவருகிறது. அவனே கொலையுண்டபின் அவனது சகாக்கள் யாரெனக் கண்டுபிடிப்பது அவ்வளவு சுலபமாக இராதல்லவா ?

வக்கில் சிரித்தார். தம் கைக்கடிகாரத்தைப் பார்த்தபின், "நீங்கள் கூறும் பாயிண்டுகளெல்லாம் ஒப்புக்கொள்ளக் கூடியதாக இருந்தாலும் எனக்கு மேலும் ஒரு சந்தேகம் உண்டாகிறது" என்றார்.

பிரகாசம் :—என்ன ?

வக்கீல் :—அறையில் வைத்துப் பூட்டிய பிணம் காணப்படாமலிருப்பது விநோதந்தான். ஒருவேளை அப்

பிணம் தெய்வாதீனமாய் உயிர்பெற்று எழுந்து சென்றிருந்தால்? — என்ற சந்தேகம்தான்! அப்படியிருந்தால் இப்பொழுது ஜமீன் விஷயமாய்ச் சீர்திருத்தம் செய்ய வேண்டிய சந்தர்ப்பமாயிற்றே. எப்படி முடிவு செய்வது?— என்ற பிரச்னைதான்.

பகவன்தாஸ்:—பிணமாவது, உயிர் பெற்றுச் செல்லுவதாவது? அது வீண் எண்ணமே, தவிர நடக்கக் கூடியதல்ல. ஆகையால் இனி நிரஞ்சனைப் பற்றியோ, ஜகன்மோகனதாஸைப் பற்றியோ பிரச்னை கிளம்ப இடமில்லை. இருவரும் பூலோகத்தில் இல்லை என்பது நிச்சயமாகிவிட்டது! ஜகன்மோகனதாஸுக்கும் சந்ததி கிடையாது. ஆகவே நடக்க வேண்டிய விஷயங்கள் கிரமப்படி நடக்க வேண்டியதுதான்.

வக்கீல்:—ஜகன்மோகனதாஸை அடக்கம் செய்தாய் விட்டது என்று கூறினீர்கள். அதனால் அவரைப் பற்றிப் பிரச்னை இல்லைதான். ஆனால் இந்தப் பேர்வழி நிரஞ்சனைப் பற்றி அப்படியில்லையே? சில இடங்களில் பிணத்தை மயானத்திற்கு எடுத்துச் சென்றபின் கூடப் பிழைத்திருப்பதை நாம் கேள்விப் பட்டிருக்கிறோமே! அதுபோல் ஒருவேளை அறையில் பூட்டப்பட்ட பிணமும் பிழைத்து எழுந்து போயிருந்தால்?...............

லீலாராம்:—எனக்கும் அப்படித்தான் இப்போது சந்தேகம் தோன்றுகிறது. ஏனெனில் அன்று விடியற்காலம் அவ்வாலிபனது முகம் பிணத்தின் முகத்தைப் போல் தோன்றாமல் ஜீவகளையுடன் இருந்ததாகத்தான் என் எண்ணம். அப்படியிருந்தால், உணர்வு பெற்றதும் பக்கத்துக் கதவின் தாளைத் திறந்து கொண்டு சென்றிருக்கக் கூடுமே?

பகவன்தாஸும் பிரகாசமும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனரே தவிர ஒன்றும் பேசவில்லை.

அப்பொழுதுதான் சுப்பிரதாஸ் வாய் திறந்தார்: "அந்தப் பையன் அப்படி உயிர் பெற்றுச் சென்றிருந்து இப்பொழுது இங்கு வந்து 'நான் உயிருடன் இருக்கிறேன்' என்று சாக்ஷி கூறிவிட்டால், உங்களுக்கெல்லாம் இவ்வளவு குழப்பம் இராதல்லவா?"

லீலாராம்:—ஓஹோ! ஆனால் கொலைஞர்களால் குத்திக் கொல்லப்பட்ட அவன் பிழைத்துச் சென்றிருந்தாலும் இவ்விடம் வந்து சாட்சி கூறத்தக்க நிலையில் இருக்கிறானோ, இல்லையோ?

பிரகாசம் :—(சற்று வெறுப்புக் குரலில்) இதென்ன ? நாம் எல்லாம் நடக்க முடியாத ஒரு விஷயத்தைப் பற்றிப் புரளி செய்து கொண்டிருக்கிறோம் !

பகவன்தாஸ் :—பேச்சுக்காகப் பேசுவது சரிதான். ஆனால் அவன் பிழைத்திருக்க முடியாது. தப்பி உயிர் பெற்றிருந்தாலும், அவன் மேலுள்ள கொலைக் குற்றத்தினால் தலை மறைய நினைப்பானே தவிர, தன்னை இவ்வளவு சீக்கிரத்தில் காட்டிக் கொள்ள வரமாட்டான் !

மேஜைமேலுள்ள 'அழைப்பு - மணி'யைக் கையிலெடுத்து ஏதோ விஷமம் செய்து கொண்டிருந்தார் லீலாராம். அப்படிச் செய்து கொண்டிருந்த சமயத்தில் அந்த மணி இருமுறை மெல்ல அடித்தது. ஆகவே அவர் வேணுமென்று மணியடித்ததாய் ஒருவரும் நினைக்க முடியாது.

பகவன்தாஸும் பிரகாசமும் கூட அந்த மணி அகஸ்மாத்தாகச் சப்தித்ததாகவே எண்ணினார்கள்.

## 28. பொறியில் அகப்பட்ட எலிகள்

"அவன் மேலுள்ள கொலைக் குற்றத்திற்காகத் தலை மறைய நினைப்பானே தவிர, இவ்வளவு சீக்கிரத்தில் தன்னைக் காட்டிக்கொள்ள வரமாட்டான் !" என்று பகவன்தாஸ் சொல்லி முடித்த அதே சமயம்தான் இருமுறை மணியடித்து ஓய்ந்தது.

மறுக்ஷணமே அந்த ஹாலின் வடபுறம் தொங்கவிட்டிருந்த திரைச் சீலையைத் தள்ளிக்கொண்டு, "இல்லை, இல்லை. அவன் அப்படித் தலைமறைய நினைத்தாலும் நாம் ஏமாந்து சும்மா இருப்பது முடியாது, இல்லையா ?" என்று சொல்லிக்கொண்டு ஸ்ரீவத்ஸா ஹாலுக்குள் வந்து சாவதானமாய் ஒரு ஸோபாவில் அமர்ந்து, பகவன்தாஸையும் பிரகாசத்தையும் பார்த்து, "குட்மார்னிங், குட்மார்னிங்" என்று காலை வந்தனமளித்தார்.

ஸ்ரீவத்ஸாவைக் கண்ட பகவன்தாஸுக்கும் பிரகாசத்துக்கும் விஷந் தீண்டியது போன்ற வெறுப்பும் எரிச்சலும் உண்டாயின. 'இந்தப் பாவி எப்படியோ இங்கும் வந்து விட்டானே !' என்று ஆத்திரத்துடன் ஸ்ரீவத்ஸாவையே அவர்கள் பார்த்துக்கொண்டிருந்தனர். எனினும்

அவர்களுடைய கைகள் தாமாகவே ஸ்ரீவத்ஸாவுக்குப் பிரதி வந்தனமளித்தன.

ஒரு நிமிஷகாலம் அவ்விடம் மௌனம் குடிகொண்டிருந்தது. அந்த இடம் ஏதோ ஆச்சரியத்தில் மூழ்கியது போல் காணப்பட்டது.

கடைசியில் ஸ்ரீவத்ஸாதான் அந்த மௌன நிலையைக் கலைத்தார்.

ஸ்ரீவத்ஸா:—மிஸ்டர் பகவன்தாஸ்! தங்களிடம் நான் இப்படி எதிர்பாராத வேளையில் வந்து முளைத்ததற்காக ரொம்பவும் என்னை மனத்தில் வெறுப்பீர்கள்! இருந்தாலும், என் கடமை இவ்விடம் வரச்செய்து விட்டது!

பகவன்தாஸ் பதில் ஏதோ சொல்ல எண்ணினர், ஆனல் சொல்லவில்லை.

பிரகாசம்:—நீங்கள் அன்று இரவு உடம்பு அசௌகரியமாக இருக்கிறதென்று சொன்னதும் நாங்கள் உங்களைப் படுக்கையில் படுக்கவைத்தோமல்லவா? பிறகு நீங்கள் அயர்ந்து நித்திரைபோய் விட்டீர்கள். எங்களுக்கு ஓர் அவசர காரியமாய் அவ்விடத்தை விட்டுப் புறப்பட வேண்டியிருந்தது. உங்கள் நித்திரையைக் கலைக்கவும் மனமில்லை. ஆகவே நீங்கள் விழித்துக்கொள்ளும் வரையில் அவ்விடமே இருக்கும்படி ஒருவனைக் காவலாக ஏற்படுத்தி விட்டு நாங்கள் புறப்பட்டு விட்டோம். பிறகு நீங்கள் எப்போது விழித்துக் கொண்டீர்கள்?

ஸ்ரீவத்ஸா:—நீங்களிருவரும் மிக்க சாமர்த்தியம் வாய்ந்தவர்கள்தான்! இருந்தாலும் நீங்கள் நினைத்துக்கொண்டிருக்கிறபடி, மயக்க மருந்து சேர்த்து எனக்குக் குடிக்கக் கொடுத்த பாலை நான் துளிகூடப் பருகவில்லை. நீங்கள் கவனத்தைத் திருப்ப உபயோகித்த அதே மலையைப் பார்த்தபடியே பாலை அங்கிருந்த சாளரத்திற்கப்பால் கொட்டி விட்டேன். ஆதலால் நான் நீங்கள் நம்பியிருந்தபடி இரவு முழுவதும் மயக்கத்தில் மூழ்கியிருக்கவில்லை. நீங்கள் அந்த பங்களாவை விட்டுச்செல்லும் முன்பே நான் உங்கள் சிறையினின்றும் வெளியேறி விட்டேன். அத்துடன், அமிர்தாவும் நிரஞ்சனும் எக்காரணத்தினலோ பயந்து சிறையிலிருப்பது போல் கட்டுப்பட்டு நடந்து கொள்ளுகிருர்கள் என்பதையும் தெரிந்து கொண்டதுடன், அவர்களை அழைத்துக்கொண்டு நீங்கள் காரில் புறப்பட்டுப் போவதையும், பின் காரில் உங்கள் சாமான்

களுடன் உங்கள் கையாளான ட்ரைவரைப் பின்னால் தொடர்ந்து ஓட்டி வரும்படி கட்டளையிட்டதையும் நான் அறிந்துகொண்டேன்.

ஸ்ரீவத்ஸா கூறியவற்றைக் கேட்ட பகவன்தாஸ் தன் தைரியத்தில் முக்கால்வாசி இழந்துவிட்டான். "இத்தனை விஷயங்களை அறிந்த இவன் இன்னும் எவ்வளவு தூரம் அறிந்திருக்கிறானோ? நாம் முட்டாள்தனமாய் இவன் பூட்டிய அறையிலேயே இருந்ததாக நினைத்து மறுபடியும் பாராமல் வந்தது எவ்வளவு பிசகாய்ப் போயிற்று! அந்த ஒரு பிசகே நமக்குப் பேராபத்தை உண்டாக்கி விடும் போலிருக்கிறதே! இவன் இன்னும் எவ்வளவு தூரம் ........சொல்லட்டும், பிறகு பார்த்துக் கொள்வோம்" என்று ஸ்ரீவத்ஸாவைப் பார்த்தபடியே பேசாமலிருந்தான்.

ஸ்ரீவத்ஸா பேசப்பேசத் தங்கள் ஏமாற்றம் வெளிப்படவும் பிரகாசதிற்கு மனம் பற்றி எரிந்தது. ஆனாலும் செய்வதென்ன? பல்லைக் கடித்துக்கொண்டு பேசாமலிருந்தான்.

ஸ்ரீவத்ஸா :—நீங்கள் நினைத்துக் கொண்டிருக்கிறபடி உங்கள் பின் காரை ஓட்டி வந்தவன் உங்கள் ட்ரைவரல்ல. என் ட்ரைவர்தான் அந்தக் காரை ஓட்டிவர, நான் பின்பக்கம் உட்கார்ந்துவந்தேன். உங்கள் ட்ரைவர் அந்த பங்களாவில் பத்திரமாய்க் கெட்டுப்போகாதபடி யிருக்கிறான்! நீங்களோ உங்கள் ட்ரைவர் சந்திரபுரி வந்ததும் காணாமல் போயிருப்பதாய்த் தேடிக்கொண்டிருக்கிறீர்கள்!

பகவன்தாஸ் :—ஓஹோ, அப்படியானால் நேற்றிரவு தோட்டத்தில் வந்து என்னைச் சந்திக்கச் சொல்லி ஏமாற்றியதும் நீதான்! இப்போது எனக்கு விஷயங்களின் போக்கு, புலப்படுகிறது.

ஸ்ரீவத்ஸா :—ஆம், நான்தான்.

பிரகாசம் :—(ஆத்திரத்துடன்) ஹும், உன் ஆயுசும் கெட்டி, அதிர்ஷ்டமும் உன்னை அண்டி யிருக்கிறது!

பகவன்தாஸ் :—நீ இவ்வளவு கஷ்டப்பட்டதும் அந்த ஜகன்மோகனதாஸைக் கொன்ற கொலையாளியைப் பிடிக்கத்தானே?

ஸ்ரீவத்ஸா :—ஆம், ஜகன்மோகனதாஸைக் கொன்ற கொலையாளியைப் பிடிக்கவும், மற்றொரு கொலை நடவாம

லிருக்கவும்தான் இவ்வளவு பிரயாசை எடுத்துக்கொண்டேன். ஆனால் கடைசியில் கடவுளருளால் எனது பிரயாசை பயனுள்ளதாகவே யிருக்குமென நம்புகிறேன்.

பின்னர் ஸ்ரீவத்ஸா, விலாசாம் எதிரில் மேஜைமேலிருந்த அழைப்புமணியை எடுத்து ஒரு முறை அடித்தார்.

பகவன்தாஸும் பிரகாசமும் நெற்றியைச் சுளுக்கியபடி ஸ்ரீவத்ஸாவைப் பார்த்தனர்.

அப்பொழுது மாளிகையின் பிரதான வாசல்புறத்தே விட்டிருந்த திரையைச் சிறிது விலக்கிக்கொண்டு இராகுலன் வந்து நின்றான். அவனைக் கண்டதும் பகவன்தாஸின் முகமும் பிரகாசத்தின் முகமும் போன போக்கைப் பார்க்கவேணுமே!

ஸ்ரீவத்ஸா:—நீங்கள் இருவரும் 'இவனை யார்?' என்று அறிவீர்களா?

பிரகாசம்:—யாரையோ கொண்டுவந்து நிறுத்தி 'நீங்கள் அறிவீர்களா?' என்று கேட்டால் அதென்ன அர்த்தம்?

ஸ்ரீவத்ஸா:—அதன் அர்த்தம் உங்களுக்கு ஏற்கெனவே தெரிந்ததுதான். நீங்கள் அவனைப்பற்றிச் சொல்லாவிட்டால், வேண்டாம். அவனையே கேட்டுவிட்டால் போகிறது. (இராகுலனைப் பார்த்து) வீரா! இந்த இரண்டு பெரிய மனிதர்களையும் உனக்குத் தெரியுமா? எப்பொழுதாவது பார்த்திருக்கிறாயா?

இராகுலன்:—ஆம், தெரியுங்க. (பிரகாசத்தைச் சுட்டி) இவங்களை நாலஞ்சு முறை கண்டிருக்கிறேன். (பகவன்தாஸைச் சுட்டி) இவங்களை ஒருமுறைதான் கண்டிருக்கேன்.

ஸ்ரீவத்ஸா:—நீ அவர்களிடம் ஏதாவது வேலை செய்ததுண்டா?

இராகுலன்:—(பிரகாசத்தைச் சுட்டி) நாலு நாளைக்கு முன்னால் இவரிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது. 'மறு தினம் இரவு ஒரு மணிக்குமேல் பனங்காட்டின் நடுவில் சாலையை ஒட்டி நீ பத்து ஆளுடன் இருக்கவேணும். அச்சமயம் அங்கே காரில் வரும் இருவர் ஒரு ஆளை உன்னிடம் ஒப்படைப்பர். நீ அவனை முடித்துப் பின்னால் வரும் காரில் பிணத்தை

வைத்துவிடு; உனக்கு முன்பணமாக இத்துடன் ரூபாய் 250 அனுப்பி யிருக்கிறேன். காரியத்தை முடித்தவுடன் நீ இன்னும் ரூபாய் 300 பெறுவது நிச்சயம்' என்று எழுதி யிருந்தது. நாங்கள் அவ் விதமே காத்திருந்தோம். குறித்த நேரத்திற்கப்பால் சாலையில் மோட்டார் வந்து நின்றது. அந்தக் காரில் (பகவன்தாஸையும் பிரகாசத்தையும் சுட்டி) இந்த இருவரும் இருந்தனர். அத்துடன் எங்களிடம் ஒப்புவித்த மனிதனைத் தவிர மற்றொருவர்கூட இருந்தார். ஆனால் அவரது முகம் எங்களுக்குத் தெரியவில்லை. இவர்கள் இருவரும் என்னிடம் ஒப்புவித்த மனிதனை நாங்கள் ஒரு விதமாய் முடித்து, இவர்கள் உத்தரவுப்படியே பின்னால் நின்றுகொண்டிருந்த ஒரு காரில் கொண்டுபோய்ப் போட்டுவிட்டு, பாக்கி ரூபாய் 300 உடன் இனமாய் அதிக ரூபாய் கொடுத்ததையும் பெற்றுக்கொண்டேன்.

**பிரகாசம்:**—சுத்தப் பொய்! நாங்கள் இவனிடம் எவனையும் ஒப்புவிக்கவில்லை; இவனையே எங்களுக்குத் தெரியாதே!

ஸ்ரீவத்ஸா:—ஏனப்பா வீரா! உன்னிடம் ஒப்படைத்த மனிதனை 'முடித்து' என்று சொன்னாயே, அப்படி யானால் அவனைக் கொன்றுவிட்டாயா?

இராகுலன் நடந்ததைச் சொன்னான்.

ஸ்ரீவத்ஸா:—உன்னால் கொல்லப்பட இருந்த அந்த வாலிபன் யாரென்று உனக்குத் தெரியுமா?

இராகுலன்:—பார்த்தால் சொல்லமுடியும்.

உடனே ஸ்ரீவத்ஸா இருமுறை மணி யடித்தார். மறு க்ஷணம் வடபுறம் திரையை விலக்கிக்கொண்டு நிரஞ்சன் ஹாலுக்குள்வர, ஸ்ரீவத்ஸா தன் ஸோபாவில் ஒதுங்கி உட்கார்ந்தார். நிரஞ்சன் அவரது ஸோபாவிலேயே மறு புறம் உட்கார்ந்துகொண்டான்.

பகவன்தாஸின் முகமும் பிரகாசத்தின் முகமும் பிரேதம்போல் வெளுத்துவிட்டன. பகவன்தாஸ் ஏதோ சொல்ல முயன்றார்; ஆனால் வார்த்தை வெளிப்படவில்லை.

லிலாராம், "நம் சந்தேகமெல்லாம் பலித்துவிட்டது போலிருக்கே, அன்று பிரேதமாய்க் கொண்டுவரப் பட்ட வாலிபர்தானே இவர்?" என்று பகவன்தாஸைப் பார்த்துச் சொல்ல, பகவன்தாஸ் "ஆம்" என்பது போல் தலையை மட்டும் ஆட்டினார்.

இராகுலன்:—(நிரஞ்சனைச் சுட்டிக்காட்டி) இவரைத் தான் கொன்று வரும்படி என்னிடம் ஒப்படைத்தார்கள்.

ஸ்ரீவத்ஸா மறுபடியும் மணியை மும்முறை அடிக்கவும் அதே வடபுறம் திரையை விலக்கிக்கொண்டு, வெளுத்து மெலிந்த உடலுடன் அமிர்தா ஹாலுக்குள் வந்து, சுப்ரதாஸின் மனைவியின் பக்கத்தில் இருந்த ஒரு சுழல் நாற்காலியில் அமர்ந்து, யாவரையும் ஒருமுறை பார்த்துவிட்டுத் தலை குனிந்துகொண்டாள். அவள் எவ்வளவோ சாந்த ஸ்வரூபமுள்ளவளாக இருந்துங்கூட, அவளது முகம் பகவன்தாஸையும் பிரகாசத்தையும் கண்ட சமயம் அருவருப்படைந்தது.

'வெந்த புண்ணில் வேல் பாய்வதுபோ'லிருந்தது, அமிர்தாவைக் கண்டதும், பகவன்தாஸுக்கும் பிரகாசத்துக்கும். பகவன்தாஸ் பிரதான வாசல் பக்கம் நோக்கினான். பிரகாசம் பலமாகத் தான் ஏதோ ஒரு தீர்மானமான ஆத்திர எண்ணத்துடன் தன் நிஜார் ஜோபிக்குள் கை போடுவதைக் கண்ட ஸ்ரீவத்ஸா அந்த க்ஷணமே அவனது எண்ணத்தை ஊகித்துவிட்டார்.

ஆகவே ஸ்ரீவத்ஸா சட்டெனப் பிரகாசத்தினருகில் சென்று, "எங்கே, அந்தத் துப்பாக்கியைக் கொடுத்துவிடுங்கள்" என்றார்.

பிரகாசம் முறைத்துப் பார்த்தார். அவர் அப்படிப் பார்க்கையிலேயே, ஸ்ரீவத்ஸா அலக்ஷ்யமாய்ப் பிரகாசத்தின் கையைத் தள்ளிவிட்டு அவரது நிஜார் ஜோபியிலிருந்து துப்பாக்கியை எடுத்துக்கொண்டுவிட்டார்.

பிறகு அவ்விருவரையும் நோக்கி, "நீங்கள் இருவரும் வெளிப்பக்கம் காவலாக நிற்பவர்கள் யாரென்று அறிவீர்களா? அறிந்தால், உங்கள் எண்ணம் பிரயோஜனப்படாது என்பதையும் அறிந்துகொள்வீர்கள். மிஸ்டர் பகவன்தாஸ்! உங்களிடமிருக்கும் துப்பாக்கியையும் கொடுத்துவிடுங்கள்" என்றார்.

அதே சமயம், இராகுலன் திரையை விலக்கினான். வாசல்புறம் போலிஸார் இருப்பதைக் கண்டதும் பகவன்தாஸ் தன் நிஜார் ஜோபியிலிருந்து ஒரு துப்பாக்கியை எடுத்து ஸ்ரீவத்ஸாவிடம் கொடுத்தார்.

ஸ்ரீவத்ஸா இதையும் பெற்றுக்கொண்டு, "தயவு செய்து, சத்தமின்றிச் சுடும் பிஸ்டல் ஒன்று உங்களிடம்

இருக்கிறதே, அதையும் என்னிடம் கொடுத்துவிட வேணும்" என்ருர். பகவன்தாஸ் திகைத்துப் போய் ஸ்ரீவத்ஸாவையே பார்த்தான்.

ஸ்ரீவத்ஸா :—ஆம், அது உங்களிடம் இருப்பது எனக்குத் தெரியும்! கொடுத்துவிடுங்கள்.

பகவன்தாஸ் பேசாமல் மற்றொரு ஜோபியிலிருந்து ஒரு சிறிய பிஸ்டலை எடுத்து நீட்ட, ஸ்ரீவத்ஸா அதைப் பெற்றதும், எல்லாவற்றையும் இராகுலனிடம் நீட்டினர். அவைகளை அவன் பத்திரமாய் வைத்துக்கொண்டான்.

பிறகு ஸ்ரீவத்ஸா பகவன்தாஸையும் பிரகாசத்தையும் பார்த்து, "உங்கள் இருவரையும் பிரபு ஜகன் மோகனதாஸைக் கொன்ற குற்றத்திற்காக அரெஸ்டு செய்ய வாரண்டு இருக்கிறது என்னிடத்தில்!" என்ருர்.

பிரகாசம் :—பொய், பொய், முழுப்பொய், அக் கொலையைச் செய்தவன் வேருெருவன்.

பகவன்தாஸ்:—ஆம், ஆம், அக்கொலையாளி வேருெருவன்தான்!

அவ்விருவரும் அவ்விதம் கத்தியவுடன் நிரஞ்சன் இருக்கையிலிருந்து மெல்ல எழுந்து நின்று, "மிஸ்டர் ஸ்ரீவத்ஸா! ஜகன் மோகன தாஸின் கொலைக் குற்றம் அவர்களைச் சாராது. அக் குற்றம்......என்......நா......" என்று தன் வார்த்தையை முடிக்கு முன், அமிர்தா வெறி பிடித்தவள் போல் இருக்கையிலிருந்து எழுந்து ஓடி வந்து, அத்தனை பேர்கள் இருப்பதையும் நினையாமல், "ஓ நிரஞ்சன்! நிரஞ்சன்!" என்று கத்தியபடி நிரஞ்சனது வாயைப் பொத்தி, மேலும் பேசவிடாமல் உட்காரச் செய்து அவனை ஒரு பார்வை பார்த்தாள். அடாடா! அந்தப் பார்வையில்தான் எவ்வளவு கெஞ்சல், என்ன பரிதாபம், எவ்வளவு வேண்டுகோள்!

நிரஞ்சன் சொல்ல முயன்றதைச் சொல்லவொட்டாமல் அமிர்தா தடுத்ததைக் கண்டதும் பகவன்தாஸ் அசாத்திய கோபம் கொண்டு, "சீ, நீலி! போ அப்புறம், அவன் குற்றவாளியை வெளியிடுகையில் தடுப்பதற்கு நீ யார்? போ உன்னிடத்திற்கு" என்று கடுமையாகக் கூறி, அமிர்தாவை இழுத்து அப்புறம் தள்ளினன். ஸ்ரீவத்ஸா நடுவில் பாய்ந்து பகவன் தாஸின் கையைப் பிடித்துத் தள்ளி, "நீர் போம் உம் இடத்திற்கு. அவளைத் தொட நீர் யார்? குற்றவாளி யார் என்பது எனக்குத்

தெரியாவிட்டால் அல்லவா அவன் சொல்ல வேண்டும்?" என்று சற்று அதிகாரக் குரலில் கூறினர்.

பிரகாசம்:—குற்றவாளி தன் வாயினலேயே ஒப்புக் கொள்ளுகையில் மற்றவர் குற்றவாளியாவது அதிசயம் தான்!

நிரஞ்சன்:—மிஸ்டர்! நான் குற்றவாளி யல்லவென்று சொல்லுகிறீர்கள்?

ஸ்ரீவத்ஸா:—ஆம், ஆம், நீ குற்ற மற்றவன். அது இவர்களுக்கும் தெரியும்.

பகவன் தாஸும் பிரகாசமும் தொப்பென்று தங்கள் இருக்கையில் உட்கார்ந்து கொண்டனர்.

ஸ்ரீவத்ஸா அவ்வளவு அழுத்தமாய் 'நிரஞ்சன் குற்ற மற்றவன்' என்று சொல்லியுங்கூட, நிரஞ்சன் அதை நம்பாதவனாய், வெறுப்புச் சிரிப்புடன் தலையை அசைத்துக் கொண்டான்.

ஸ்ரீவத்ஸா நிரஞ்சனையும் அமிர்தாவையும் நோக்கி, "நீங்கள் இருவரும் சற்று அமைதியாக உட்கார்ந்திருங்கள். விஷயங்களைத் தெளிவு பெறத் தெரிந்து கொள்ளலாம். ஆம், நீங்கள் இன்னும் தெரிந்து கொள்ளாமலிருக்கும் சில விஷயங்களைக் கூடத் தெரிந்து கொள்ளலாம்" என்றார்.

பகவன்தாஸுக்கும் பிரகாசத்திற்கும் ஆத்திரம் பொங்கினலும் வகையின்றிப் பேசாது உட்கார்ந்திருந்தனர்.

## 29. குற்றமற்றவன்

ஸ்ரீவத்ஸா நிரஞ்சனைப் பார்த்து, "மிஸ்டர் நிரஞ்சன்! ஜகன்மோகனதாஸ் கடைசியாக விருந்து வைத்தபோது நடந்த விஷயங்களை உள்ளபடி கூற முடியுமா?" என்று கேட்டார். தேக நிலை பலவீனப்பட்டிருந்தபடியால் நிரஞ்சன் நிதானமாயும் சற்று மெதுவாகவும் சொல்லிக்கொண்டு வந்தான்.

"அன்றிரவு விருந்து முடிந்த பின் யாவரும் மாளிகையின் முன்புறம் காம்பவுண்டுப் பாதையில் போட்டிருந்த ஆசனங்களில் அமர்ந்து, அவரவர்களுக்குத் தோன்றியபடி விளையாடியோ, பேசியோ, படித்தோ,

சந்தோஷமாய்ப் பொழுது போக்கிக் கொண்டிருந்தனர். அச்சமயம் நான் அவர்கள் சிட்டு விளையாடுவதையும் பேசுவதையும் கவனித்துக்கொண்டே வடபுறம் மாதுளை மரத்தடி வரையில் உலாவிக்கொண்டிருந்தேன். வடபுறம் பாதையில் ஸ்திரிகள் சிரித்துப் பேசிக்கொண்டிருந்ததையும் கண்டேன். ஆனால் நான் அதே இடத்தில் சற்று நேரம் நின்று சிகரெட் பற்ற வைத்துக் கொண்டேன். ஆனால் நான் அதே இடத்தில் சற்று நேரம் நின்றுகொண்டிருந்த படியால் ஸ்திரிகள் தங்களைக் கவனிப்பதாய் விகற்பமாக எண்ணிவிடப் போகிறார்களே என்றெண்ணி, அவர்கள் சிட்டாடிக்கொண்டிருந்த இடத்தில் காலியாக இருந்த ஒரு நாற்காலியில் உட்கார்ந்தேன். அதே சமயம் நான் தற்செயலாய் மாடி வராண்டாவைப் பார்க்க வடபுறம் வராண்டாவிலிருந்து ஜகன்மோகனதாஸ் சைகை செய்து என்னைக் கூப்பிட்டார். நான் சுமார் அரை நிமிஷம் பொறுத்து முன்புறக் காம்பவுண்டுப் பாதையாகவே தென்புறம் வரையில் வந்து, தென்புற வழியாக் ஹாலுக்குச் செல்லும் படிகளைக் கடந்து ஹாலுக்குள் இரண்டு மூன்றடி சென்றேன். அப்பொழுது மாடியிலிருந்து தென்புறப் படிக்கட்டில் இரண்டொருபடி இறங்கியிருந்த ஜகன்மோகனதாஸைக் கண்டேன். மறுக்ஷணம் நான் மிகவும் திடுக்கிட்டு விட்டேன். ஏனெனில் அவர், கையைச் சற்றுத் தாழப் பிடித்தபடியே துப்பாக்கியை என் மார்புக்கு நேராகக் குறி பார்த்திருந்தார். என் திகைப்பு நீங்குமுன்பே அவர் சுட்டுவிட்டார். நான் பயத்தால் கண்களை மூடிச் சற்றுக் குனிந்தேன். எனினும், என் கையும் நிஜாருக்குள்ளிருந்த பிஸ்டலை எடுத்து விட்டதால், என்னைக் காப்பாற்றிக்கொள்ள நினைத்து என் கை அவரை நோக்கிச் சுட்டு விட்டது! ஆனால் நான் குறி பார்த்துச் சுட்டேனென்று சொல்ல முடியாது. நான் குதிரையை அழுத்திய அதே வினாடியில்தான் ஜகன்மோகன்தாஸ் சுட்ட குண்டும் என் தலையில் படீரெனத் தாக்கிற்று! — என்று நினைக்கிறேன். ஏனெனில் என் மண்டையில் பெரிய அதிர்ச்சி ஏற்பட்டதுபோல் ஒரு நிலை ஏற்படவும் என் பிஸ்டலை ஜோபிக்குள் போட்டுக் கொண்டேனென்று எண்ணுகிறேன். ஆம், அதுகூடச் சரியாக நினைவில்லை. நான் தலையைப் பிடித்துக் கொண்டு தடதடவென்று தென்புறப் படிகளைக் கடந்து காம்பவுண்டின் கிழக்குப் புறமாய்த் தள்ளாடிச் சென்ற சமயம், நான் வடபுறம் கோடிக்கு வந்து விட்டதை

அறிந்தேன். அதன்மேல் என்னால் நடக்க முடியவில்லை. வடபுறத்தில் சற்றுத் தூரத்தில் பேசிக்கொண்டிருக்கும் ஸ்திரிகள் என்னைக் கண்டுவிடப் போகிறார்களே—என்ற ஒரு பயமும் என் மனத்தில் தோன்றிற்றோ என்னவோ, நான் பல்லைக் கடித்துக்கொண்டு அவ்விடம் ஓர் உயர்ந்த குரோடன்ஸ் வைத்துப் பயிராக்கி யிருந்த ஒரு பெரிய தொட்டியின் பின்னால் அதில் சாய்ந்தபடி உட்கார்ந்து விட்டேன். சற்று நேரத்தில் ஸ்திரிகளெல்லாம் ஏதோ பேசியபடி எழுந்து சென்று விட்டதாய் அரை குறையாக அறிந்தேன். அதன்மேல் அவ்விடத்திலிருந்து மெள்ள எழுந்து வடபுறத்தைக் கடந்து வந்தேன். அதுதான் எனக்குக் கனவுபோல் நினைவு வருகிறது. மற்றது ஒன்றும் எவ்வளவு நினைத்துப் பார்த்தும் நினைவு வரவில்லை.

ஸ்ரீவத்ஸா :—ஆம், நீ அன்று நடந்த விஷயங்களை அப்படியே நடந்தது நடந்தபடி உரைத்து விட்டாய். ஆனால் ஜகன்மோகனதாஸ் அன்று உன்னை எதற்காகச் சுட முயன்றார் என்பதை எண்ணிப் பார்த்தாயா ?

நிரஞ்சன் :—அவர் என்னை எதற்காகச் சுட முயன்றார் என்பது எனக்கு ஆச்சரியத்தையே விளைவிக்கிறது, இன்னும் விளங்க வில்லை.

ஸ்ரீவத்ஸா :—சரி, பகவன்தாஸ் அவர்களே ! அன்று இரவு நடந்த மற்ற விஷயங்களை, அதாவது தாங்களும் தங்கள் நண்பரும் நடத்திய நாடகத்தை, சொல்ல முடியுமா ?

பிரகாசம் :—(சற்றுக் கடுகடுத்து) அன்றையதினம் நாங்கள் ஒரு நாடகமும் போடவில்லை !

ஸ்ரீவத்ஸா :—ஓஹோ ! நானே அதைச் சொல்லுகிறேன். மிஸ்டர் பகவன்தாஸ் ! யாதாயினும் விடுபட்டிருந்தால் திருத்துங்கள்.

“ஜகன்மோகனதாஸ் நிரஞ்சனைக் கூப்பிட்ட விஷயம் தெரிந்ததோ, இல்லையோ, வேறு என்னகாரணத்தாலோ, நிரஞ்சன் செல்லும் முன்பாகவே பகவன்தாஸும் பிரகாசமும் தென்புறக் காம்பவுண்டுப் பார்தையில் ஹாலுக்கு எதிராக, அதாவது மாடிப் படிக்கு எதிரில், செடிகளின் பின்புறமாய் மறைந்து கொண்டிருந்தார்கள். ஆகவே ஜகன்மோகனதாஸ் நிரஞ்சனைச் சுட்டதையும், நிரஞ்சன் ஜகன்மோகனதாஸைச் சுட்டதையும், நிரஞ்சன் சுட்டது

ஜகன்மோகனதாஸ் மேல் சிறிதுகூடப் படாமல் வியர்த்த மாகிவிட்டதையும் கண்டார்கள். கண்டதும், பகவன்தாஸ் பிரகாசத்தினிடம் உடனே ஜகன்மோகனதாஸைச் சுடும் படி சொல்ல, பிரகாசம் 'நீர்தான் சுடுமே' என்று சொன்னார். பிறகு பகவன்தாஸ் தமக்குக் குறி தவறிவிடும் என்று சொன்னார். ஆகவே பிரகாசம் பகவன்தாஸின் 'சத்தமின்றிச் சுடும் துப்பாக்கி'யை வாங்கி, அச்சமயம் தென்புறப் படியிலிருந்து ஏறி வட்புறப் படி வழியாக இறங்க ஆரம்பித்த ஜகன்மோகனதாஸின் பின்புறம் கழுத்துக்குச் சற்றுக் கிழாகக் குறி பார்த்துச் சுட்டார். பிரபு குண்டு பாய்ந்ததும் துள்ளி, பக்கப் பிடியைப் பற்றியபடி திரும்பி யிருக்கிறார். ஆனால் உடனே நிலை யிழந்து படிகளின் மேலேயே குப்புற விழவும், பிராணன் போய்விட்டது. ஜகன்மோகனதாஸ் கீழே விழுவதைக் கண்டதும் சந்தடி செய்யாமல் பகவன்தாஸும் பிரகா சமும் ஒன்றும் அறியாதவர்கள்போல் முன்புறமாய் வந்து மற்றவர்களுடன் கலந்துவிட்டனர்.

"நீங்களிருவரும் செடி மறைவில் மறைந்திருக்கையில் ஜகன்மோகனதாஸைச் சுடுவதற்கு 'நீ சுடு, நீ சுடு' என்று பரிமாறிக்கொண்ட சமயம், அந்தப் பேச்சு இரண்டாங் கட்டில் தென்புறத்தை ஒட்டியிருந்த அறையில் வேலையாக இருந்த சாந்தியின் காதில் யாரோ மெள்ளப் பேசுவது போலக் கேட்டது. அவள் சாளரத்து மூலமாய்த்தென் புறத்தை ஒரு க்ஷணம் நோக்கிவிட்டு, ஒருவரும் காண வில்லையென்று நினைத்துவிட்டாள். சற்றுப் பொறுத்து அவள் மறுபடியும் அச்சாளரத்து வழியாகத் தற்செய லாய்ப் பார்த்தபொழுது செடி மறைவிலிருந்து செல்லும் பகவன்தாஸையோ, பிரகாசத்தையோ பின்புறம் மட்டும் கண்டிருக்கிறாள். அவள் எப்படிப் பார்த்தா ளென்பதை நீங்களிருவரும் அறிந்து கொண்டீர்கள். அவள் அப்படிக் கண்டிருந்தாலும் நம்மிடம் சந்தேகம் கொள்ள முடியுமா?— என்று எண்ணினீர்கள்.

"அச்சமயம் நான் கொலை நடந்த ஹாலைச் சுற்றிப் பார்க்கையில் மாடிப்படிக்கு எதிரிலுள்ள வடபுறம் அறையின் நிலைக்கு மேல் செய்திருந்த சித்திர வேலைப் பாட்டின் மத்தியில் ஒரு துப்பாக்கிக் குண்டு புதைந் திருப்பது கண்டு டெபுடியைக் கூப்பிட்டுக் காட்டி அதை ஒருவரும் அறியாதபடி எடுத்துக்கொண்டேன். அந்த இடத்தில் குண்டு வந்து பதியவேண்டுமானல் தென்புறம் காம்பவுண்டுப் பாதையிலிருந்தோ, ஹாலின் தென்புற

வாட்டத்திலிருந்தோ, மார்டிச் சர்ளரத்தில் கையை நீட்டியோ சுடவேண்டும். மற்றப்படி எங்கிருந்து சுட்டாலும் குண்டு வந்து பதிந்திருந்த இனுசில் சுடமுடியாது. ஆகவே ஜகன்மோகனதாஸைச் சுட்டவன் முதல் தடவை சுட்ட குண்டு தவறி நிலையில் பதிந்திருக்க வேண்டும். ஆகவே அவன் இரண்டாம் முறை சுட்டே பிரபுவைக் கொன்றிருக்கிருனென்று எண்ணினேன். பிறகு பிரபுவின் கையின் கீழிருந்து எடுக்கப்பட்ட அவரது துப்பாக்கியில், நிலையிலிருந்து எடுக்கப்பட்ட துப்பாக்கிக் குண்டைப் போட்டுப் பார்க்க, அது பிடிக்கவே யில்லை. ஆகவே அன்றிரவே இரண்டு துப்பாக்கிகளின் குண்டுகளின் அளவையும் தெரிந்து கொண்டேன். ஒன்று பிரபுவைப் பார்த்துச் சுட்டது தவறி நிலையில் பதிந்தது, மற்ருென்று பிரபுவைக் கொன்றது. இரண்டும் ஒரே துப்பாக்கி யல்ல. ஆனல் பிரபுவின் கைலிருந்து எடுக்கப்பட்ட துப்பாக்கியும் சுடப்பட்டிருக்கிறது. பிரபு யாரைப் பார்த்துச் சுட்டார்? தம்மைச் சுட வந்தவனைச் சுட்டிருக்கலாம். அப்படியானல் நிரஞ்சனைச் சுட்டிருக்கலாமா? அக்குண்டு வேறிடத்தில் விழுந்து கிடக்கலாம். அப்படியானல் நிரஞ்சன் இரண்டு துப்பாக்கிகளை உபயோகித்தானு?— என்ற பிரச்னை என் மனத்தில் எழுந்தது. அத்துடன், நிரஞ்சன் முகத்தைக் காண, அவன் வேணுமென்று கொலை செய்யக் கூடியவனல்ல வென்று என் மனம் நினைத்தது. அவனது பால் வடியும் முகம் என்னை அவ்விதம் நினைக்கச் செய்தது. 'அவன் கொலையாளியாக இருந்தால் ஒரு தள்ள முடியாத நிர்ப்பந்தத்தால் சுட வேண்டி வந்திருக்கலாமல்லவா?' என்றும் நினைத்தேன். டெபுடி அமிர்தாவிடம் பூர்ண சந்தேகமடைந்திருந்தாலும், எனக்கு அமிர்தாவிடம் ஏதோ ரக்ஸ்யமிருக்கிறது என்று தோன்றியதே ஒழிய, அவள் கொலைக்குச் சம்பந்தப் பட்டவளல்ல என்றே எண்ணினேன். அவ்ளது ரகஸ்யம் நிரஞ்சனிடம் கொண்டிருக்கும் அன்பின் சம்பந்தமான தாக ஏன் இருக்கக் கூடாது? அமிர்தா நிரஞ்சனைக் காப்பாற்றுவதற்காக எத்தகைய தியாகத்தையும் செய்வாள் என்பதையும் ஊகித்துக் கொண்டேன்.

"மறுதினமும் இன்னும் புகுந்து ஆராய்ச்சி செய்யவே, ஜகன்மோகனதாஸ் அவரது மரணத்திற்கு முதல் தினம் தம் ஆஸ்திகளைத் தமது சொந்த மருமக்களுக்கு வைக்காமல் அவர்களது மாளிகையிலேயே சில வருஷமாக இருந்துவரும் உறவினளான 'சுமதி'யம்மாள் என்பவ

ளுக்கு ஆஸ்தியின் பெரும் பாகத்தையும் வைத்து, சொற்பத் தொகையான பத்தாயிரம் ரூபாயையே மருமகள் இருவருக்கும் வைத்திருந்தா ரென்பது தெரியவந்தது. 'கேஸ்' சிக்கலாகி விட்டது. சுமதியம்மாளிடம் கூடச் சந்தேகம் ஏற்பட்டது.

"மறு தினம் மோகன் மாளிகைக்குச் சென்றிருந்த சமயம் தென்புறக் காம்பவுண்டுப் பாதையிலுள்ள குரோடன்ஸ் செடிக் கிளையின் இடுக்கிலிருந்து, ஒரு துப்பாக்கிக் குண்டைக் கண்டெடுத்தேன். அந்தக் குண்டு தான் பிரபுவின் துப்பாக்கியிலிருந்து வெடித்த குண்டு என்பதையும் அறிந்தேன். மறு தினம் காலையில் நிரஞ்சனிடமிருந்து விஷயங்களைக் கேட்டறிந்து விடவேண்டுமென்று நினைத்திருக்கையில், விடியற்காலமே அமிர்தாவும் நிரஞ்சனும் மோகன் மாளிகையில் காணப்படவில்லை என்பதையும், அவ்விஷயத்தைத் தற்செயலாக வந்ததாய்க் கூறிய பிரகாசம் அறிந்து சென்றார் என்பதையும் தெரிந்து கொண்டேன்.

"பிறகு டெபுடியிடம் அமிர்தாவையும் நிரஞ்சனையும் கண்டு பிடிக்கச் செல்வதாய்க் கூறிவிட்டு நான் பகவன் தாஸ் வீட்டுக்குச் சென்று, பகவன்தாஸும் பிரகாசமும் திடீரென்று ஊருக்குப் போனதாய் அறிந்தேன். நான் விஷயங்களை ஒருவாறு ஊகித்துக்கொண்டு அந்த எண்ணங்கள் சரியாக இருந்தாலும் சரி, தப்பாக இருந்தாலும் சரி, உங்களைப் பின் பற்றுவது என்று தீர்மானித்து விட்டேன். ஆகவே நானும் உங்களுடன் ரயிலில் பிரயாணப்பட்டேன். நீங்கள் மதன்பூர் வந்து இறங்கியதும், நானும் போர்வையால் என்னை மூடிக்கொண்டு ஸ்டேஷனை விட்டு வெளியே வந்தேன். உங்களுக்குக் கார் காத்திருந்தது. நானோ ஒரு டாக்ஸியைப் பிடிக்கவேண்டியிருந்தது. அதன் ட்ரைவரையும் எனக்குப் பிடித்தவனாய்ப் பொறுக்க வேண்டிய அவசியமும் ஏற்பட்டது. கரிமிடம் சிறிது நேரம் பேசினேன். எனக்குத் திருப்தி ஏற்பட்டுவிட்டது. பிறகு கரீம் காரில் உங்களைத் தொடருவது என்று தீர்மானித்துவிட்டேன். அமிர்தாவின் காரும் புலப்பட்டது. அதைப் பிடிக்க நீங்கள் முயன்றீர்கள். பின்னால் வந்துகொண்டிருந்த என் காரை உங்கள் காரைத் தாண்டச் செய்து, அமிர்தாவின் காருக்குப் பின்னால் எங்கள் காரை விட்டோம்.

"ஆனால் கடைசியாக ராயல் பட்டிக்கு இப்புறமே எங்கள் மோட்டார் டயர் வெடிக்கவும் நான் பின் தங்கும்படி

நேரிட்டு விட்டது. அந்தச் சந்தர்ப்பம்தான் உங்களுக்கு அனுகூலமாயிற்று" என்று சொல்லி, பிறகு தாம் அவர்களைக் கண்டதையும், நிரஞ்சனது உயிரைக் காப்பாற்றியதையும் கூறினார். கூறி, "நீங்கள் உங்கள் செயல் வெளிவராமல் இருப்பதற்காக அமிர்தாவை மூர்ச்சை அடையச் செய்து, அவளை ரயில் பாதையில் குறுக்கே கிடத்திவிட்டுச் சென்றீர்கள் அல்லவா?" என்று கேட்டார். பிறகு தாம் டாக்டர் மாளிகையில் அமிர்தாவை ஒப்புவித்து விட்டு நிரஞ்சனுடன் ஜமீன் மாளிகையை அடைந்த விவரங்களை எடுத்துரைத்தார். அவ்விஷயங்களை யெல்லாம் கேட்டவர்கள், "இப்படிக்கூட நடக்குமா?" என்பது போல் அவ்வளவு ஆச்சரியப்பட்டு, ஸ்ரீவத்ஸாவின் சாமர்த்தியத்தையும் தைரியத்தையும் மெச்சினர்.

அதுவரையில் நடுவில் தடுக்கக் கூடாதென்று மரியாதையை உத்தேசித்துத் தன் ஆவலையும் படபடப்பையும் அடக்கிக் கொண்டிருந்த நிரஞ்சன், "ஐயா! பிரபு ஜகன்மோகனதாஸ் நான் சுட்ட குண்டால் சாகவில்லை என்பது உண்மையா? நான் குற்றமற்றவனென்பது உண்மைதானா?" என்று மிக்க ஆவலோடு கேட்டான்.

ஸ்ரீவத்ஸா:—நண்பரே! நான் சொல்வது முற்றிலும் உண்மை. உமது பிஸ்டலின் குண்டு சற்றுப் பெரிது. அத்துடன் சத்தத்தோடு சுடக்கூடிய சாதாரணப் பிஸ்டல் அது. பிரபுவின் பிஸ்டலும் பகவன்தாஸின் பிஸ்டலும் சத்தமின்றிச் சுடும் பிஸ்டல்கள். அந்தச் சமயத்தில் ஆபத்தைத் தடுக்கும்பொருட்டு நீங்கள் சற்றும் குறிபாராமல் சுட்டதனால் அந்தக் குண்டு பிரபுவைத் துளிகூடக் காயப்படுத்தவில்லை. மாடிப் படிக்கு நேராகவுள்ள வடபுறத்து அறையில் நிலைக்கு மேலே போய்ப் பதிந்துவிட்டது. அவ்வுண்மையை அறியாத நீங்கள் இது வரையில் மிக்க வேதனையையும் பயத்தையும் அடைந்துவிட்டீர்கள்!

நிரஞ்சன்:—அப்பா! எப்படிப்பட்ட பயம்! நான் எந்த நிமிஷத்தில் கொலையாளி என்று இகழப்படுவேனோ என்ற திகிலே என்னை முற்றும் பிடித்திருந்தது. எனக்குப் பூர்ண நினைவு வந்தவுடன் நான் அமிர்தாவிடம் கேட்ட முதல் கேள்வி, 'உன் அம்மான் எங்கே?' என்பது தான். அக்கேள்விக்கு அவள் பதிலளிக்கச் சற்றுத் தாமதித்துப் பிறகு 'என் மாமா இறந்துவிட்டார். அவர் துப்பாக்கியே தற்செயலாய் வெடித்து அவர் மேல் பட்டு இறந்து விட்டதாகத் தெரிகிறது!' என்று சொன்னாள். அவள் அவ்விதம் கூறினாலும், 'குற்றமுள்ள

நெஞ்சு குறுகுறுக்கும்' என்பதுபோல் நான் சுட்டதில் தான் அவர் இறந்துவிட்டார் என்று உணர்ந்துகொண்டேன். மிஞ்சிப் போனால் அவர் என்னைச் சுடவே நான் தற்காப்பின் நிமித்தம்தான் சுட்டேனென்றும், அவர் மரணமடைய வேண்டும் என்ற நோக்கத்துடன் நான் சுடவில்லை என்றும் வாதிக்கலாம். ஆனால் அவர் 'என்னை எதற்காகச் சுடவேண்டும்?' என்றும், அதை யொட்டிப் பல கேள்விகளும் கேட்கப்படுமே. அதற்கெல்லாம் சரியான பதிலளிக்க எனக்கே தெரியாது. ஆகையால் நான் பதிலளிக்க முடியாமல் விழிப்பதைக் காணப் போலீஸாருக்கு என்னிடம் மேன்மேலும் பலமான சந்தேகம் ஏற்படும். கடைசியாக நான் கொலைகாரன் என்று தீர்மானிக்கப்படலாம். அத்தீர்மானத்தை என் தாயார் அறிந்தால் அவர் மனம் படும் வேதனையை நினைத்துப் பார்க்கவும் நடுங்கிற்று. ஆகவே நான் கண் காணாது மறைந்துவிட எண்ணினேன். ஆனால் அதற்கு என் உடல்நிலை உதவி அளிக்கக்கூடியதாக இல்லை.

ஸ்ரீவத்ஸா :—ஆம், அப்போது அமிர்தா தீரத்துடன் உதவி செய்ய முன் வந்தாள்.

நிரஞ்சனது முகம் உணர்ச்சியால் (தன் உயிரைக் காக்க அவள் பட்ட சிரமத்தையும் தீரத்தையும் நினைத்து) ஜொலித்தது. அமிர்தாவைத் திரும்பிப் பார்த்தான்.

அமிர்தா, தன் முகம் நாணத்தால் சிவக்கக் கீழே குனிந்து கொண்டாள்.

ஹால் முழுவதும் நிசப்தம் நிலவியது.

சுப்ரதாஸ்:—(நிரஞ்சனைப் பார்த்து) ஜகன்மோகனதாஸ் உங்களைச் சுட்டதற்கு என்ன காரணம் என்பது ஊகமாய்க்கூட உங்களுக்குத் தோன்றவில்லையா?

நிரஞ்சன் :—இன்ன காரணம் என்று எனக்குப் புலப்படவில்லை. ஆனால்....................

ஸ்ரீவத்ஸா :—ஊகமாய் யாதாயினும் ஒரு காரணம் தோன்றினால் அதை இப்பொழுது சொல்லுவதில் கெடுதி ஒன்றுமிராது. இனிமேல் எந்த ரகஸ்யமும் வெளிவர வேண்டியதுதான். ஆகையால் நீங்கள் உங்களுக்குத் தோன்றியதைச் சொல்லலாம்.

நிரஞ்சன் :—எனக்கு ஏற்பட்ட சங்கை.................. அதாவது, அவர் என்னிடமிருந்த ஒரு கடிதத்தைக்

கேட்டார். நான் அதைக் கொடுக்க மறுத்து விட்டேன். ஆனால் அச்சம்பாஷணைக்குப் பிறகுகூட அவர் என்னிடம் அன்பாகத்தான் பேசிக் கொண்டிருந்தார். அன்று விருந்துகூட என்னை உத்தேசித்துச் செய்தது தான் என்று நம்பினேன்.

ஸ்ரீவத்ஸா :—(அமிர்தாவிடமிருந்து விழுந்ததாய்க் கரீம் கொடுத்த குறிப்புக் கடிதத்தை எடுத்து நிரஞ்சனிடம் காட்டி) இக்கடிதம்தானே உங்களிடமிருந்து ஜகன் மோகனதாஸ் பெற எண்ணியது?

நிரஞ்சன் :—(ஆச்சரியத்தோடு) ஆம், ஆம், இதே கடிதந்தான். ஆனால்..............இது உங்களுக்கு எப்படிக் கிடைத்தது?

ஸ்ரீவத்ஸா :—ஏன்? அவ்வளவு ஆச்சரியத்திற்கு இடமில்லையே! இக்கடிதம் இன்னமும் உங்களிடம் இருப்பதாகவே எண்ணமோ?

நிரஞ்சன் :—இல்லை, இல்லை. அது காணாமல் போன விஷயம் நேற்றே அறிந்தேன். இருந்தாலும் அது உங்களிடம் இருக்குமென்று நினைக்கவில்லை.

ஸ்ரீவத்ஸா :—ஆம், என்னிடமிருக்குமென்று எப்படி உங்களுக்குத் தெரிய முடியும்? (பிறகு ஸ்ரீவத்ஸா பகவன்தாஸ் பக்கம் திரும்பி ஒரு சிறு புஸ்தகத்தைக் காட்டி) ஸார்! இந்தக் குறிப்புப் புஸ்தகம் தங்களுடையதுதானே?

பகவன்தாஸ் :—ஆம், நேற்றிரவு என்னிடமிருந்து திருடிக்கொண்டீரே, அதுதான்!

## 30. கொலைக்குக் காரணங்கள்

"ஆம், நான் அபகரித்துக் கொண்டதுதான், வேறு வழி இல்லை! உம்மை நான் நேரில் கேட்டால் அக்கடிதத்தைப் பற்றி 'ஒன்றுமே அறியேன்!' என்று சாதித்து விடுவீரே! எனக்கோ அதைப் பார்த்த பின்புதான் முழு ருசுவும் தெளிவுபடும். ஆகையால் யாதாயினுமொரு தந்திர வழியில்தான் அதைக் கைக்கொள்ள முடிந்தது.

பகவன்தாஸும் பிரகாசமும் பல்லைக் கடித்துக் கொண்டனர். பிரகாசம் ஸ்ரீவத்ஸாவை எரித்து விடுபவன் போல் பார்த்தான். ஆத்திரத்தால் அவன் மனம் புகைந்து கொண்டிருந்தது.

ஸ்ரீவத்ஸா :—ஜகன்மோகனதாஸ் நிரஞ்சனைச் சுடுவதற்குக் காரணமாக இருந்த விஷயம், அதாவது நிரஞ்சனைக் கொல்லத் தூண்டிய விஷயம், நேற்று நான் பகவன்தாஸிடமிருந்து கைப்பற்றிய கடிதம் ஜகன்மோகனதாஸிடம் இருந்ததனால்தான். அக்கடிதத்தின் மற்றொரு பாதிதான் நிரஞ்சனிடமிருந்தது. அந்த இரண்டு கடிதங்களையும் சேர்த்து விடை கண்டுபிடித்தால்தான் மிக்க லாபம் தரக்கூடிய விஷயம் விளங்கும். அதற்காகத்தான் ஜகன்மோகனதாஸ் நிரஞ்சனை வரவழைத்து இவனிடமிருக்கும் ரகஸ்யக் கடிதத்தின் மற்றொரு பாதியைக் கொடுக்கும்படி கேட்டார். ஆனால் நிரஞ்சன் தன்னிடமுள்ள அக்கடிதத்தின் மர்மம் தெரிந்தோ, தெரியாமலோ ஜகன்மோகனதாஸுக்குக் கொடுப்பதற்கு மறுத்துவிட்டான். அப்படி மறுத்தற்குள்ள காரணம் இவன்தான் சொல்லவேணும்.

நிரஞ்சன் :—என்னிடம் அக்கடிதத்தை அளித்தவர், நான் இருபத்து நாலு வயதுவரையில் அதைப் பத்திரமாக வைத்திருக்க வேணுமென்றும், அக்கடிதத்தை என்ன செய்வது என்பது பற்றி மற்றொரு கடிதம் எனக்குக் கொடுக்கப்படுமென்றும், அப்படி இரண்டாம் முறையாகக் கொடுக்கப்படும் கடிதத்தில் எழுதியிருக்கிறபடி நான் நடந்துகொள்ளவேணுமென்றும் கட்டளை யிட்டிருந்தார். விருந்து நடப்பதற்கு இரண்டு நாளுக்குமுன் ஜகன்மோகனதாஸ் என்னிடம் அக்கடிதத்தைப் பற்றிக் கேட்டு அதைத் தமக்களித்து விட்டால் அமிர்தாவை எனக்கு விவாகம் செய்து வைத்து விடுவதாய்க் கூறினார். நான், 'எனக்குச் சொந்தமாக எதுவும் ஆஸ்தி கிடையாதென்பது தங்களுக்குத் தெரியும். அப்படிப்பட்ட என்னிடம் ஒருவர் அக்கரை பூண்டு ஒரு கடிதத்தைக் கொடுத்துக் குறிப்பிட்டபடி நடந்துகொள்ள வேணுமென்று கட்டளை யிட்டிருக்கையில், நான் என் வாக்குத் தவறியும், அவர் கட்டளையை மீறியும் நடந்துகொள்ள முடியாது' என்று கூறினேன். அதற்கவர், 'உனக்கு அமிர்தா வேணுமானால் அக்கடிதத்தைத் என்னிடம் கொடுத்துத்தானாக வேணும்; மேலும் உனக்குப் பத்து நாள் சென்றால் வேண்டிய அளவு பணமும் சௌகரியங்களும் ஏற்படும். ஆகவே ஒரு கடிதத்தை இழப்பதன் மூலம் கஷ்டமோ, நஷ்டமோ அடைந்துவிடமாட்டாய்!' என்று கூறினார்.

அவர் சொன்னது எனக்கு ஆச்சரியத்தைத உண்டு பண்ணியது. அமிர்தாவிடம் என்னை மீறியே அளவற்ற காதல் ஏற்பட்டிருந்தாலும்கூட, நான் என் நன்மைகளுக்கெல்லாம் காரணமாக இருந்த பெரியவர், நிபந்தனையின் பேரில் என்னிடம் ஒப்புவித்த அக்கடிதத்தை மட்டும் வாக்குத் தவறிக் கொடுக்க இசையவில்லை. ஆனால் ஜகன்மோகனதாஸ் கூறிய ஜோஸ்யப்படி எனக்கு எதேஷ்டமான பணமும் சௌக ரியங்களும் ஏற்பட்டால் பத்தாயிரம் ரூபாய் வேண்டு மானாலும் கொடுத்துவிட்டு அமிர்தாவை மணந்து கொள்வதாகக் கூறினேன். அதற்கு அவர் பதில் ஒன்றும் சொல்லவில்லை.

ஸ்ரீவத்ஸா:—நீங்கள் ஜகன்மோகனதாஸ் மாளிகைக்கு வருமுன் அமிர்தாவுடன் பழகினதுண்டா?

நிரஞ்சன்:—ஒரே ஒரு தடவை கல்யாணபுரி ஹோட் டெலில் கண்டேன். ஆனால் நான் அவளுடன் ஒரு வார்த்தைகூடப் பேசினதில்லை. ஜகன்மோகனதாஸ் இறந்தபிறகு, நான் பிரக்ஞை தவறி யிருந்து பிறகு உணர்வு வந்த பிறகுதான் பேசினேன்.

ஸ்ரீவத்ஸா:—(அமிர்தாவைப் பார்த்து) அம்மா! இப்போதாவது தாங்கள் நடந்த விஷயங்களை மனம் விட்டுச் சொல்லுவீர்களா?

அமிர்தா:—எனக்கு அதிகம் தெரியாது. தெரிந்த வரையில் சொல்லுகிறேன். என் அம்மானுடன் நான் கல்யாணபுரிக்குச் சென்றிருந்தபொழுதுதான் இவரை முதல்முதலாகக் கண்டேன். என்னைக் கண்ட வுடனேயே இவருக்கு என்னிடம் ஒருவிதமான பிரியம் ஏற்பட்டிருக்கிறது என்று எண்ணினேன். ஏனெனில், அன்றிரவு இவர் என்னைப்பற்றிய விவரங்களை யெல்லாம் என் மாமாவைக் கேட்டுத் தெரிந்துகொண்டதை நான் பக்கத்து அறையிலிருந்து அறிந்தேன். அத்துடன் இவரது பெயர் நிரஞ்சன் என்பதையும், படிப்பு முடிந்து வேலைக்காக முயற்சி செய்துகொண்டிருக்கிறார் என் பதையும், என் அம்மான் இவரிடம் மிக்க அந்யோந்ய மாக இருக்கிறார் என்பதையும் தெரிந்து கொண்டதுடன், என் அம்மான் என்னை இவருக்கு விவாகம் செய்து கொடுக்கச் சம்மதமுள்ளவராகவே யிருக்கிறார் என்ப தையும் அறிந்து கொண்டேன்.

"பிறகு நான் அவரைப் பார்க்கவே யில்லை. சமீபத்தில் ஒரு தினம் என் அம்மான் என்னைத் தனியாக அழைத்து, 'முன்பு கல்யாணபுரியில் ஹோட்டேலுக்கு வந்திருந்த வாலிபன் நமது மாளிகைக்கு நாளைய் தினம் வரப்போகிருன். அவன் நாலைந்து நாளாவது நமது மாளிகையிலேயே விருந்தாளியாய்த் தங்குவான்' என்று சொல்லி என்னை உற்று நோக்கினர். ஏனோ அவர் என்னை அப்படிப் பார்த்ததும் எனக்கு என்னவோ போலிருந்தது; நான் பதிலளிக்கவே யில்லை!" என்று சொல்லி அமிர்தா சற்றுத் தயங்கிப் பிறகு "அவர் அன்று என்னிடம் காட்டிய காருண்யமானது எனக்குப் பிரமிப்பை உண்டுபண்ணிவிட்டது!" என்ருள்.

மறுபடியும் தொடர்ந்து பேசினுள்: "விருந்தாளி வந்து விட்டார். நான் இவரை மாளிகைக்குள் வரும்பொழுதே கண்டேன். அன்று பகலிலேயே விருந்தாளிக்கும் மாமாவுக்கும் ஏற்பட்ட சம்பாஷணையில் முரண்பாடு இருந்தது. அன்றிரவு என் அம்மான் என்னிடம் என்னென்னவோ சொன்னர். அதற்கு மறுநாள் இரவு என் அம்மான் என்னிடம் முடிவாக நான் நிரஞ்சனை மணக்கமுடியாதென்றும், தாமே என்னை மணந்துகொள்ளப் போவதாகவும் கூறினர்.

"நான் இடிந்துபோனேன். மாமாவின் எண்ணம் இப்படித் திடீரென்று மாறுதலடைந்தது பேராச்சரியத்தைக் கொடுத்தது. நான் மாமாவை மணந்து கொள்வது எப்படி? மிகவும் கெஞ்சினேன். 'நான் உம்முடைய இஷ்டம்போல் விருந்தாளியாக வந்திருப்பவரை மணக்கவில்லை; உங்களையும் மணந்துகொள்ள முடியாது! நான் கன்னியாகவே யிருந்து என் ஆயுளைக் கழித்து விடுகிறேன்' என்றேன். என் அம்மான் அதை ஏற்றுக்கொள்ளவில்லை. நானும் பிடிவாதமாய் மறுக்கவே, அவர் 'நீ இவ்விதம் பிடிவாதமாக இருந்தால் உனக்கு என் ஆஸ்தியில் தம்படிகூட வைக்கமுடியாது, உன் தங்கைக்கும் வைக்கமாட்டேன்; பிறகு நீங்கள் இருவரும் பிச்சை யெடுக்க நேரிடும்!' என்று பயமுறுத்தினர். ஆனல் நான் அதற்குப் பயப்படவில்லை.

"அதற்குப் பிறகும் இருமுறை என் அம்மான் என்னை வற்புறுத்திக் கேட்டார். தந்தைபோல் நினைத்து வந்த அவரை மணந்துகொள்வது என்பது சாத்தியப் படாதென்று சொல்லிவிட்டேன். ஆகவே, அவர் பழைய உயிலை மாற்றிப் புதிய உயில் எழுதி யிருக்கவேண்டும்.

எனக்கும் மாமாவுக்கும் நடந்த விஷயங்கள் அருணாவுக்குத் துளிகூடத் தெரியாது. நானும் கவலையற்ற அவளது குழந்தை யுள்ளத்தில் கவலையைப் புகுத்த எண்ண வில்லை.

“எனினும் ஜகன்மோகனதாஸ் அன்று விருந்துக்கு ஏற்பாடுகள் செய்ததைக் கண்டதும் நான் அவர் என்னிடத்திலோ நிரஞ்சனிடத்திலோ வெறுப்புக் கொள்ளவில்லை என்றே நினைத்தேன். ஏனெனில் அவர் எங்களிடம் அன்புடன்தான் பேசிக்கொண்டிருந்தார். இருந்தபோதிலும் எனக்கு ஆச்சரியமும் உண்டாகாமல் போகவில்லை. ஏனெனில், அவர் ஒன்றை நினைத்து விட்டால் அதை முடித்தே திரும் குணமுடையவர். அப்படி யிருக்க அவர் மனம் அவ்வளவு சீக்கிரம் சாதாரணமாகத் திரும்பிவிட்டதைக் காண ஆச்சரியப் படாமலிருக்க முடியவில்லை.

“பிறகு விருந்து முடிந்தபின் என் மாமா சுடப் பட்டிருந்ததைக் கண்டதும் என் மனம் கலவரமடைந்தது. ஒரு வேளை மாமாவுக்கும் நிரஞ்சனுக்கும் பேச்சு முற்றிக் கடைசியில் இவ்விதம் முடிந்திருக்குமோ என எண்ணி னேன். மறு க்ஷணமே ‘நிரஞ்சனை நாம் சேர்ந்தாற்போல் கால்மணி நேரங்கூடப் பாராமலில்லையே! அப்படி யிருக்க, மாமாவும் நிரஞ்சனும் பேசிச் சச்சரவு ஏற்பட்டு இவ்வளவு விஷயம் நேர்ந்திருக்க முடியாது என்ற எண்ணமும் உண்டாயிற்று. எனினும் என் மனம் குழப்பத்தில் உழன்றது. பிறகு நிரஞ்சன் மூர்ச்சித்துக் கிடப்பதைக் கண்டதும் என் சந்தேகம் பலப்பட்டு, கோபத்தால் மாமா சுடத் திருப்பி இவரும் மாமாவைச் சுட்டிருக்கவேண்டும் என்று எண்ணினேன். மாமாவோ இறந்துவிட்டார். அவரைப் பற்றி என்ன கவலைப்பட்டும் பிழைக்கப் போகிறதில்லை. இனிமேல் உயிருடன் இருக்கும் விருந் தாளியைக் காப்பாற்ற வேண்டும் என்று என் உள்ளம் கவலைகொண்டது.

“ஆனால் டெபுடியோ முதலிலேயே நிரஞ்சனிடமும் என் னிடமும் சந்தேகப்பட்டுவிட்டார். அவரைக் கண்டாலே எனக்குத் திகிலாக இருந்தது. எப்படியாவது அவர் நிரஞ்சனைக் கொலையாளி யென்று கண்டுபிடித்து ஜெயி லுக்கு அனுப்பிவிடுவார்!—என்ற எண்ணத்தால் என் மனம் மிக்க வேதனை அடைந்தது.

"நிரஞ்சனுக்கு மூர்ச்சை தெளிந்ததும் என் சந்தேகத்தை நிச்சயப்படுத்தி விட்டார். மேலும் தாம் ஒரு முக்கியக் கடிதத்தை, அதாவது குறிப்புக் கடிதத்தை, அன்றைக்கு நாலாவது தினத்திற்குள் சந்திரபுரியிலுள்ள ஒருவரிடம் ஒப்புவிக்க வேண்டுமென்றும், அதன் பிறகு தாம் இறந்தாலும் பாதகமில்லையென்றும் கூறினர். நான் அவர் குறிப்பிட்ட குறிப்புக் கடிதத்தை மட்டும் பத்திரப்படுத்திக் கொண்டேன். மற்றப்படி நான் ஒன்றையும் அறிந்துகொள்ள எண்ணவில்லை.

"டெபுடி நிரஞ்சனை விசாரித்தால், எப்படியும் நிரஞ்சனை அரெஸ்டு செய்துவிடுவார். ஆகையால் டெபுடியோ, ஸ்ரீவத்ஸாவோ நிரஞ்சனைக் கொலையைப் பற்றி விசாரிக்கு முன்பே அவ்விடத்தை விட்டுச் சந்திரபுரிக்குப் புறப்பட்டு விடவேண்டுமென்று தீர்மானித்தேன். அவரை அந்நிலையில் தனியாக அனுப்பிவைக்கவும், எனக்குத் தெரிந்தவரையில் எவருமில்லை. ஆகவே நானே அவரை அழைத்துச் செல்லுவதைத் தவிர வேறு வழி யில்லை.

"உங்களிடம் (ஸ்ரீவத்ஸாவை நோக்கி) எனக்கு ஏனோ ஒருவித நம்பிக்கையும் பயமின்மையும் ஏற்பட்டிருந்தன. இருந்தாலும் விஷயத்தை உங்களிடமும் வெளியிட முடியவில்லை. ஏனெனில் நிரஞ்சன் சுட்டது உண்மை. சொன்னல் பிரதிகூலம்தான் ஏற்படும் என்ற பயம். கடைசியாக நான் என் பிரிய அருணவுக்குக்கூடத் தெரியாமல் மோட்டாருக்கு ஏற்பாடு செய்து பின்இரவு இரண்டரை மணிக்கு நிரஞ்சனுடன் புறப்பட்டுவிட்டேன். என்னுடைய எண்ணமெல்லாம் அவரை அவரது எண்ணப்படியே சந்திரபுரியில் சேர்த்துவிட வேண்டுமென்பதுதான்.

"நாங்கள் மோட்டாரில் மதன்பூரை வந்தடைந்ததும் அவரைச் சற்று ஓய்வு எடுத்துக்கொள்ளச் செய்து, சிற்றுண்டி யருந்திக் கையில் சிறிது ஆகாரமும் எடுத்துக்கொண்டு மறுபடியும் புறப்பட்டோம். அதன் பிறகு பின்னல் கார்கள் தொடர்ந்து வருவதை அறிந்தோம். டெபுடியும் நீங்களும்தான் துரத்தி வருவதாய் நான் எண்ணினேன். கடைசியில் ஒரு கார் நின்றுவிட, ஒரு கார் எங்களைத்தொடர்ந்து வந்தது. நான் எவ்வளவு சாமர்த்தியமாகவும் வேகமாகவும் காரைச் செலுத்தி அவர்கள் கையில் அகப்படாமல் சென்றும், அவர்கள் குறுக்குச்சாலை வழியாக வந்து எங்கள் காருக்கு முன்னல் தங்கள் காரை

நிறுத்தவும், நான் பிரேக் போட்டு என் காரை நிறுத்த வேண்டியதாயிற்று. உடனே முன் காரினின்றும் பகவன் தாஸ் இறங்கிவந்து எங்கள் காரில் ஏறிக்கொண்டு, 'ஏ நிரஞ்சன்! நீதான் பிரபு ஜகன்மோகனதாஸைச் சுட்ட கொலையாளி என்பது எங்களுக்குத் தெரியாமல் போக வில்லை. நீ திருட்டுத்தனமாய்த் தப்பிச் சென்று விடும் எண்ணத்தை விட்டுவிடு. நான் சொல்வது போல் மறு பேச்சின்றி நடந்துகொள்; இல்லையானால் இதற்குத்தான் நீ இரையாகவேணும். ஆம், பழிக்குப் பழி!' என்று ஒரு துப்பாக்கியை நீட்டினார். நிரஞ்சன் மறுபேச்சின்றி பகவன்தாஸுக்குப் பணிந்துவிட்டது எனக்குப் பீதியையும் ஆச்சரியத்தையும் உண்டுபண்ணி விட்டது.

நிரஞ்சன் :—அச்சமயம் நான் பகவன்தாஸுக்குக் கீழ்ப்படியாமல் என்ன செய்யமுடியும்? பகவன்தாஸும் பிரகாசமும் கல்நெஞ்சர்கள் என்பதை நான் நன்கறிந் தேன். அப்பொழுது நான் அவர்களுக்கு இணங்க வில்லையானால், கட்டாயம் அவர்கள் என்னையும் அமிர் தாவையும் அவ்விடமே சுட்டுக் கொன்றிருப்பார்கள். அதனால் நான் நடக்க நடக்கப் பார்த்துக்கொள்வோம் என்று சம்மதித்துவிட்டேன். ஆனால் நாங்கள் அந்த ராயல்பட்டி பங்களாவை அடைந்த பின் அவ்விருவரும் என்னிடம் கூசாமல் ஒரு விஷயத்தைக் கூறினார்கள். அதாவது அவர்கள் எங்களை அவ்விரவிலேயே மறு படியும் மோட்டாரிலே ஓரிடத்திற்கு அழைத்துச் செல்லப் போவதாகவும், நடுவில் என்னை ஒருவனிடம் ஒப்புவித்துவிடப் போவதாகவும், அமிர்தாவைப் பனங் காட்டிற்குப் பத்துமைலுக்கப்பால் விட்டுவிடப் போவ தாகவும், அதற்கு நான் சம்மதித்துத்தான் ஆகவேண்டும் என்றும் கண்டிப்பாய்க் கூறினார்கள். 'நான் மறுத்தால்' என்று கேட்டதற்கு, நிர்த்தாக்ஷண்யமாய் "அவ்விடமே சுட்டுக் கொல்லப்படுவாய்!" என்றார்கள். ஆகவே நான் மறு பேச்சின்றி அதற்கு ஒப்புக்கொண்டேன். அங் கிருந்து நாங்கள் ரகஸ்யமாய்த் தப்பிப்போவதும் முடியாத விஷயம். மூன்றாவதாக, நான் அதை மறுத்துக் கூறினா லும் அவர்கள் போலிஸாரிடம் சென்று நான் கொலையாளி என்பதைத் தெரிவித்து விடுவதாகச் சொல்லி, நான் சந்திரபுரிக்குச் செல்ல முடியாமல்போவதுடன் உடனேயே போலிஸ் கோர்ட்டுக்குச் செல்ல நேரிடுமென்பதையும் எண்ணிப் பார்க்கச் சொன்னார்கள். ஆகவே நான், பனங்

காட்டில் என்னை ஒப்படைக்கிறவர்களிடம் பார்த்துக் கொள்ளலா மென்றும், அப்படிச் செய்தால் அமிர்தா வுக்கும் அதிக அபாயம் நேரமுடியாதென்றும் எண்ணி னேன். எப்படி யென்ருல் பத்து மைல் தூரத்தில் அமிர் தாவை விடப்போவதாய்ச் சொன்னர்க ளல்லவா? அந்தப் பத்து மைல் தூரத்தையும் நான் சிக்கிரத்தில் கடந்து சென்று அமிர்தாவைக் கண்டுகொள்ளலாம் என்று நம்பினேன். நான் அவ்வளவு அடங்கி நடந்ததற்கு முக்கிய காரணம், 'நான் கொலையாளி!' என்ற எண்ணம்தான். அமிர்தா எவ்வளவோ கெஞ்சிக் கேட்டுக்கொண்டும் கூட நான் மறுத்து அவ்வளவு அடங்கி நடந்துகொள்ள நேரிட்டது. பிறகு பனங் காட்டிற்கு வந்ததும் பாவிகள் என்னைக் கொலை செய்து கொண்டு வரும்படி சொல்லியதைக் கேட்டதும், பகவன் தாஸைப் பற்றியும் பிரகாசத்தைப் பற்றியும் என்ன நினைப்பதென்றே புரியவில்லை. 'என்னைக் காப்பாற்ற வந்த அமிர்தாவின் கதி யாதாகுமோ?' என்ற பெருந் திகிலும் ஏற்பட்டது: நான் செயலற்றவன் போலாகிவிட்டேன். அவர்கள் என்னை இழுத்துக்கொண்டு வெகுதூரம் சென்றபின் அங்குள்ள அனைவரும் கத்தியையும் கழி களையும் எடுத்துக்கொள்ள என்னை ஒருவன் ஓங்கி வெட்டவரவும், நான் உணர்ச்சி பெற்றவனுய் என் உயிரைக் காப்பாற்றிக்கொள்ள அவர்களுடன் மன் ருடினேன். இருந்தாலும் ஒருவன் பத்து மனிதர்களுக் கிடையில் எவ்வளவு நேரம் சமாளிக்க முடியும்? கடைசியில் அவர்கள் ஆத்திரத்தோடு என்னை நெருங்கவும், ஒருவன் தலையில் ஓங்கி அடிக்க, சிலர் கத்திகளால் என்னைக் கண்ட இடத்தில் வெட்ட, நான் தாங்கமாட்டாமல் கத்தி னேன் என்று எண்ணுகிறேன். ஆம், அதற்குப் பின் நான் ஸ்மரணை தப்பி யிருக்கவேண்டும. அச்சமயம் தெய்வம் போல் நீங்கள் வந்து காப்பாற்றி யிராவிட்டால் நான் இறந்து இன்று நாலு தினங்களாகி விட்டிருக்கவேண்டும். தோன்ருத் துணைவராக வந்து ரக்ஷித்த உம்மை நான் பிரத்யக்ஷ தெய்வமென்றுதான் நம்புகிறேன்.

ஸ்ரீவத்ஸா:—ஓ போதும், போதும்! ஸ்துதி அப்புற மாகட்டும். உங்களிடம் இருந்த அந்தக் குறிப்புக் கடி தத்தை அமிர்தாவிடம் கொடுத்திருந்தீர்களல்லவா?

நிரஞ்சன்:—ஆம், மோகன் மாளிகையி லிருக்கையி லேயே நீங்களும் டெபுடியும் அறியாதபடி அக்கடிதத்தை மட்டும் மறைத்து வைத்துக்கொண்டு, அவள் என்

விஷயம் தெரிவிக்கக்கூடிய மற்றச் சாதாரணக் கடிதங்களைக்கூட எரித்துவிட்டாள்.

ஸ்ரீவத்ஸா :— ஜகன்மோகனதாஸைச் சுடுவதற்கென்று உபயோகப்படுத்திய உங்கள் துப்பாக்கியை என்ன செய்தீர்கள்?

நிரஞ்சன் :—நான் ஆயாசத்தால் வடபுறம் கோடியில் ஒரு பெரிய குரோடன்ஸ் செடித் தொட்டியினருகில் உட்கார்ந்ததாய்க் கூறினேனல்லவா? அத்தொட்டிக்குள் புதைத்துவிட்டேன். ஆனால் நானும் அமிர்தாவும் மோகன் மாளிகையை விட்டு வரும்பொழுது அதை அமிர்தாவைக்கொண்டு எடுத்துவரச் செய்துவிட்டேன்.

ஸ்ரீவத்ஸா :—சரி, ஜகன்மோகனதாஸ் உங்களிடம் இருந்த குறிப்புக் கடிதத்தைப் பெறவும், நீங்கள் அமிர்தாவை விவாகம் செய்து கொள்ளாமலிருக்கவும், உங்களைச் சுட்டுக் கொல்ல எண்ணினார். இரண்டாவது, ஜகன்மோகனதாஸிடமிருந்த குறிப்புக் கடிதத்தின் விஷயமறிந்த பகவன்தாஸும் பிரகாசமும், அக்கடிதத்தின் மற்றப் பாதிக் கடிதம் உங்களிடம் இருப்பது தெரிந்தோ தெரியாமலோ, அக்குறிப்புக் கடிதத்தினால் ஏற்படக்கூடிய லாபத்தை உத்தேசித்து, ஜகன்மோகனதாஸை இல்லாமலடித்துவிட எண்ணினார்கள். உங்கள் மேல் கொலைக் குற்றம் ஏற்படும்படியான சந்தர்ப்பத்தை எதிர்பார்த்து அச்சமயம் நேர்ந்ததும், அவர்கள் ஜகன்மோகனதாஸைச் சுட்டுவிட்டு, அவர் மாடிப்படியில் இறந்து கிடக்கையில் எப்படியோ தந்திரமாய் அவரிடமிருந்த அந்தக் குறிப்புப் புஸ்தகத்தை அபகரித்துக் கொண்டனர். பிறகு அவர்கள் அக்குறிப்புக் கடிதத்திற்கும் நிரஞ்சனுக்கும் சம்பந்தமிருப்பதை அறிந்திருக்க வேண்டும். அத்துடன் நிரஞ்சனும் அமிர்தாவும் ரகஸ்யமாய்ப் புறப்பட்டு விடுவார்கள் என்பதையும் எக்காரணத்தாலோ ஊகித்திருக்கின்றனர். அவ்விதமே நீங்களிருவரும் இரவோடிரவாய்ப் புறப்பட்டுவிடவும், அவர்கள் தொடர்ந்து வந்து பிடித்துத் தங்கள் எண்ணங்களைச் சாதிக்க முயன்றனர். ஆனால் நிரஞ்சனைப் பற்றி எனக்குத் தெரியாத சில விஷயங்களைப் பகவன்தாஸும் பிரகாசமும் அறிந்திருக்கின்றனர். ஆம், நானும் இப்பொழுது எஞ்சி நிற்கும் விஷயமான 'நிரஞ்சன் யார்? நிரஞ்சனுக்கும் சந்திராபுரி ஜமீனுக்கும் உள்ள சம்பந்தம் யாது? நாங்கள் கல்யாணபுரிக் கல்லூரியில் விசாரிக்கச்

சென்றபொழுது கடந்த ஆறு வருஷகாலமாய் நிரஞ்சன் என்ற பெயருடைய வாலிபன் ஒருவனாவது அக்கல்லூரி யில் படிக்கவே யில்லை என்று தெரிவித்தபடியால், ஒரு கால் நிரஞ்சன் அக் கல்லூரியில் மாறு பெயருடன் படித் தாரா? அல்லது அங்குப் படித்ததே யில்லையா? இச் சந்தேகங்களை யெல்லாம் வக்கில் அவர்கள் தெரிவிப்பார்க ளென்று நம்புகிறேன்.

## 31. கடிதம்

வக்கில் தாமோதரம், "ஆம், அந்த ரகஸ்யங்களைப் பற்றி வெளியிட வேண்டிய நேரம் வந்து விட்ட படியால் இனிமேல் மறைத்து வைக்க வேண்டிய அவசியமில்லை. அவ்விஷயங்களைப் பற்றித் தெரிந்து கொள்வதற்கு ஜமின்தார் தேவதாஸ் அவர்கள் ஜமின்தார் சம்புதாஸ் அவர்களுக்கு எழுதிய கடிதத்தைப் படிக்கிறேன், கேளுங் கள்" என்று உரக்கப் படிக்க ஆரம்பித்தார்:

சாந்தாச்ரமம்
காசி.
வைகாசி-மூ 10-உ

எனது அன்பு மிக்க சிரஞ்சிவி சம்புதாஸுக்கு,

உன் பெரிய தந்தை சகல செல்வங்களும் உண்டாகவேணுமாய் ஆசிர்வதித்து எழுதுவது. எனக் குப் பிள்ளை இல்லாதபடியால் என் ஜமீனை உனக்கு மனப்பூர்வமாய் அளித்துவிட்டேன். அதை நீயும் இந் நாள் வரையில் நேர்மையுடன் பரிபாலித்து நற்கீர்த்தி யுடன் இருப்பது எனக்கு மட்டற்ற மகிழ்ச்சியை அளிக் கிறது. ஆனால் குழந்தாய்! ஒரு விஷயம் கவனித்தாயா? எனக்கும் ஆண் குழந்தை பிறக்கவில்லை, உனக்கும் ஆண் குழந்தை பிறக்கவில்லை. உன் தந்தைக்கு நீ ஒருவன் பிறந்தபடியால்தான் ஜமீனுக்கு நீ வார்சாக வந்தாய். ஆனால் உனக்குப் பின் ஜமீனை ஒப்புவிக்க நமது வம்சத்தில் ஆண் சந்ததி இல்லை. உனக்கு இப்பொழுது வயது ஐம்பதாகிறது. உன் மனைவியும் நோயாளியா யிருக்கிறாளென்று உன் கடிதத்திலிருந்து அறிகிறேன். ஆகவே இனிமேல் உனக்கு ஒரு ஆண் குழந்தை பிறக்கு மென்று எப்படி எண்ண முடியும்? எனக்கோ இப்பொழுது வயது எழுபத்தொன்பது பூர்த்தியாகி

விட்டது. மிக்க தள்ளாமையும், மனத்தில் ஒரு அதைரியமும் ஏற்பட்டிருக்கின்றன. ஆகவே நான் இந்நாள் வரையில் உனக்குச் சொல்லாமலிருந்த ஒரு விஷயத்தை இப்பொழுது தெரியப்படுத்துவது என் கடமையாகும்.

உன் பாட்டனார் ராமதாஸ் மிக்க தீரர். ஒழுக்கத்திலும், குலாசாரத்திலும் அக்கரை பூண்டவர். வாக்கைக் காப்பாற்றுவதில் மிகவும் உறுதியுள்ளவர். அவரது கியாதி அந்நாட்களில் மிகவும் பிரசித்தமாக இருந்தது. அவரது காலத்தில்தான் சந்திரபுரி ஜமீன் மிக்க விஸ்தீரணத்தையும், மிக்க வருவாயையும் அடைந்தது. அவருக்கு மூன்று ஆண் குழந்தைகள் பிறந்தன. மூத்தவனை தேவதாஸ் நான்தான். என்னிலும் மூன்று வயது இளையவனை கேசவதாஸ்தான் உன் தந்தை. அவனுக்கும் பதினெட்டு வயதிற்குச் சின்னவன் கடைக்குட்டி சுந்தரதாஸ்.

சுந்தரதாஸின் சுபாவம் களங்க மற்றது. உல்லாச மனப்போக்குடையவன். அவனுக்குப் படிப்பில் ருசியில்லை. சங்கீத ரஸிகன். அவனைச் சுற்றி அநேக நண்பர்கள். தந்தைக்கு அவனது நட்த்தை பிடிக்கவில்லை.

சுந்தரதாஸுக்கு வயது இருபதாயிற்று. அச்சமயம் சந்திரபுரிக்கு ஒரு நாடகக் கம்பெனி வந்து சேர்ந்தது. அந்நாட்களில் நாடகக் கம்பெனிகளைப் பற்றி நல்ல அபிப்பிராயம் கிடையாது. அறிவாளிகள் நாடகத்தை வெறுத்தனர். அப்பேர்ப்பட்ட சமயத்தில் ஒருதினம் சுந்தரதாஸ் தான் நாடகத்தில் நடிக்கப் போவதாய்க் கூறித் தந்தையிடம் அநுமதி கேட்டான். தந்தைக்கு உண்டான கோபம் கொஞ்சமல்ல. சுந்தரதாஸின் மனப்பான்மையை வெகுவாய்க் கண்டித்து, 'குலத்தைக் கெடுக்கவந்த கோடாலிக் காம்பே! நீ எனக்கு வந்து பிறந்தது என் ஜன்மாந்தர பாபத்தின் பயனே!' என்று சீறினார். ஆகவே அச்சமயம் சுந்தரதாஸ் நாடகத்தில் நடிக்க வேண்டுமென்னும் மனப்பான்மையைக் கைவிட வேண்டியதாயிற்று.

கால சக்ரம் ஒரு வருஷத்தை ஓட்டிற்று. சந்திரபுரியில் ஒரு சர்க்கஸ் கம்பெனி வந்து ஆறு மாதம் தங்கி யிருந்தது. சுந்தரதாஸ் ஒருவரது அநுமதியும் பெறாமல் சர்க்கஸ் கம்பெனியில் பபூன் பார்ட்டு மேற்கொண்டான். விஷயம் ஜமீன்தாருக்குத் தெரியவந்தது.

(அச்சமயம் நான் ஜமீன் விஷயமாய் வெளியூர் சென்றிருந்தேன்.)

சுந்தரதாஸ் வழக்கம்போல் பாடிக்கொண்டு மாளிகைக்குள் வந்தானும். தந்தை வாயில் வந்தவாறு திட்டி, மானமற்ற பிழைப்புப் பிழைக்கும் கூத்தாடியான அவன் இனி என்றும் தன் முகத்தில் விழிக்கக்கூடாதென்றும், மாளிகையில் அவன் பாததூளிகூடப் படலாகாதென்றும் கண்டிப்பாயுரைத்து, ஜவானைக் கூப்பிட்டுச் சுந்தரதாஸை பங்களாவின் வெளியே கொண்டு விட்டு வரும்படி கட்டளையிட்டாராம்.

மகா ரோஷக்காரனுனதாலும், வாலிபத் திமிராலும் அந்த இரவு பதினேரு மணி வேளையில் உடுத்திருந்த உடையோடு அப்படியே மறு பேச்சின்றி வெளியேறினவன்தான். பிறகு நாங்களும் சந்திரபுரி வாசிகளும் அவனைக் காணவேயில்லை.

வெளியூர் சென்றிருந்த நான் திரும்பி வந்தவுடன் மேற்படி விஷயங்களை அறிந்ததும் கண்ணீர் விட்டுப் பெண்பிள்ளைபோல் அழுதேனென்ருல், அது மிகையாகாது. குழந்தை யுள்ளம் வாய்ந்த சுந்தரதாஸை நான் ஒருவன்தான் முற்றும் அறிந்தவன். ஆனால் பிடிவாதக்காரரான தந்தைமுன் அதிகம் சொல்ல முடியவில்லை. நல்லகாலமாய் அத்துயரை அனுபவிக்க எங்கள் தாய் இல்லை; ஆம், அதற்கு முன்பாகவே இறந்து விட்டாள். பாவம், செல்வத்தில் பிறந்து வளர்ந்த அவன் என்ன என்ன கஷ்டங்களை அனுபவித்தானே? யார் கண்டது?......

பன்னிரண்டு வருஷகாலம் அவனைப்பற்றி ஒன்றுமே தெரியவில்லை. பிறகு உன் பாட்டனாரின் அந்திய காலம் கிட்டிற்று. அவர், சுந்தரதாஸைத் தம் முகத்தில் விழிக்கக்கூடாதென்று கோபத்தில் ஆணையிட்டு விட்டாலும், பிறகு அவனது நினைவாகவேதான் உயிரை விட்டார். அவனுக்காகத் தம் ஜமீனிலிருந்து சிறு பாகம், — ஏன்? ஒரு ரூபாய்கூட வைக்காவிட்டாலும்,— சாகுமுன் என்னைக் கூப்பிட்டு, தாம் ஒரு சமயம் ஓரிடத்தில் நிலம் வாங்கி, அங்கே கட்டடம் கட்டுவதற்காக அஸ்திவாரம் போடப் பூமியைத் தோண்டுகையில் ஓரிடத்தில் பூமியிலிருந்து ஒரு புதையல் அகப்பட்டதாகவும், அதை எடுத்து மதிப்பிட்டு ஜமீன் மாளிகையில் ஓரிடத்தில் புதைத்து விட்டதாகவும் சொன்னார். ஏனெனில்

அப்பொழுதெல்லாம் நல்ல வருவாய் இருந்தபடியால் அனுவசியமாக அப்புதையல் - தனத்தை எடுத்து ஆள மனமின்றி, ஜமீனுக்கு எக்காலத்திலாவது வருவாய் குன்றி க்ஷீணதசை ஏற்பட்டால் அச்சமயத்தில் அப்புதையல் - தனம் உபயோகப்படுமெனப் புதைத்தாராம். அந்த இடத்தை எனக்கறிவித்து, 'உனக்கு ஜமீன் சொந்தம். உன் தம்பி கேசவதாஸுக்கு ஏதேஷ்டமான சொத்துக்கள் வைத்திருக்கிறேன்' என்றார். ஆனால் பரதேசியாய்ப் போன அந்தத் துரதிர்ஷ்டக்காரனுக்குத்தான் ஒன்றுமில்லை. எப்பொழுதாயினும் ஒரு சமயம் அவனிருப்பிடம் தெரிந்தாலும், அல்லது அவனது பிள்ளை குட்டிகளின் இருப்பிடம் தெரிந்தாலும், அவனது மூத்த மகன் இருபத்துநாலு வயது வரையில் ஒழுங்கினமான செயல் ஒன்றிலும் ஈடுபடாமல், அதாவது நியாய விரோதமான வழியில் செல்லாமல், இருந்தால் சுந்தரதாஸின் அப்புதல்வனுக்கு அப்புதையல் - இடத்தைக் குறிப்பிட்டுக்கொடுத்து அப்புதையலை அவன் அடையும்படி செய்யவேண்டும். இந்த வேலை உன் ஆயுளுக்குள் முடியாவிட்டால் இந்த ஜமீன் யார் வசம் ஒப்புவிக்கப்படுகிறதோ, அவர்களிடம் உன்னால் முடிவுபெறாத இவ்வேலையை அவர்கள் முடித்து வைக்கும்படி வாக்குறுதி பெற்றுக்கொள்—என்று என்னிடம் கூறினார். நான் அவ்விதமே செய்வதாய் அவரிடம் சத்தியம் செய்து கொடுத்தேன். அதன் பின் அவர் இம்மண்ணுலகை நீத்தார்.

உன் பாட்டனாரின் வருஷத் திதியன்று இரவு, மாளிகையின் வாசல்காப்போன் என்னிடம் ஒரு விஷயம் கூறினான். அதாவது, அன்று பகல் பன்னிரண்டு மணி சுமாருக்கு, மாளிகையின் முன்னால் ஒரு மனிதன் நின்றபடி மாளிகையை உற்று நோக்கியபடியே அரை மணி நேரம் நின்று கொண்டிருந்தானாம். அவனது கண்களிலிருந்து கண்ணீர் பெருக அதை அவன் அடிக்கடி துடைத்துக்கொண்டதாகவும், பிறகு அவன் பித்தனைப்போல் அவ்விடத்தை விட்டுச் சென்றதாகவும் தெரிவித்து, அந்த மனிதனின் அங்க அடையாளங்களையும் தெரிவித்தான். உடனே என் மனத்தில் அப்படி வந்து சென்றவன் என் தம்பி சுந்தரதாஸ்தான் என்று தோன்றிவிட்டது. அப்பொழுது எனது நிலை எப்படி இருந்திருக்கும்? அந்த வாசல்காப்போன் அப்பொழுதே வந்து தெரிவித்திருந்தால் நான் கட்டாயம் என் தம்பி

யைக் கண்களால் கண்டு எவ்வளவோ ஆனந்தப்பட்டிருப்பேன்! ஆனால் அந்த மூடன் நிதானமாய் இரவு வந்து தெரிவித்தானே!

பிறகு நான் அன்று வந்து சென்ற என் தம்பியைப் பற்றிப் புலன் விசாரித்தும் பிரயோஜனப்படவில்லை. கடைசியாக, சுந்தரதாஸ் அக்கரைச் சீமையில் இருப்பதாய்ச் சந்தேகம் தோன்ற, நான் அவ்விடமும் சென்று ஒவ்வொரு இடத்திலும் அவனைப்பற்றி விசாரித்துக்கொண்டு வந்தேன். இதனிடையில் கால சக்ரம் உருண்டோடப் பல வருஷங்கள் கடந்துவிட்டன. அதன் பிறகு ஓர் ஊரிலுள்ள நகைக் கடையின் சொந்தக்காரர், நான் குறிக்கும் அடையாளமுள்ளவர் தம் கடையில் காஷியராக இருந்ததாகவும், ஆறுமாத முன்புதான் அவர் இறந்துபோய் விட்டதாகவும் கூறினர். அதைக் கேட்ட எனக்கு எப்படியிருந்திருக்கும்? தலையில் அடித்துக்கொண்டு அழுதேன். பிறகு நான் அவரிடம் சுந்தரதாஸைப் பற்றித் தெரிந்த வரையில் கூறும்படி கேட்க, அவர் "நீங்கள் கூறும் விதமான மனிதர் எங்கள் கடையில் பொறுப்பான உத்தியோகம் வகித்திருந்தது உண்மை. ஆனால் அவரை 'தாஸ்' என்ற பெயரில்தான் நாங்கள் அறிவோம். ஆனால் ஒரு சமயம் அவர் என்னிடம் தமது முழுப் பெயர் 'சுந்தரதாஸ்' என்று தெரியப்படுத்தினர். அவர் மிக்க நற்குணமுடையவர். அவர் ஆறு மாதங்களுக்கு முன் இறந்தபின், அவரது மனைவி தன் இளைய ஆண் குழந்தையுடன் தன் சொந்த நாட்டிற்குச் சென்றுவிட்டதாய் அறிந்தேன் என்று, விவரமும் கொடுத்தார். அத்துடன் சுந்தரதாஸின் மனைவி பெயர் இந்திராவென்றும், அக் குழந்தையின் பெயர் சரத்சந்திரன் என்றும் அறிந்தேன்.

பிறகு இந்திராவும் அவளது குழந்தையும் இருக்குமிடத்தைக் கண்டுபிடிக்க முயன்றேன். அந்த முயற்சி நாலு வருஷங்களுக்கு முன்புதான் பலிதமாயிற்று, இந்திரா கல்யாணபுரியில் தன் கணவனால் சேர்த்து வைக்கப்பட்டிருந்த மிகச் சொற்பமான திரவியத்தைக் கொண்டு குழந்தையைப் படிக்கவைத்து மானமாய் ஜீவித்து வருகிருள் என்பதைத் தெரிந்துகொண்டதும், நான் வழிப்போக்கன்போல் அவள் வீட்டிற்குச் சென்று தாகத்திற்குத் தண்ணீர் கேட்டுச் சாப்பிட்டுவிட்டுத் தந்திரமாய் அவள் வாய் மூலமாகவே அவள் வரலாறுகளைக் கேட்டறிந்தேன். சுந்தரதாஸ் தான் ஜமீன்தார் ராம

தாஸ் அவர்களுக்குத் தூர பந்துவென்றும், அவருக்குத் தான் எவ்வளவோ கடமைப்பட்டிருந்தும் கட்வுள் பிரித்து விட்டார் என்றும், தன்னிடம் மிக்க அன்புள்ள ஒரு தமையனார் இருந்ததாகவும், அத்தமையனார் மிக்க மேன்மையான குணம் படைத்தவ ரென்றும் கூறியதை அவள் அப்படியே நம்பியிருந்ததாகத் தெரிந்துகொண்டேன்.

அதன்மேல் நான் பிள்ளையில்லாததால் சரத்சந்திரனிடம் மிக்க அன்பு கொண்டதாகவும், அதனால் அவனது படிப்பிற்காக வருஷா வருஷம் ரூ. 1,200 வக்கில் மூலமாய் அவனுக்குச் சேரும்படி ஏற்பாடு செய்வதாகவும், ஆனால் அவன் யோக்கியனாயும், அயோக்கியர்களின் சகவாசமில்லாமலும் இருந்து படிக்கும் வரையில்தான் குறித்த பணம் அனுப்பப்பெறுமென்றும், அவனது நடத்தையில் சிறிது களங்க மேற்பட்டால்கூட என் வக்கில் அதை அறிந்து பண மனுப்புவதை நிறுத்திவிடுவா ரென்றும் கூறி, குடும்பச் செலவிற்காக ரூ, 1,000-ம் கொடுத்து விட்டு வந்தேன். இந்திரா என்னைத் தந்தைபோல் பாவித்து நன்றிப் பெருக்கால் கண்ணீர் உகுத்து என் தயாளத்தைக் கொண்டாடினாள். அவள் கடைசியாக ஏதோ நினைத்து, "ஆம், நீங்கள் பேசும்பொழுது, உங்கள் குரலும், உங்கள் முக ஜாடையும்......" என்று என்னை ஆச்சரியத்துடன் உற்றுப்பார்க்க ஆரம்பித்ததும், நான் துரிதமாய் அச்சம்பாஷணையை மாற்றிவிட்டு, சிறுவன் சரத்சந்திரனுக்குப் புத்திமதி கூறிவிட்டு, விடை பெற்று வந்துவிட்டேன்.

அதன் பிறகு வருஷா வருஷம், குறித்தபடி சரத்சந்திரனுக்குப் பணம் அனுப்பப்பட்டு வந்தது. இன்றளவும் குழந்தை சரத்சந்திரன் கல்யாணபுரிக் கல்லூரியில் தன் உண்மைப் பெயருடன் ஒழுங்காகவே படித்து மெச்சக்கூடியவனாகவே யிருந்து வருகிறான். அவனுக்கு இப்பொழுது வயது பதின்மூன்றாகிவிட்டது. எனக்கு இப்பொழுது இருக்கும் தேக நிலையின் தன்மையை நோக்கச் சீக்கிரத்திலேயே இம் மண்ணுலக வாழ்வைத் துறந்துவிடுவேனென எண்ணுகிறேன். ஆகையால் நீ குழந்தை சரத்சந்திரன் இருபத்து நாலு வயது வரையில் ஒழுங்கினன் ஆகாமலிருந்தால் கட்டாயம் அவனுக்கு ஜமீனை ஒப்புவிப்பதுடன், புதையலையும் அறிவித்து, நான் செய்து கொடுத்த சத்தியத்தைப் பூர்த்தி செய்வதாக நீயும் உறுதி கொள்ள வேண்டும். சட்டத்தின் ரீதியாகவும் உனக்குப் பின் அக்குழந்தைதான் வார்சுதாரன்.

இக்கடிதம் கண்டவுடன் நீயும் உன் மனைவியும் புறப்பட்டு வரவும். இவ்விடம் சில காலம் வந்திருந்து கங்கையில் நீராடி வந்தால் உன் மனைவியின் தேக நிலைக்கும் நலமுண்டாவதுடன், நீங்கள் என் அருகில் இருப்பது பற்றி என் மனத்திற்கு ஒரு திருப்தியும் ஏற்படும். ஆகவே கட்டாயம் புறப்பட்டு வரவும்.

இப்படிக்கு
உனதன்புள்ள பெரிய தந்தை
**தேவதாஸ்.**

ஸ்ரீவத்ஸா :—இப்பொழுது, மர்மமாக இருந்த அநேக விஷயங்கள் புரிந்துவிட்டன. அதாவது, நிரஞ்சனது உண்மைப் பெயர் சரத்சந்திரனானபடியால், நாங்கள் கல்யாணபுரிக் கல்லூரியில் நிரஞ்சனைப் பற்றி விசாரிக்க, அவனைப்பற்றி ஒன்றுமே அறிந்துகொள்ள முடியவில்லை. இரண்டாவது, சம்புதாஸ் அவர்களின் மருமக்களான ஜகன்மோகனதாஸும் பகவன்தாஸும் எதற்காக அவ்வளவு தீவிரமாய் நிரஞ்சன் என்ற சரத்சந்திரனைக் கொல்ல முயன்றனர் என்ற காரணமும் விளங்கிவிட்டது. நிரஞ்சனைத் தொலைத்துவிட்டால் பிறகு ஜமீன் தம் வசம் சேரும் என்று ஜகன்மோகனதாஸ் எண்ணினார். அவரது எண்ணங்களை மிகத் தந்திரமாய் அறிந்துகொண்ட பகவன்தாஸும் சுயநலத்தின் பொருட்டு மிக்க முயற்சி கொண்டார். ஆம், யாவும் வரிசைக் கிரமத்தில் சாமர்த்தியமாக நடந்து வந்திருப்பது இப்பொழுது பளிங்குபோல் புலப்பட்டாலும், முதலில் சிக்கலாகத்தான் தோன்றியது.

வக்கீல் :—முதலில் சிக்கலாக இருந்ததாய்க் கூறினாலும், தாங்கள் என்னவோ அச்சிக்குகளை விடுவித்து ஆச்சரியப்படும்படியான காரியங்களைச் சாதித்துவிட்டீர்கள். மேலும் யாவருக்கும் நிரஞ்சன் கொலைஞன் என்றே நினைக்கும்படியான சந்தர்ப்பங்கள் நேர்ந்திருக்க, தாங்கள் மட்டும் நிரஞ்சனைப்பற்றிச் சந்தேகப்படாமல் கடைசி வரையில்......

ஸ்ரீவத்ஸா:—ஆம், நான் நிரஞ்சனைப் பார்த்ததும் இவர் உயர்குலத்தில் பிறந்தவராகவும், உயர்ந்த குணமுடையவராகவும்தான் இருக்கவேண்டுமென்றும், அப்படி இல்லையானால் இவர் உயர்நிலைக்கு வரக்கூடிய விஷயம் ஒன்று இருக்க வேண்டுமென்றும், அவரைப் பற்றிய ரகஸ்யத்தைக் கண்டுபிடித்துத் தீரவேண்டும் என்றும்

எண்ணினேன், கடவுளருளால் அவ்வெண்ணம் வீண் போகவில்லை

அமிர்தாவுக்குத் தன் காதலன் கொலையாளியல்ல வென்பதை அறிந்ததும் அவளது உள்ளம் அடைந்த சந்தோஷத்தை எவரும் வார்த்தைகளால் விளக்க முடியாது. தன் காதலன் குற்றமற்றவன் என்று உணர்ந்ததுடன் அவன் சந்திரபுரி ஜமீனுக்கும் வார்சுதாரன் என்பதை அறியவும், அவன் அத்தகைய பதவிக்கு மிக்க அருகதையானவன் என்பதை நினைத்து அவளுள்ளம் பூரித்தது. பிறகு தன் காதலனுக்கு வர இருந்த ஆபத்துகளையும், அவை ஆச்சரியகரமாய்த் தடுக்கப்பட்டு அவன் காப்பாற்றப்பட்டதையும், மறைந்திருந்த உயர் பிறவி வெளிப்பட்டதையும் நினைக்கவும், "ஆஹா, கடவுளின் லீலைதான் என்னே! மகா பயங்கரங்களை யெல்லாம் உண்டுபண்ணிப் பேதை மனிதர்களின் மனங்களைக் கலக்கித் தவிக்கச் செய்து, தான் அவ்விதம் மானிடர்களைக் கலக்கி வைத்ததற்காகக் கனவிலும் நினையாத விதமாய் நன்மைகளைச் சொரிந்து சந்தோஷத்தில் ஆழ்த்தும் கடவுளின் கருணையை நம்மால் புகழவும் முடியுமோ?—என நினைத்தாள். கண்களில் கண்ணீர் ததும்பி நின்றது.

வக்கில் படித்துக் கொண்டுவந்த கடிதத்தின் விஷயத்திலிருந்து தன்னைப் பற்றி அதுவரையில் மூடுமந்திரமாயிருந்த விஷயங்களைப் பூர்ணமாய்த் தெரிந்து கொண்ட நிரஞ்சனென்ற சரத்சந்திரன் தான் சந்திரபுரி ஜமீன் வாரிசுதாரன் என்பதையும், தன்னைச் சிறு வயதில் வந்து கண்டு தன் உள்ளத்தையும் தன் தாயின் உள்ளத்தையும் கவர்ந்த பெரியவர் தனது ஸாக்ஷாத் பெரிய தந்தைதான் என்பதையும் நினைக்க, அவனது நெஞ்சம் அன்புப் பெருக்கால் உருகி அவனது கண்கள் ஆனந்தக் கண்ணீர் சொரிந்தன. தனது பெரிய தந்தை தன் பிதாவிடம் கொண்டிருந்த சகோதர வாஞ்சையின் உயர்வை நினைத்து வியந்தான். அத்துடன், தனக்கு மகத்தான ப்ராக்கியத்தை அளித்துச் சென்ற பெரிய தந்தையின் அந்திய காலத்தில் தான் அவரது அருகில் இல்லையே என்று சென்ற காலத்தை நினைத்தும் வருத்தமுற்றது அவனது மனம்.

மேற்படி எண்ணங்களால் சரத்சந்திரன் மௌனத்தில் ஈடுபட்டிருக்க, அமிர்தாவும் வேறுவித சிந்தனையினால் ஆழ்ந்த மௌனத்தில் ஈடுபட்டிருந்தாள்.

## 32. தோற்றமெல்லாம் கனவுதானே?

"ஜகன்மோகனதாஸ், உண்மை வார்சுதாரன் ஜமீனை அடைந்தாலும் தான் புதையலை அடைந்து விட்டால் போதுமென எண்ணினார். ஆனால் சரத்சந்திரன் இசையாது போகவே அவனையே தீர்த்து விட எண்ணினார். ஜகன்மோகனதாஸின் எண்ணங்களை அறிந்திருந்த பகவன்தாஸும் அதே பேராசையினால் ஒரே அடியில் இரண்டு பக்ஷிகளையும் வீழ்த்திவிடும் யுக்தியுடன் மறைந்திருந்து பெரிய பக்ஷியான ஜகன்மோகனதாஸைச் சுட்டுக்கொன்றார். பிறகு சிறிய பக்ஷி தப்பி விடவும், அதையும் துரத்திப் பிடித்துக் கொலை செய்ய முழு முயற்சியும் செய்தார். ஆனால் ஜமீன் செய்த புண்ணியத்தாலும் கடவுள் செயலாலும், ஸ்ரீவத்ஸாவின் மூலம் சிறிய பக்ஷி உயிருடன் மீண்டது. இனிமேல் நாம் செய்ய வேண்டியது உண்மை வார்சுதாரனான நிரஞ்சனென்ற சரத்சந்திரனுக்கு ஜமீனை ஒப்புவித்து இவரையும் இவரது தாயையும் ஜமீனிலேயே வசிக்கச் செய்ய வேண்டியதுதான்" என்று வக்கீல் சொன்னார்.

ஸ்ரீவத்ஸா:—ஆம், நியாயம். ஆனால் இதில் ஒரு விஷயம் சந்தேகமாக இருக்கிறது. அதாவது, புதையல்-கடிதம் ஒன்றை நீங்களே சரத்சந்திரனிடம் ஏழு வருஷங்களுக்கு முன் கொடுத்தீர்கள். அதன் மற்றப் பாதிக் கடிதம் தங்களிடம் தானே இருக்கவேணும். அப்படியிருக்க அது ஜகன்மோகனதாஸிடம் எப்படிப் போயிற்று?

அது வரையில் வாய் திறவாமலிருந்த லீலாராம் இவரது கேள்விக்குப் பதிலளித்தார்:

"ஜமீன்தார் சம்புதாஸ் அவர்கள், மரணத்திற்குமுன் சரத்சந்திரனது விஷயங்களைச் சுருக்கமாய் என்னிடம் தெரிவித்து, ஜமீன் ரகஸ்ய விஷயத்தைச் சார்ந்த ஒரு குறிப்புக் கடிதத்தின் ஒரு பகுதி நிரஞ்சனென்ற சரத்சந்திரனிடம் சேர்க்க ஏற்பாடு செய்திருப்பதாகவும், அதன் மற்றொரு பகுதி ஜமீன் மாளிகையின் ரகஸ்ய அறையிலுள்ள இரும்புப் பெட்டியில் வைக்கப் பட்டிருக்கிறது என்றும் கூறினார். ஆனால் அக்கடிதம் புதையலைக் குறிப்பது என்று தெரியப்படுத்தவில்லை. அதன் பிறகு சரத்சந்திரன் ஜமீனை ஒப்புக்கொள்ளும் வரையில் நான்

இம் மாளிகையிலேயே யிருந்து ஜமீனுக்கும், மாளிகைக்கும் சிறு பழுதுகூட வராமல் கவனித்து வரவேண்டுமென்றும், சரத்சந்திரன் வந்தபிறகும் அவனிடம் அன்புடன் நடந்துகொள்வதுடன் உத்தம மந்திரிபோலிருந்து வரவேண்டுமென்றும், என்னிடம் வாக்குறுதி பெற்றுக்கொண்டார். அந்தச் சமயத்தில் மாளிகையில் பந்துக்கள் அனைவரும் வந்திருந்ததால், நாங்கள் தனியறையில்தான் மேற்படி விஷயம் குறித்துச் சம்பாஷித்துக்கொண் டிருந்தோம். பிறகு ஜமீன்தார் இறந்தபின் ரகஸ்ய இடத்தில் பத்திரப்படுத்தி வைக்கப்பட்டிருந்த குறிப்புக் கடிதம் காணமல் போய்விட்டது. 'அது ரகஸ்யமாய்ச் சென்றது ஜகன்மோகனதாஸிடம்தான்!' என்று இன்றுதான் தெரியவந்தது.

வக்கீல் :—(சற்றுப் புன்னகையுடன்) அவ்வளவு ரகஸ்யமாய்த் தனியறையில் பேசி யிருந்தும் எப்படியோ ஜகன்மோகனதாஸ், சம்புதாஸ் அவர்கள் கூறிய விஷயங்களை அறிந்துகொண்டு தந்திரமாய்க் குறிப்புக் கடிதத்தை எடுத்துச் சென்று சாமர்த்தியத்துடன் வேலை செய்தார்; செய்தும் அவரது எண்ணம் நிறைவேறவில்லை. கடைசியில் அவ்விரு கடிதங்களும் சேரவேண்டியவரிடம் சேர்ந்துவிட்டன. ஆனால் அவ்விரு கடிதங்களின் புதிரையும் விடுவிப்பது சிரமமான விஷயமாகவே யிருக்குமாதலால், அதையும் புதிய ஜமீன்தாரிடம் அறிவித்துவிட்டால் மிக்க நலமாக இருக்கும்.

ஸ்ரீவத்ஸா தமது ஜேர்பியிலிருந்து, அமிர்தாவினிடமிருந்து அகப்பட்ட குறிப்புக் கடிதத்தையும், அக் குறிப்பிற்குத் தாம் விடை குறித்திருந்த கடிதத்தையும் எடுத்துச் சரத்சந்திரனிடம் கொடுத்தார்.

ஸ்ரீவத்ஸா மௌனமாய் மறுபடியும் இரண்டு கடிதங்களை எடுத்துச் சரத்சந்திரனிடம் கொடுத்தார். அவ்விரண்டு கடிதங்களில் ஒன்று பகவன்தாஸிடமிருந்து கைப்பற்றிய குறிப்புக் கடிதம்; மற்றொன்று அதற்கு விடை குறித்தது.

முன்பு, ஸ்ரீவத்ஸா இரண்டாவது குறிப்புக் கடிதத்திற்கு விடை குறித்து வைத்தார் என்பது தெரியும். ஆனால், என்ன குறித்தார் என்பது தெரியாது. ஆகவே இரண்டாவது குறிப்புக் கடிதத்தின் விஷயத்தை அறியலாம். அது கீழ்க்கண்டபடி யிருந்தது :

8 = 1 ×× 8 = 13 ×× 8 = 3 ×× 14 = 3 ××
த = த ×× த = த் ×× த = தி ×× ல = லி ××
13 = 5 ×× 9 = 13 ×× 8 = 5 ×× 10 = 1 ×× 8 = 3 ×
ர = ரு ×× ந = ந் ×× த = து ×× ப = ப ×× த = தி ×

.................................................................................................

.................................................................................................

.................................................................................................

8 = 2 ××× 4 = 5
த = தா ××× ச = சு
15 = 1 ××× 13 = 5 ××× 6 = 1 ××× 11 = 13
வ = வ ××× ர = ரு ××× ட = ட ××× ம = ம்
11 = 2 ××× 8 = 1 ××× 11 = 13
ம = மா ××× த = த ××× ம = ம்
8 = 8 ××× 8 = 3, 17,
த = தே ××× த = தி. 17,

மேற்படி முதல் இரண்டாவது ஆகிய இரண்டு குறிப்புக் கடிதங்களையும் சரத்சந்திரன் படித்ததும், ஸ்ரீவத்ஸா மூன்றும் முறையாக மற்ருெரு கடிதத்தை எடுத்துச் சரத்சந்திரனிடம் கொடுத்தார்.

அக்கடிதத்தின் மேல் வரிசையில் “மர்மக் கடிதங்களின் முழு விவரம்” என்று குறிக்கப்பட்டிருந்தது. அதன் கீழ்:

பிலவ-ஸூ, மாசி-மீ 17-உ

பூசை அறையில் இரதத்திலிருந்து பதினலடி தள்ளு, பத்தடி தோண்டு; ஐந்தடி சதுர அறையில் முப்பது லகாரத்திற்குப் பொன், வெள்ளி, ரத்தினமும் காண்பாய். இவை எனது பாட்டனரால் புதைக்கப் பட்டவை. ஆனல் இவற்றை ஜமீன் வருவாயில் குறைந்துபோனலொழிய எடுக்கக்கூடாது. அதுவரையில் வம்சத்து வார்சுதாரன் இதை அறிந்து மனத்தில் வைத்திருக்க வேண்டும். குறிப்பு மீறி அப்பொருளை எடுத்துத் துர்விநியோகத்திற்கு உபயோகிக்கக் கூடாது. இது பாட்டனரின் கட்டளையும் எனது கட்டளையும்.

இப்படிக்குச்
சந்திரபுரி ஜமீன்தார்
சம்புதாஸ்

என்று எழுதப்பட்டிருந்ததை மனத்திற்குள் படித்துக் கொண்ட பின் சரத்சந்திரன் புன்னகையுடன் அக்கடிதங்களை யெல்லாம் ஸ்ரீவத்ஸாவிடமே திருப்பிக் கொடுத்து, "தற்சமயம் தாங்களே இவைகளைப் பத்திரமாய் வைத்திருப்பது நலம்" என்று கூறினான்.

மேற்படி கடிதங்களை யெல்லாம் சரத்சந்திரன் பார்வை யிட்டுக்கொண்டிருக்கும் சமயம் அமிர்தாவின் உள்ளம் பெரும் போரில் ஈடுபட்டிருந்தது. நிரஞ்சனுக்கு அவனது உயர் பிறப்பு வெளியானதையும், உயர் பதவிக்கு அவன் வரப்போவதையும் நினைத்துப் பரம சந்தோஷத்தையும் நிம்மதியையும் அடைந்தாலும், மறு க்ஷணமே, பெரும்பதவிக்கு வந்திருக்கும் நிரஞ்சன் இனிமேல் அநாதையும் ஏழையுமான தன்னை மறந்துவிடக் கூடுமென்று எண்ணினாள். தன்னை அவன் தன் பெருங்குணத்தால் லக்ஷியம் பண்ணினாலும் ஜமீன்தாரான அவன் ஏழையும் அநாதையுமான தன்னிடம் அன்பு கொண்டிருப்பதைப் பற்றி ஜமீனைச் சேர்ந்த மற்றவர்கள் அங்கீகரிப்பார்களா ?—என்ற எண்ணமும் தோன்றியது. எப்படி யிருந்தாலும் தன் பிரியனான நிரஞ்சனுக்குத் தன்னால் துளி இழிவுகூட நேரத் தான் காரணமாக இருக்கக் கூடாதென்று தீர்மானித்தாள். ஏதோ தோற்றம் கனவுபோலானாலும், தான் தன் ஒரே அருமைத் தங்கையை மட்டும் ஒரு நல்ல புருஷனுக்கு விவாகம் செய்து வைத்துவிட்டுக் கடவுளைத் தியானித்தபடி தன் காலத்தைக் கன்னியாகவே கழித்துவிட வேண்டும் என்பது போன்ற பலவித எண்ணங்களால் நெஞ்சம் கலங்கினாள்.

ரமேசமும் அவரது மனைவியும் 'இப்படியும் கதை போன்ற விஷயமுண்டா ?' என்ற ஆச்சரியத்தில் மூழ்கி, கொலை புரியவும் துணிந்த பகவன்தாஸையும் பிரகாசத்தையும் கண்களால் பார்க்கவும் கூசினர். பிறகு அவர்களது உள்ளம், 'இனி நமது ஜமீன்தாராக இருக்கப் போகிறவர் சரத்சந்திரர் அல்லவா ?' என்று ஒரு பெருமையையும் கொண்டது. சாந்த ஸ்வரூபிணியாய்ப் பல பல எண்ணங்களில் ஈடுபட்டு ஸ்வர்ணப் பதுமைபோல் அமர்ந்திருந்த அமிர்தாவின் அழகையும், சரத்சந்திரனின் வசிகரமான தேஜஸையும் மாறி மாறிப் பார்த்து, 'என்ன அழகு ! என்ன வசிகரம் !' என்று வியந்தனர்.

அதுவரையில் ஒவ்வொருவர் உள்ளத்தையும் அறிபவர்போல் ஒவ்வொருவராகப் பார்த்துக்கொண்டு வந்த

ஸ்ரீவத்ஸா, தனது ஜோபியிலிருந்து ஒரு கடிதத்தைத் தேடி எடுத்துப் பிரித்துக் கையில் வைத்துக்கொண்டு பகவான்தாஸிடம் காட்டினர்.

பகவன்தாஸ் அதைப் பார்த்ததும், 'உஹூம்! இது கூட உன்னிடம் சிக்கிக்கொண்டதா?' என்பதுபோல் தலையை மேலுங் கீழுமாய் அசைத்துக் கொண்டார்.

ஸ்ரீவத்ஸா :—இதுவரையில் சரத்சந்திரரின் விஷயங்கள் யாவும் ஒரு வழியில் சுபமாக முடிந்து ஐமீனும் வார்சுதாரரை அங்கிகரித்துக் கொண்டது. நிற்க, இனிமேல் புதிய ஐமீன்தாரை அவர் ஐமீன்தாராக வரப் போகிறவர் என்ற விஷயம் தெரியாம லிருக்கையில் அவரது க்ஷேமத்திற்காக, தான் பெண் என்பதை நினைத்துக்கூடப் பயப்படாமல், அவரைக் காரில் வைத்து நூற்றுக்கணக்கான மைல்கள் கை சளையாமல் ஓட்டி வந்து, தன் உயிரையும் லக்ஷ்யம் செய்யாமல் சரத்சந்திரரின் உயிரைக் காப்பாற்றப் பாடுபட்ட நமது அமிர்தாவைப் பற்றிச் சில விஷயங்களை உங்களுக்குத் தெரியப்படுத்தப் போகிறேன்.

லீலாராம் :—என்ன? அவளைப்பற்றிக் கூட மர்ம விஷயங்கள் உங்களிடம் சிக்கி யிருக்கின்றனவா?

சுப்ரதாஸ் :—இந்தக் குழந்தைதான் கொலை செய்யப்பட்ட ஜகன் மோகனதாஸ் அவர்களின் மருமகள் என்று சொன்னீர்களே?

வக்கீல் :—(லேசாய்ச் சிரித்த வண்ணம்) இருக்கலாம். இருந்தாலும், இந்தத் துப்பறிபவர்களுக்கு 'எந்தப் புற்றில் எந்தப் பாம்பு பதுங்கி யிருக்கிறது?' என்று ஆராயும் சுபாவந்தானே?—வக்கீல்கள் புகுந்து புகுந்து சட்டத்தை ஆராய்வதுபோலே! ஆகையால் ஏதாவது விஷயம் அகப்பட்டிருக்கும்!

## 33. பட்ட மரமும் துளிர்த்தது

ஸ்ரீவத்ஸா :—புற்றென்று காணப்படின் அதில் வசிக்கும் ஒன்றோ, வசித்த ஒன்றோ, இருந்திருப்பது உண்மை. அதுபோல் என் அறிவிற்குப் புலப்பட்ட ஒரு சந்தேகத்தின் மூலமாய்ப் பத்தொன்பது ஆண்டுகளாக மறைந்திருந்த ஓர் இரகசியத்தைக் கண்டு பிடித்தேன். அந்த விஷயத்தைத்தான் இப்பொழுது வெளியில் இழுத்து விடப்போகிறேன். மேலும் நான்

சொல்லப் போகும் விஷயம் மிஸ்டர் சுப்ரதாஸுக்கு மிகவும் முக்கியமானது. அத்துடன் அவரும் என் இரண்டொரு கேள்விகளுக்கு உண்மையான பதிலை அளித்தால், நான் சிக்கலைச் சுலபமாக விளக்கக் கூடும்.

சுப்ரதாஸ்:—முக்கியமான விஷயமா? எனக்குத் தெரிந்த விஷயமாக இருந்தால், நான் கட்டாயம் பதிலளிக்கிறேன்.

ஸ்ரீவத்ஸா:—இருபது வருஷங்களுக்கு முன் நீங்கள் இதே சந்திரபுரியில் வசித்ததுண்டா?

சுப்ரதாஸ்:—ஆம், பதினெட்டு வருஷங்களுக்கு முன் இதே சந்திரபுரியில்தான் வசித்து வந்தோம். பிறகு ஏதோ மனக் கஷ்டத்தால் இவ்வூரை விட்டுப் பத்து வருஷ காலம் பல ஊர்களில் வசித்து, மறுபடியும் இதே ஊருக்கு வந்து அமிர்த குடீரத்தில் வசிக்கிறோம்.

ஸ்ரீவத்ஸா:—அமிர்த குடீரம் ஜமீனுக்குச் சொந்தம் அல்லவா?

சுப்ரதாஸ்:—ஆம், ஜமீனுக்குச் சொந்தமான அந்த நிலத்தில் ஜமீன் பணத்திலிருந்தே எனது மேற்பார்வையில் கட்டப்பட்டது: நான்தான் அமிர்த குடீரம் என்ற பெயரை அம்மாளிகைக்குப் பொறித்தேன். அம்மாளிகைக்கு மாதா மாதம் வாடகை நூற்றைம்பது ரூபாய் கொடுத்து நானே குடியிருந்து வருகிறேன்.

ஸ்ரீவத்ஸா:—பதினெட்டு வருஷங்களுக்கு முன் இவ்விடம் நீங்கள் வசித்து வருகையில் ஜமீன் மாளிகையிலுள்ளவர்களுக்கு அறிமுகமான வாலிப வயதுள்ள ஒருவர் உங்கள் வீட்டுக்குப் போக்கு வரத்து வைத்துக் கொண்டிருந்தாரல்லவா?

சுப்ரதாஸ்:—(சற்றுத் திடுக்கிட்டு) ஆம், சாதாரண நட்பின்மேல் வந்து போய்க் கொண்டிருந்ததுண்டு.

ஸ்ரீவத்ஸா:—அவர் எந்த ஊர் மனிதரென்று தெரியுமா?

சுப்ரதாஸ்:—சிந்து பட்டணத்தானென்று சொன்னதாக நினைவு.

ஸ்ரீவத்ஸா:—அவ்வாலிபருடன் வேறு யாராவது உங்களிருப்பிடத்திற்குப் போக்கு வரத்து வைத்துக் கொண்டிருந்ததுண்டா?

சுப்ரதாஸ்:—அடிக்கடி வரத்துப் போக்குள்ளவர் அதிகம் இல்லை. ஜமீன்தாரின் மூத்த மருமகனை

ஜகன்மோகனதாஸ் சில சமயம் வந்து போனதுண்டு. அவருக்கு என்னிடம் மிக்க பிரியம்.

ஸ்ரீவத்ஸா :—அந்தச் சிந்து பட்டணத்து வாலிபன் பெயர் என்னவென்று தெரியுமா ?

சுப்ரதாஸ் :—அவ்வாலிபன் பெயர் லக்ஷ்மிசரன் என்பது என் நினைவு.

ஸ்ரீவத்ஸா :—அந்த வாலிபன் போக்கு வரத்து வைத்துக்கொண்டிருந்த காலத்தில்தானே உங்கள் பெண் கடலில் விழுந்து மரித்துப் போனது ?

சுப்ரதாஸும் அவரது மனைவியும் திடுக்கிட்டு, ஸ்ரீவத்ஸாவின் கேள்வியில் விகற்பம் இருப்பதாக உணர்ந்து லஜ்ஜையால் குன்றிப்போயினர்.

சுப்ரதாஸ் :—(தாழ்மையுடன்) மிஸ்டர் ! எனது குமாரி கடலில் தற்செயலாய் விழுந்து மரித்தது உண்மைதான். ஆனால் தங்கள் கேள்வி விகற்ப முறையில் செல்வதால் அவைகளுக்கெல்லாம் என்னால் பதிலளிக்க முடியாதது பற்றி மன்னிக்க வேணும்.

ஸ்ரீவத்ஸா :—எப்பொழுதும் வக்கிலிடமும் போலிஸாரிடமும் வைத்தியரிடமும் உண்மையை உரைக்க வேணும். இல்லாவிட்டால் ஒன்றுக்கொன்று பாதகமாய் முடிந்துவிடும் என்பது தாங்கள் அறியாத விஷயமன்று. நாம் இப்பொழுது மிகவும் முக்கியமான விஷயத்தை ஆராயப் புகுந்திருக்கிறோம். எனக்கு நுணுக்கமாய் அகப்பட்ட ஒரேஒரு ருசுவிலிருந்து மற்றவைகளைக் கண்டு பிடிக்கவேண்டி யிருப்பதால், நீங்கள் நடந்த விஷயங்களை உள்ளபடி கூறினால் எனக்குச் சற்றுச் சுலபமாகும்.

சுப்ரதாஸ்:—அமிர்தாவின் விஷயம் யாதோ சொல்லப் போவதாய்ச் சொல்லி, என் குடும்பக் கந்தலான விஷயங்களைக் கிளறுவதேன் ?

ஸ்ரீவத்ஸா :—என்ன செய்வது ? அமிர்தாவின் பழைய கந்தலான விஷயங்களைக் கிளற, அந்தக் கந்தலின் முனை உங்கள் குடும்பக் கந்தையில் இருப்பதை அறிந்தேன். ஆகவே உங்கள் குடும்பக் கந்தைகளைக் கிளறி இந்தக் கந்தையின் முனையைக் கண்டுபிடிக்க வேண்டியவனாகிறேன்.

சுப்ரதாஸ் :—நீர் புதிர் போடுவது எனக்குப் புரியவில்லை. இருந்தாலும் உமக்கு வருத்தம் வேண்டாம். ஆனால் நீர் நினைக்கிறபடி அந்த லக்ஷ்மிசரன் இங்கு இருக்

கையில் என் மகள் கடலில் விழுந்து மரணமடைய வில்லை. அவன் இவ்வூரை விட்டுச் சென்று இரண்டு மாதங்களானபின் நாங்கள் விமலபுரி சென்றோம். அவ் விடத்தில்தான் சந்திர கிரகணத்தன்று நாங்கள் யாவரும் கடலில் நீராடுகையில் அவள் கடலுக்கு இரை யானாள்.

ஸ்ரீவத்ஸா :—தங்கள் மனைவியின் பெயர்......?

சுப்ரதாஸின் மனைவி :—என் பெயர் அமிர்தாபாய்.

ஸ்ரீவத்ஸா :—தங்கள் பெயரும் அமிர்தாபாய், அதே மாதிரி தங்கள் பக்கத்தில் அமர்ந்திருக்கும் ரமணியின் பெயரும் அமிர்தாதான்! அத்துடன் இந்த அம்மணி இருபது வருஷங்களுக்குமுன் இறந்துபோன உங்கள் பெண் சுகுணாவைப் போன்ற அதே சாயலுடன் இருப் பது, உங்கள் சுகுணாவை க்ஷணத்திற்கு க்ஷணம் நினைவு படுத்துகிறதல்லவா?

சுப்ரதாஸின் மனைவி:—ஆம், உண்மையே. நீங்கள் கேட் பதின் உள்நோக்கம் எனக்குப் புரிந்தாலும், அது சாத்திய மில்லை; சாத்தியமாகக்கூடிய விஷயமுமல்ல! அபூர்வமாய் ஒருவனைப்போல் சம்பந்தப்படாத மற்றொருவன் இருப்ப தாய்க் கூறுவதில்லையா? அதைப்போல் தற்செயலாய் இக்குழந்தையின் பெயர் என்பெயராகவும், இவளது ரூபம் எங்கள் சுகுணாவைப் போலவும் அமைந்திருக்கின்றன என்று நாம் எண்ணவேண்டியதுதான்! ஏனெனில் எங்கள் சுகுணா உயிருடனிருந்து காணாமல் போயிருந்தா லாவது இக்குழந்தையைப் பற்றிச் சந்தேகப் படலாம். அப்படித்தான் இல்லையே. எங்கள் சுகுணா இறந்தது உண்மை. நாங்கள் பிரேதச் சடங்குகளை நடத்தியதும் உண்மை. ஆகையால் நாம் வீண் எண்ணத்திற்கெல்லாம் இடங்கொடுப்பது பைத்தியக்காரத்தனம்தான்!

சுப்ரதாஸ் :—ஆம், உண்மை. வீண் மூடத்தனமான எண்ணங்களுக்கு நாம் இடங்கொடுக்கக்கூடாது.

ஸ்ரீவத்ஸா :—தங்கள் பெண் இருபது வருஷங்களுக்கு முன் கடலில் விழுந்து இறந்தது உண்மையானால், இந்த எண்ணங்களும் மூடத்தனமானவைதான்! ஆனால்...... கடலில் விழுந்து இறந்ததாய் நீங்கள் கண்டெடுத்த பிணம் உங்கள் பெண் சுகுணாவே அல்லவென்று நான் கூறினால்?

சுப்ரதாஸ் :—நல்ல வேடிக்கைதான். பிரேதத்தைக் கண்டெடுத்து அடையாளம் தெரிந்தபின்தான் பிரேத

அடக்கம் செய்திருக்க, தாங்கள் இல்லை என்று கூறினால் நீங்கள் வேடிக்கை செய்கிறீர்க ளென்று நினையாமல் வேறெப்படி நினைக்கிறது ?

ஸ்ரீவத்ஸா :—நான் வேடிக்கைக்காகக் கூறவில்லை, உண்மையான விஷயத்தையே கூறுகிறேன். அதாவது, அப்பொழுது கடலிலிருந்து ஒதுக்கப்பட்டதாய்க் கண் டெடுத்த பிரேதம் உங்கள் குமாரியினுடையதல்ல என்பதுதான் என் வாதம்.

சுப்ரதாஸின் மனைவி :—உங்கள் வாதம் எப்படி உண்மையாகும் ? நாங்கள் அப்பிரேதத்தைக் கண்ட சமயம் பிரேதத்தின் முகம் தண்ணீரில் ஊறி விங்கிக் கறுத்திருந்ததால் சரியானபடி அடையாளம் தெரிய வில்லையே தவிர, மற்றப்படி உயரம், கட்டி யிருந்த புடவை, ரவிக்கை, நகை யாவும் சிறிதும் வித்தியாச மின்றி எங்கள் சுகுணாவினுடையவைதான் என்று கண்டு தானே தீர்மானித்தோம் ! தவிரவும் சுகுணா அப்படியே கடலுக்கு இரையாகாமலிருந்தால் திரும்பி எங்களை வந்தடைந்திருக்க மாட்டாளா ?

ஸ்ரீவத்ஸா :—அம்மணி ! சற்று இருங்கள். நான் இன்னும் கொஞ்சம் விவரித்துக் கூறுகிறேன். உங்கள் பெண் பிழைத்திருந்தால் உங்களை வந்தடைந்திருக்க மாட்டாளா என்று கேட்டீர்களல்லவா ? இது சரியான கேள்விதான். ஆனால் தங்கள் பெண்ணுக்குத் தங்களை வந்தடைய இஷ்டமில்லாதிருந்தால் ?

சுப்ரதாஸ் :—எங்களிடம் வந்திருக்க இஷ்டமில்லா மல் இருக்க முடியாது. அப்படியே இஷ்டமில்லாதிருந் தாலும் எங்களிடம் மிக்க அன்புகொண்ட அவள் அவளது பிரிவால் நாங்கள் எவ்வளவு துயரை அனு பவிப்போம் என்பதை அறியாமலிருந்திராள். ஆகவே அவளது க்ஷேமத்தை எங்களுக்கு அறிவிக்காமலிருந் திருக்க முடியாதே!

ஸ்ரீவத்ஸா :—ஆம், அவள் தங்களுக்குக் கடிதம் எழுதி யிருக்கலாம். ஆனால் அக்கடிதம் மற்றொருவரால் உங்களுக்குக் கிடைக்காதபடி செய்யப்பட்டிருக்கலா மல்லவா ?

சுப்ரதாஸ் :—என்ன ஐயர் ! நீங்கள் வரவரப் பெரிய பெரிய புதிர்கள் போடுகிறீர்களே ! எங்கள் பெண் அப்படியெல்லாம் செய்பவளல்ல. எங்களுக்கு விரோதி களும் ஒருவரும் இல்லை.

ஸ்ரீவத்ஸா :—உங்களுக்கு விரோதிகள் இல்லாம லிருக்கலாம். ஆனால் உங்கள் பெண்ணுடன் இருந்த மனிதர்களில் அத்தகைய விரோதிகள் இருந்திருக்கலா மல்லவா ?

சுப்ரதாஸ் :—(ஆச்சரியத்தோடு) அப்படியானால் நீங்கள் எங்கள் சுகுணா கடலில் விழுந்து மரிக்கவில்லை யென்று கூறுகிறீர்கள் ?

சுப்ரதாஸ் மனைவி :—நாங்கள் எங்கள் கண்களால் சுகுணாவின் பிரேதம்தான் எனக் கண்ட அடையாள மெல்லாம் பொய்யா ?

ஸ்ரீவத்ஸா :—ஆம், அப்படித்தான் நேர்ந்திருக்க வேணும். முதல் விஷயம், சுகுணா கடலில் உங்களுடன் ஸ்நானத்திற்காக இறங்கி யிருக்கவேணும். பிறகு சற்று நேரத்தில் கரைக்கு வந்திருக்க வேணும். நீங்களிருவரும் அவளைச் சற்றுநேரம் கவனியாமலிருந்து ஸ்நானம் செய் கையில் அவளை முன் ஏற்பாட்டுடன் வந்திருந்த ஒருவர் அழைத்துச் சென்றிருக்கவேணும் என்று எண்ணு கிறேன். சில தினங்கள் பொறுத்துக் கடலிலிருந்து ஒதுக்கப்பட்டது ஒரு பிரேதம். சுகுணா வயதுள்ள, இறந்துபோன, ஒரு பெண்ணுக்குத்தான் சுகுணாவின் ஆபரணங்களையும் அணிவித்துக் கடற்கரையில் அப் படிப் போட்டுவிட்டனர். அவர்கள் எதிர்பார்த்தபடியே நீங்களும் அப்பிரேதம் சுகுணாவினுடையதுதான் என நம்பிவிட்டீர்கள். ஆகவே அவர்கள் சுகுணாவுடன் தப்பிச் செல்லச் சுலபமாகிவிட்டது என்று என் ஊகத்தால் சொல்லுவதற்கு எனக்கு அகப்பட்ட ஒரே வழிகாட்டி யான இக்கடிதத்தைப் படிக்கிறேன், கேளுங்கள்:

கிருஷ்ணபுரம்,
ஆனி-மூ 32-உ.

எனது பிரிய நண்பர் ஜகன்மோகனதாஸுக்கு,

க்ஷேமம். உங்கள் கடிதம் கிடைத்தது. தாங்கள் எவ்வளவோ சிரத்தை எடுத்துக்கொண்டும், அவர்களது இருப்பிடம் தெரியாது போனதுபற்றி மிக்க வருத்தமாக இருக்கிறது. தாங்கள் கூறுவதுபோல் அதைப்பற்றி எனக்கு அதிகம் கவலை யில்லை. ஆனால் என் மனைவி வாய்விட்டுக் கூறாவிட்டாலும் பெற்றோர்களைப் பற்றிக் கவலைப் படுவது இயல்பல்லவா ?

அந்தச் சந்திர கிரகணத்தன்று தங்களது எவ்வளவோ சாமர்த்தியமான முன் ஏற்பாட்டின்மேல் ரகஸ்யமாய் நான் அவளை விமலபுரியிலிருந்து அழைத்து வந்து மணஞ் செய்துகொண்டாலும், அவளது தாய் தந்தையரிடம் நான் வஞ்சகமாய் நடந்து கொண்டதாகத்தான் ஆகிறது என்று இப்பொழுது சில சமயம் என் மனம் சஞ்சலப்படுகிறது. ஆனால் தாங்கள் சொல்வதுபோல் சென்றதை நினைத்து வருந்துவது சரியல்ல. மேலும், அவ்விதம் செய்திராவிட்டால் நான் அவளை அடைந்திருக்கவும் முடியாதுதான். நானும் தற்கொலை செய்து கொண்டு இறந்திருப்பேன். இப்பொழுது என் மனைவியின் பெற்றோரைப் பார்க்க முடியாமல் செய்துகொண்டோமே என்கிற ஒரு விஷயத்தைத் தவிர மற்றப்படி நாங்கள் சந்தோஷமாக இருந்து வருகிறோம்.

நிற்க. தற்சமயம் என் மனைவி பிரசவித்திருப்பதால் பணமுடை அதிகமாக இருக்கிறது. தாங்கள் இந்தச் சமயம் உடனே இருநூறு ரூபாய் அனுப்பினால் மிக்க உதவியாக இருக்கும். இந்த இருநூற்றையும் நான் தங்களிடம் கொடுத்திருக்கும் ரூ. 20,000-த்தில் கழித்துக் கொண்டாலும் சரி.

நமது வியாபார விஷயம் எதிர்பார்த்தபடி லாபகரமாக இல்லை என்று எழுதி யிருந்தீர்கள். அதைப் பற்றிச் சற்று விவரமாக எழுதவும்.

என் மூத்த குழந்தைக்கு என் மனைவியின் தாயார் பெயரை வைத்திருப்பது தங்களுக்குத் தெரியும். இப்பொழுது பிறந்திருக்கும் பெண் குழந்தைக்கு என் மனைவியின் உண்மைப் பெயரான சுகுணா என்பதை ஒட்டி அருணா என்று பெயரிட உத்தேசித்திருக்கிறேன். அமிர்தா அடிக்கடி "மாமா எப்பொழுது வருவார்?" என்று எங்களை நச்சுப்படுத்துவதுடன், உங்களைக் காண வேணுமென்று மிக்க ஆவலுடன் இருக்கிறாள். மற்றப்படி தங்கள் அன்பான பதிலை எதிர்பார்க்கும்,

பிரிய நண்பன்,

லக்ஷ்மீசரன்.

சுப்ரதாஸ் மனைவி :—(விசனம் மேலிட்டு, மற்றவர்கள் இருப்பதையும் மறந்து) அட பாவி! ஆதியிலிருந்து அந்தம் வரையில் ஜகன்மோகனதாஸ்தான் எங்கள் குடியைக் கெடுத்தவனா? ஆஹா! இப்படியும் மோசம் போவா

ருண்டா? நினைத்துப் பார்க்கையில் அவ்விதம் நடந்திருக்கக்கூடு மென்றுதான் தோன்றுகிறது. ஐயோ! என் கண்மணி சுகுணா பிறகு என்னவானாள்? அவள் மகா பொறுமையுள்ளவள் ஆயிற்றே!

சுப்ரதாஸ்:—என் குழந்தை உயிருடனிருந்திருக்கையில் நான் மோசம்போய்விட்டேனே! அடாடா, எவ்வளவு மூடத்தனமாக நடந்து விட்டோம்! லக்ஷ்மீசரன் ஒரு தினம் சுகுணாவுடன் அவளது அறையில் பேசிக் கொண்டிருக்கையில் நான் திடீரென்று அங்கே செல்லவே அவர்களது நிலையைக் கண்டு சிறிது சந்தேகப்பட்டு, மறு தினத்திலிருந்து லக்ஷ்மீசரனை எங்கள் இருப்பிடத்திற்கு வரவேண்டாமென்று கண்டிப்பாய்க் கூறிவிட்டேன். அதன் பிறகு ஒரு தினம் ஜகன்மோகனதாஸ் பேச்சு வாக்கில் லக்ஷ்மீசரனுக்குச் சுகுணாவை விவாகஞ் செய்து வைத்தால் இரண்டு பேர் அழகுக்கும் மிக்க பொருத்தமாக இருக்குமென்று கூறினார். அதற்கு நான் லக்ஷ்மீசரன் வைஷ்ணவ மதத்தினன் என்றும், அவனைப்பற்றி அதிகம் தெரியாதபடியாலும் சுகுணாவை அவனுக்குக் கொடுக்க முடியாது என்றும், கண்டிப்பாய்க் கூறி விட்டேன். அதன் பிறகு எவ்விதப் பிரஸ்தாபமும் ஏற்படவில்லை. ஆகவே அதைப்பற்றியே நான் மறந்து விட்டேன். அது இவ்வளவு தூரம் செல்லுமென்று நாங்கள் கனவிலும் கருதவில்லையே!

ஸ்ரீவத்ஸா:—அதற்குமேல் நடந்தது அமிர்தா மூலமாகத் தெரிந்தது. அதாவது, அமிர்தாவுக்குப் பிறகு அருணா பிறந்த சமயம்தான் இந்தக் கடிதம் எழுதப்பட்டிருக்கிறது. அதற்குப் பின் திடீரென உங்கள் பெண் வியாதியுற்றுப் படுத்த படுக்கையாக, அச்சமயம் ஜகன்மோகனதாஸ் அவ்விடம் சென்றிருக்கிறார். அப்பொழுது லக்ஷ்மீசரனையும் உடம்பு ஏதோ அபாயகரமான வியாதி பிடித்திருக்கவேணும். குழந்தைகள் ஜகன்மோகனதாஸிடம் ஒப்படைக்கப்பட்டன. சுகுணா காலையில் இறந்துவிடச் சில மணி நேரம் பொறுத்துச் சுகுணாவின் கணவனும் இறந்து விட்டானாம். அன்று மாலையில் அச்சதிபதிகளைச் சேர்ந்தாற் போலவே மயானத்திற்கு எடுத்துச் சென்றனராம். பிறகு அக்குழந்தைகள் இருவரின் பொறுப்பையும் ஜகன்மோகனதாஸ் ஏற்றுக்கொண்டார். ஆனால் உலகத்தாருக்கு அக்குழந்தைகள் தம் சகோதரியின் குழந்தைகளென்றே தெரிவித்து விட்டார். குழந்தைகளும் தங்கள்

தாய் தந்தையர் இருக்கையிலேயே ஜகன்மோகன தாஸை அம்மான் முறையில் அழைக்கப் பழக்கப்பட்டிருந்தபடியால், அவரை உண்மை - அம்மானென்றே எண்ணி யிருந்தனர்.

சுப்ரதாஸின் மனைவியின் கண்களில் ஆனந்த பாஷ்பம் வழிந்தோடிற்று. "ஆ, எங்கள் வம்சம் துளிர்க்கக் கடவுள் கருணை கூர்ந்தாரே!............" என்று, பெற்ற பெண்ணின் முடிவை நினைத்துத் துக்கத்தோடு பேத்தி கிடைத்தது பற்றி ஆனந்தமும் ஒரே காலத்தில் உண்டாகிக் கண்களில் நீர் துளிக்க, "ஆ! எனது சொந்தப் பேத்தியாம்மா நீ? வா, என்கண்ணே! 'தாடை.ாவிட்டாலும் தன் சதை ஆடு'மென்று கூறுவார்கள்! அது பிரத்தியக்ஷமாகி விட்டதே; என் செல்வமே! அன்று முதல்முதல் உன்னைக் கண்டதுமே என் மனத்தில் உண்டான பாசமும், உன்னை உச்சி மோந்து முத்தமிட என் உள்ளம் தவித்த தவிப்பும், என் சுகுணாவைக் காண்பது போன்ற ஒரு ஆனந்த உணர்ச்சியும், எப்படி எப்படி எல்லாமோ தோன்ற..........." என்று வாக்கியத்தை முடிக்காமலே திகைத்திருந்தாள்.

அமிர்தாவோ சிறிதுநேரத்திற்கு முன்தான் அநாதை யென்றும் ஏழை யென்றும், தன்னை இனிமேல் சரத்சந்திரன் நினைத்துப் பார்க்கவும் அருகதை இல்லையென்றும் பற்பல விதமாய் மனத்தளர்ச்சி யடைந்திருந்தாள். இப்போது தான் ஜகன்மோகனதாஸின் சொந்த மருமகளல்லவென்று தெரிந்து கொண்டாள். தனக்குப் பாட்டன் பாட்டிகள் இருப்பதை அறியவும், எல்லாம் கனவோ நினைவோ என்று எண்ணினாள். ஒருவேளை ஸ்ரீவத்ஸா கூறுவதெல்லாம் உண்மைக்கு மாருக இருக்குமோ என்றும் ஒரு க்ஷணம் எண்ணினாள். ஆனால் மறுக்ஷணமே, ஜகன்மோகனதாஸுக்குத் தான் சொந்த மருமகளாக இருந்தால், தன்னைப் பிடிக்காது போனாலும் தனது தங்கைக்காவது அவரது ஆஸ்தியில் சற்று அதிகமாய் வைத்திருக்கலாமல்லவா? அப்படி யில்லாமல் அவர் நிர்த்தாக்ஷண்யமாய் நடந்து கொண்டிருக்கிறார். அவர் தனக்கும் தனது தங்கைக்கும் வைத்திருக்கும் அப்பதினாயிரம் ரூபாய்கூடத் தனது தந்தையால் கொடுக்கப்பட்ட இருபதினாயிரம் ரூபாயில் தங்களை இதுவரையில் காப்பாற்றியதற்குச் செலவு போக மீதி யுள்ள பதினாயிரம் தானே; அதில் தலைக்கு ஐயாயிரம் வைத்தாரோ—என்ற எண்ணமும் அவள் மனத்தில் தோன்றிற்று. அத்துடன்

ஜகன்மோகனதாஸ் இதுவரையில் நம்மிடம் ஏன் உண்மையைக் கூறவில்லை என்றும் நினைத்தாள். ஒருவேளை நம்மைப்பற்றிய உண்மைகளை யறிந்தால் நாம் அநாதை என்ற எண்ணத்துடன் துயருக்கு உள்ளாவோம் என்று தான் சொல்லாமல் இருந்திருக்கலாம் என்றும், அவளது உள்ளம் ஜகன்மோகனதாஸைப் பற்றி மேன்மையாக நினைத்தது. கடைசியில் கடவுள் தன் பிறவி கேவலமானதல்ல வென்று வெளிப்படுத்தியதுடன், அநாதையாக்காமல் பாட்டன் பாட்டிகளையும் கொடுத்து மேன்மையுறச் செய்ததையும் நினைக்க அவளுள்ளம் சந்தோஷத்தால் மலர்ச்சி பெற்றது. அத்துடன் தன் உயிரைக் காப்பாற்றி, எவ்வளவோ ஆழத்தில் மறைந்திருந்த உண்மைகளை யெல்லாம் கண்டுபிடித்து, தன்னையும் தன் அருமைத் தங்கையையும் உண்மையான உயர் நிலைக்குக் கொண்டு வந்து வைத்த ஸ்ரீவத்ஸாவை அவளுள்ளம் தெய்வம் போல் நினைத்து நன்றிப் பெருக்கால் கசிந்து உருகியது. மேன்மேலும் ஆச்சரியகரமான விஷயங்களைக் கேட்டபடியால் ஒரு வார்த்தைகூடப் பேசவும் முடியாதுபோகவே, மெல்லக் கண்களை விரித்து ஸ்ரீவத்ஸாவை ஒருமுறை பார்த்தாள். ஆஹா, அப்பார்வையில் தான் எவ்வளவு நன்றி! அதே சமயம் ஸ்ரீவத்ஸாவும் அவளைப் பார்த்தார்.

அவள் வாயால் எவ்வளவுதான் வெளியிட் டிருந்தாலும் அக்கண்களில் ஏற்பட்டிருந்த நன்றிப் பெருக்கில் பாதியளவுகூட வெளிப்பட்டிருக்க முடியாதென்பதை உணர்ந்த ஸ்ரீவத்ஸாவுக்குத் தாம் முதல்முதல் அவளைக் கண்டதும், அவளது கண்களைக் கண்டு களங்கமற்ற உள்ளத்தை அறிந்து, 'உன் இடுக்கண் களையாமல் நான் உறங்கேன்!' என்று சபதம் செய்து கொண்டதும் நினைவிற்கு வந்தன. இப்பொழுது சபதம் பூர்ண ஜயத்துடன் முடிந்ததை நினைத்து அவரது உள்ளம் மிக்க திருப்தியையும் சந்தோஷத்தையும் அடைந்தது.

அமிர்தா பூர்ண நன்றியறிவுடன் ஸ்ரீவத்ஸாவை நோக்கிய பின், தன் காதலன் பக்கம் திரும்பி நோக்கி விட்டுப் பிறகு உயர ஒரு க்ஷணம் பார்த்தாள்.

முதலில் ஸ்ரீவத்ஸாவைப் பார்த்து, சரத்சந்திரனைப் பார்த்ததானது, 'உம்மால்தான் நான் என் காதலரை அடையும்படியான பாக்கியம் ஏற்பட்டது! அதற்காக்

நான் கடவுளைப் பிரார்த்தனை செய்கிறேன்' என்பதுபோலிருந்தது.

மேற்படி நிலையில் அமிர்தா இருக்கையில்தான் அவளது பாட்டியார் அவளைக் கட்டியணைத்து ஆனந்தக் கண்ணீர் விட்டாள். அதேசமயம் சுப்ரதாஸுக்கும் பேத்தியை அடைந்த சந்தோஷத்தால் ஆனந்தம் பொங்கி வழிந்தாலும், மனத்தை அமைதிப்படுத்திக்கொண்டு தன் மனைவியின் செயலைப் பார்த்துகொண் டிருந்தார். எனினும் அவரது உள்ளத்தில் தனது புத்திரி உயிருடனிருக்கக் கொடுத்து வைக்கவில்லையே என்ற விசனம் க்ஷணகாலம் தோன்ருமலில்லை.

சுப்ரதாஸ் :—(தன் மனைவியைப் பார்த்து) நீ உன் சந்தோஷத்தையோ, விசனத்தையோ அதிகம் காட்டினுல், இதுவரையில் படாத பாடுபட்டு அல்லலுக்காளாகி உடம்பு உலர்ந்து பலவீனப்பட்டிருக்கும் குழந்தையின் மனம் தாங்காது. ஆகையால் அவளைப் பத்திரமாகக் கவனித்துக்கொள்ளவேணும். (அன்புடன் அமிர்தாவைப் பார்த்து) இப்படி வந்து உட்கார்ந்துகொள்ளம்மா!

அமிர்தா தன் பாட்டியாரின் அணைப்பிலிருந்து விடுபட்டுப் பதுமைபோல் பாட்டனுரின் பக்கத்திலே வந்தமர்ந்தாள்.

பிறகு தன் குமாரி சுகுணுவுக்கு மற்ருெரு பெண் பிறந்ததாய்க் கடிதத்தில் குறிப்பிட்டிருந்தது நினைவு வரவும், "ஆம், எங்களுக்கு மற்ருெரு பேத்திகூட இருப்பதாய்க் கடிதத்திலிருந்து தெரியவருகிறதே! அக் குழந்தை இப்பொழுது........." என்ருள் சுப்ரதாஸின் மனைவி.

ஸ்ரீவத்ஸா :—ஆம், அக் குழந்தை இன்று மாலைக்குள் டெபுடி கமிஷனருடன் இவ்விடம் வந்து சேருவாள்.

அமிர்தா :—(ஆவலுடன்) என்ன? என் அருணு இவ்விடம் இன்றே வருவாளா? நிச்சயமாகவா?

ஸ்ரீவத்ஸா :—ஆம், நான் தந்தி கொடுத்துவிட்டேன். கட்டாயமாய் உங்கள் தங்கையும், உயிருடனிருந்தால் சாந்தியும் வருவார்கள்.

# 34. வினை விதைத்தவர் வினை யறுப்பர்

அன்றைய தினம் பிற்பகல் ஒரு மணி சுமாருக்கே டெபுடியுடன் அருணாவும் சாந்தியும் வந்து சேர்ந்தனர். அவர்கள் யாவரும் சந்திரபுரி ஜமீன் மாளிகையில் வெளியான வர்த்தமானங்களைக் கேட்டு ஆச்சரியத்தில் மூழ்கினர் என்று சொல்வது மிகையாகாது. டெபுடி ஸ்ரீவத்ஸாவின் சாமர்த்தியத்தையும் அறிவையும் மெச்சிக் கொண்டாடினார். அருணா தனது அன்புமிக்க தமக்கை அமிர்தாவைக் கண்டதும், இருவரும் கட்டியணைந்து 'ஒருவரை ஒருவர் காணுவோமா?' என்று பட்ட துயரை யெல்லாம் கண்ணீர்மூலம் வெளியிட்டுக் கொண்டார்கள்.

ஜமீன் மாளிகையிலே ஒரு தனி அறைக்குள் சென்று தாங்கள் இளைப்பாறிக் கொண்டபின் ஒரு ஸோபாவில் இருவரும் அமர்ந்துகொண்டதும், அமிர்தா அதுவரையில் நடந்த விஷயங்களை யெல்லாம் விவரமாக எடுத்துரைத்தாள். பிரபு ஜகன்மோகனதாஸிடமிருந்து சிலவற்றைப் பகவன்தாஸ் கைப்பற்றி வந்திருந்ததில் சில நகைகளுமிருக்க, அவைகளை ஸ்ரீவத்ஸா கண்டுபிடித்துத் தங்கள் பாட்டி பாட்டனாரிடம் கொண்டுவந்து காட்டினாரென்றும், அந்நகைகளைக் கண்டதும் பாட்டியார் மிக்க விசனத்தை அடைந்து தன் பெண்ணுக்கு மிக்க ஆசையோடு பண்ணிப் போட்டவை யென்று, அந்நகைகளின் முகப்பின் உட்பக்கத்தில் தன் பெண்ணின் பெயர் பொறித்திருப்பதைக் காட்டினார் என்றும், அந்நகைகளில் ஒரு சிறிய முத்துமாலை மட்டும் தான் சிறு வயதில் போட்டுக்கொண்டிருந்தது நினைவிருக்கிறதென்றும், தான் சிறுவயது முதல் போட்டுக்கொண்டிருந்த அம்மாலை தனக்குப் பிடித்த மாலை என்று தாயார் அடிக்கடி கூறியது தனக்குக் கனவுபோல் நினைவு வருகிறதென்றும் அமிர்தா கூறினாள். அருணாவோ தன் தமக்கைக்கு நேர்ந்த பயங்கரமான ஆபத்துக்களை நினைத்துத் திகிற்பட்டாள். அந்த ஆபத்தான நிலையிலும் அமிர்தா பொறுமையுடனிருந்து சகித்தததை எண்ணி ஆச்சரியப்பட்டாள். அவளது பொறுமைக்கும் தூய உள்ளத்திற்கும் கடவுளே உவந்து உதவினார் என்று நினைத்தாள். அதனால்தான், நமது பிறவியின் மர்மம் வெளியானதுடன் பாட்டன் பாட்டிகளையும் பந்துக்களையும் கண்டு மகிழும்படியான பாக்கி

யங்களும் உண்டாயின என்று கருதினுள். சகோதரிகள் இப்படியெல்லாம் அளவளாவிக்கொண் டிருந்தனர். கடைசியில் அமிர்தா நம் அனைவருக்கும் உண்டான இவ்வளவு பாக்கியங்களுக்கும் ஸ்ரீவத்ஸாவே காரணம் என்று புகழ்ந்து, தான் அவரைத் தன் குலதெய்வம் போல் பாவிப்பதாகக் கூறி ஸ்ரீவத்ஸாவைப் பற்றிய ஓர் உயர்ந்த நோக்கத்தை அருணுவின் மனத்தில் ஊன்ற வைத்தாள்.

அச்சமயம் ஜமீன் மாளிகையில் மற்றவர்கள் இருந்த இடத்தில் சாந்தி சில விஷயங்களை வெளியிட்டாள். அதாவது கொலை நடந்த இரவு விருந்து சாப்பாடு முடிவடைந்தபிறகு, பின்கட்டில் இருந்த இவள் ஏதோ வேலையாய் உக்கிரான அறையின் தென்புறத்துச் சாளரத்தருகில் வந்த சமயம் ஒரு செடி வேகமாய் ஆலை பாய்ந்து சலசலக்க, தான் அத்திக்கை ஊன்றிக் கவனிக்க நேரிட்டதென்றும், அப்படிப் பார்த்த சமயம் யாரோ துரிதமாய் மேற்புறமாகச் செல்வது தெரிந்தது என்றும், அப்படிச் செல்வது பிரகாசமாகத்தான் இருக்குமென்று தான் நினைத்துக்கொண்டதாகவும், ஆனால் அதைப்பற்றி அச்சமயம் ஒன்றும் சிந்திக்கவில்லையென்றும், பிறகு பிரபு சுடப்பட்டுக் கிடந்ததைக் கண்ட சமயம் தன்மனத்தில் பிரகாசத்தைப்பற்றிப் பளிச்சென்று சந்தேகம் ஏற்பட்டதென்றும், ஆனால் கடைசியில் பிரபுவின் மரணம் தற்செயலாக ஏற்பட்ட மரணம் என்று சந்தேகிக்கப்பட்டு வெளியிலும் அப்படியே பிரஸ்தாபிக்கப்பட்டிருந்தபடியால், தானுக எதையும் சந்தேகத்தின் மேல் வெளியிடக் கூடாதென்று இருந்துவிட்டதாகவும் சொன்னுள். மேலும், "மறுதினம் நான் பிரகாசத்திடம் விருந்து முடிந்தபின், பிரபுவின் மரணத்திற்குச் சற்று முன்பாக அவன் தென்புறச் சுற்றுச் சுவரை ஒட்டி வைக்கப்பட்டிருக்கும் செடியின் அருகிலிருந்து துரிதமாய்ச் சென்றதைப் பார்த்ததாகக் கூறினேன். அதற்கு அவன் முதலில் திடுக்கிட்டுப் பிறகு சிரித்துவிட்டு, 'போடி போ, பைத்தியமே! சத்தியமாய் நான் அந்தப் பக்கம் வரவே யில்லை. ஒருவேளை உங்கள் பிரபுவின் புதிய விருந்தாளியான அந்தக் கில்லாடிப் பயல் நிரஞ்சனைத் தான் நீ பார்த்திருப்பாய். ஏனெனில் அவன்தான் அந்தப் பக்கமாய்ச் சென்றதைப் பகவன்தாஸ்கூடக் கண்டதாய்க் கூறினர்' என்று ஒரே சாதனையாய்ச் சாதித்து விட்டதுடன், 'நீ ஆள் மாருட்டமாய் என்னைப் பார்த்த

தாய்க் கூறி என் தலைக்குத் தீம்பு கொண்டுவந்து விடாதே! தெரியுமா?' என்று எச்சரிக்கையும் செய்தான்.

"என்னதான் இருந்தாலும் நிரஞ்சன் நல்ல உயரமானவன்; பிரகாசமோ குள்ளம். இந்த வித்தியாசம் கூடத் தெரியாதா? இருந்தாலும் 'நாம் கண்டதோ இரவு நேரத்தில் சில வினாடி காலம்; ஒருவேளை ஆள் மாறாட்டமாகத்தான் நினைத்தோமோ?' என்றுகூட எனக்குக் கலவரம் உண்டாகிவிட்டது. எனினும் எனக்கு அன்று இரவு சாளரத்தின் மூலமாய்க் கண்டது பிரகாசம் தான் என்ற எண்ணமும் மாறவில்லை. ஆனால் இறந்த மனிதனோ பிழைத்தெழப் போவதில்லை! பிரகாசத்திற்குப் பிரபுவைக் கொல்லக் காரணம் ஒன்றும் கிடையாது. ஆகவே அவனைப் பற்றிப் பிரஸ்தாபிப்பதில் பிரயோஜனமில்லை என்று எண்ணினேன். அத்துடன் பிரகாசம் எனக்கு அக்காள் மகன். இருந்தாலும் அவனது குணம் எனக்குப் பிடிப்பதில்லை. அவனுக்கும் எனக்கும் உறவு உண்டென்பது ஒருவருக்கும் தெரியாது. நான் அவனுக்கு உறவு என்று சொல்லிக்கொள்ளவும் விரும்பவில்லை. என்றால் அவனுக்கு எவ்விதக் கஷ்டம் நேரவும் விரும்பவில்லை. ஆகவே நான் ஒருவரிடமும் இதைப்பற்றிக் கூறவில்லை" என்றாள் சாந்தி.

ஸ்ரீவத்ஸா :—நீ அப்படி நினைத்தாய். ஆனால் உன் பிரகாசமும் பகவான்தாஸுமாய்ச் சேர்ந்து, நீ இருந்தால் கட்டாயம் எப்படியாவது விஷயம் வெளி வந்துவிடும் என்று பயந்து, உன்னைத் தொலைத்து விடுவதே நல்லது எனத் தீர்மானித்து, பகவன்தாஸ் தயாரித்து வைத்திருந்த ஒரு மருந்தை உனக்குத் தெரியாமல் குடிக்கும் பான வகையில் கலந்துவிடும்படி உத்தரவு செய்து விட்டனர். உனக்கு நற்கால மிருந்தபடியால் தப்பினாய்!

அதற்குப் பின், பகவன்தாஸ் அதுவரையில் நற்பெயருடன் வாழ்ந்துவந்த தங்களை அரெஸ்டு செய்து அவமானப்படுத்த வேண்டாமென்றும், தாங்கள் இருவரும் குடும்பம் இருக்கும் இடம் சென்று தங்கள் இல்லத்தில் பிராணனை விட நினைப்பதாகவும், அதற்கு டெபுடியும் ஸ்ரீவத்ஸாவும் சம்மதிக்க வேண்டுமென்றும் டெபுடியைப் பார்த்துக் கேட்டான்.

டெபுடி :—தாங்களிருவரும் ரகஸ்யமாய் யாதாயினும் விஷ மருந்துகள் அருந்திவிட்டீர்களோ?

பகவன்தாஸ் :—ஆம், ஆனால் அதற்கு மாற்று இல்லை!

அதைக் கேட்டதும் சரத்சந்திரனின் மனம் வேதனைப் பட்டது. ஸ்ரீவத்ஸாவிடம் அவ்விருவரையும் அவர்கள் குடும்பம் இருக்குமிடத்தில் கொண்டு விடும்படி தயவு செய்யவேண்டுமெனக் கேட்டுக்கொண்டான். அதன்படியே அவ்விருவரும் ஊருக்கு அனுப்பப்படலாமென்று ஸ்ரீவத்ஸாவும் டெபுடியும் எண்ணினர். ஆனால், உடனே பதிலளிக்காமல் ஏதோ யோசனையில் ஈடுபட்டதைக் கண்டதும், பிரகாசத்தின் மனம் ஆத்திரத்தால் மூர்க்காவேசம் கொள்ளவே, நிஜாரின் வலது ஜோபிக்குள் கை போட்டு எதையோ எடுக்க, அது பள பளவென மின்னும் ஒரு சிறிய குத்துவாளென்பது புலப்பட்டது. அதை ஸ்ரீவத்ஸாவின் நெஞ்சுக்கு நேரே குறிபார்த்து எறியும் போதே, தன் தங்கையுடன் அவ்விடம் வந்த அமிர்தா "ஹா" வென்று ஒரு க்ரீச்சுக் கத்தலுடன் ஆபத்தைத் தடுக்கப் பாய்ந்து சென்றாள். எனினும், குத்துவாள் ஸ்ரீவத்ஸாவின் புஜத்தில் சொக்காயைக் கிழித்துக் கொண்டு பாய்ந்துவிட்டது. அமிர்தா திகிலினால் அவ்விதம் கத்தாமலிருந்தால், ஸ்ரீவத்ஸாவும் இருந்த நிலையிலேயே அசையாது இருந்திருப்பார். அக்குத்து வாளும் குறி தவராது அவரது நெஞ்சில் நேரே பாய்ந்திருக்கும். அமிர்தா திகிலுடன் கத்தியதும், ஸ்ரீவத்ஸாவும் திடுக்கிட்டுத் திரும்பியதில் சற்று இடத்தை விட்டே நகர்ந்து விட்டார்! அதனால்தான் 'தலைக்கு வந்தது தலைப்பாகையுடன் போயிற்று!' என்பதுபோல் நெஞ்சில் பாய வந்தது புஜத்தில் பாய்ந்துவிட்டது.

இராகுலனும் கவனித்தான். உடனே புலிபோல் பிரகாசத்தின்மேல் பாயப் பிரகாசம் தப்பிப் பிரதான வாசல்புறம் நழுவினான். இராகுலன் தொடர்ந்து செல்ல, டெபுடியும் பிரகாசத்தைப் பிடிக்க இராகுலனுடன் ஓடினார். போலிஸார் தடுக்கப் பிரகாசம் ஒரு ஜவானை எட்டி உதைத்துவிட்டு ஓட முயலும்போது, பக்கத்திலிருந்த வேறொரு ஜவான் கோபங்கொண்டு தன் கையிலிருந்த துப்பாக்கியைத் திருப்பிப் பிடித்து மண்டையில் ஓங்கி அடித்தான். பிரகாசம் வாயில் இரத்தம் கொப்பளித்தபடியே தரையில் சுருண்டு விழுந்தான். இவ்வளவு சம்பவங்களும் ஒரு நிமிஷத்திற்குள் நடந்துவிட்டன.

இரத்தம் கக்கிக்கொண்டு பிரக்ஞை தவறிக் கீழே விழுந்த பிரகாசத்தை ஆஸ்பத்திரிக்கு எடுத்துச்

சென்றனர். ஆஸ்பத்திரியை அடைந்த அரைமணி நேரத்திற்குப் பின் பிரகாசத்தின் ஆவி உடலைவிட்டு அகன்றது. ஆனால் பிரகாசம் விஷம் அருந்தவில்லை என்பது கண்டுபிடிக்கப்பட்டது. பிரகாசத்தின் ஜோபியிலிருந்து விஷமருந்து கண்டெடுக்கப்பட்டது. பகவன் தாஸ் அந்த விஷப்புட்டியைக் கண்டதும் அதிலிருந்த மருந்தின் அளவு சிறிதும் குறையாமலிருப்பதை அறிந்த பிறகுதான், பிரகாசம் தன்னை விஷம் பருகும்படிச் செய்து தானமட்டும் அவ்விஷத்தைப் பருகாமல் தன்னையும் ஏய்த்துவிட்டதை உணர்ந்து, "அடாடா, நாம் இத் தகைய வஞ்சகனையா ஆப்த நண்பனென நம்பி யிருந்தோம்!" என்று ஏங்கினான்.

## 35. பழம் நழுவிப் பாலில்.

ஸ்ரீவத்ஸா அருணாவைக் கண்டு முகத்தில் புன்னகையுடன், "அன்று உங்களிடம் உங்கள் தமக்கையைக் கண்டு பிடித்துத் தருகிறேன் என்று கூறினேன். அப்படியே கண்டு பிடித்துத் தமக்கையுடன் தங்கையைச் சேர்த்து விட்டேன். என் வேலை முடிந்து விட்டபடியால் நான் நாளைய தினம் ஊருக்குப் புறப்படலாமென்று உத்தேசம். என்? புறப்படலாமல்லவா?" என்றார்.

அருணா நிமிர்ந்து தன் விழிகளை அகல விரித்து ஸ்ரீவத்ஸாவை நோக்கினாள். சிறிது நேரம் நிசப்தம். பிறகு அவள், "இவ்வளவு உபகாரங்களைச் செய்த உங்களுக்கு நான் உடனே எனது நன்றியறிதலைக்கூடத் தெரிவிக்க முடியாதபடி அவ்வளவு சந்தோஷத்தில் பிரமிக்கும்படி செய்துவிட்டீர்கள். தாங்கள் செய்த பேருதவிகளுக் கெல்லாம் நாங்கள் எப்படி நன்றி செலுத்தப்போகிறோ மென்றே தெரியவில்லை..................தாங்கள் நாளையே ஊருக்குச் செல்லத் தீர்மானித்துவிட்டீர்களா?" என்றாள்.

ஸ்ரீவத்ஸா:—இல்லை......ஆனால் நாளையே புறப்படலா மென்று டெபுடியின் உத்தேசம். மேலும் நான் இங்கே தாமதிப்பதில் என்ன பிரயோஜனம்?

அருணா:—ஏன் அப்படிக் கூறுகிறீர்கள்? பரம உபகாரியான நீங்கள் இவ்விடம் தங்கி யிருப்பது எங்கள் அனைவருக்குமே சந்தோஷம், பரம சந்தோஷம்!

ஸ்ரீவத்ஸா:—இருக்கலாம். ஆனால் அவ்வளவு சந்தோஷப்பட்டக்கூடிய நீங்கள் என்னிடம் 'நன்றி செலுத்தக்கூடத் தெரியவில்லை!' என்று சொன்னீர்களே?

அருணா :—ஆம்........எங்கள் நன்றியை எவ்வழியில் செலுத்துவது என்பதே தெரியவில்லைதான்!............

ஸ்ரீவத்ஸா :—வழி ஒன்று இருக்கிறது என்பதே என் எண்ணம்...,.........

அருணா :—(சட்டென) எங்களிடம் உள்ளது எதையும்... ......ஆக்ஷேபமே கிடையாது.

ஸ்ரீவத்ஸா :—(தழுதழுத்த குரலில்) ஆம், உங்களிடம் உள்ளதே; இல்லாததைப் பற்றிக் கேள்வியே இல்லை...... இவ்விடமிருந்து பரிசு யார்தாயினும் பெறுவதாயிருப்பின் ...அருணா!...நீதான் அந்தப் பரிசை அளிக்க முடியும்!...

மேற்படி வார்த்தைக ளெல்லாம் அவர் தம்மை யறியாமல் எப்படியோ கூறிவிட்டபோதிலும், அதற் காகச் சிறிது ஆச்சரியமும் லஜ்ஜையும்கூட அடைந்தார்.

அருணாவுக்கு ஏற்கெனவே எக்காரணத்தாலோ சந்திரபுரி வந்தபின் ஸ்ரீவத்ஸாவைக் காண ஒருவித வெட்கம் தோன்றியபடியால், அவரை நேரில் பாராமல் மறைந்துகொண் டிருந்தாள். எந்தக் காரணத்தினால் லஜ்ஜைப்பட்டாளோ, அதே விஷயம் ஸ்ரீவத்ஸாவின் பேச்சினால் அவளது மனத்தில் பளிச்சென மின்னல் போல் புலனாகிவிட்டது. ஆகவே அவளது முகம் நாணத்தால் குபீரெனச் சிவந்தது. ஹிருதயம் பட்பட் வென அடித்துக்கொண்டது, அந்நிலையில் ஸ்ரீவத்ஸா வுக்கு என்ன பதிலைக் கூறுவது என்றே தோன்றவில்லை. ஒரு புதிய உணர்ச்சியினால் நிற்கவும் முடியாமல் தத்தளித்தாள்.

ஸ்ரீவத்ஸா அவளது நிலையைக் கண்டு, "ஒருவேளை நமது சொல் இவள் மனத்திற்குத் துயரை உண்டாக்கி விட்டதோ?" என ஒருக்ஷணம் நினைத்துவிட்டார். அவர் அப்படி நினைத்ததில் ஆச்சரியமில்லைதான். துப்பறி வதில் நிபுணராக இருந்தாலும் காதல் - துறையில் நிபுணரல்லவே!

அப்போது அவ்விடம் வந்த அமிர்தா க்ஷணத்தில் விஷயத்தை ஊகித்துக் கொண்டாள். அருணாவின் மனத்தை ஸ்ரீவத்ஸா கொள்ளை யடித்துவிட்டார்!—என் பதை உணர்ந்துகொண்டாள். அப்படியே திரும்பிவிட எண்ணினாள். ஆனால் அருணா, அமிர்தா வந்ததை அறிந்ததும், "அக்கா" என்று கூப்பிட்டாள்.

அமிர்தா சற்றுத் தயங்கி "என்னம்மா?" என்று கேட்டாள்.

உடனே அருணா ஸ்ரீவத்ஸாவை ஒருக்ஷணம் நோக்கி விட்டுப் பரபரவென்று சென்று அமிர்தாவின் கழுத்தைச் சுற்றித் தன் வலது கரத்தைப் போட்டுக்கொண்டு, அவள் தோளில் சாய்ந்துகொண்டாள்.

அச்சமயம் அமிர்தா அருணாவின் காதோடு, "என் தங்கமே! ஏன் இந்தப் படபடப்பு? ஸ்ரீவத்ஸா அப்படி ஒன்றும் உன்னைப் பயமுறுத்தி யிருக்கமாட்டாரே!" என்றாள்.

அருணா:—இல்லை அக்கா, அவர் ஒன்றும் பயப் படுத்தவில்லை. ஆனால் எனக்கென்னவோ அவரைத் திடீரென்று சந்திக்கவும் மனம் படபடவென்று அடித்ததுக் கொண்டது. நல்லவேளை! நீ வந்தாய், இல்லாவிட்டால் நான் கீழேகூட விழுந்திருப்பேன்!

அமிர்தா:—நீ கீழே விழுந்தால் அவர் வேடிக்கை பார்க்கிறவரா? உன்னைக் கட்டாயம் தாங்கிக் கொண் டிருப்பார்!

அருணா:—போ, அக்கா! உனக்கு வேடிக்கையாக இருக்கிறது, எனக்கோ......

மறுதினம் ஸ்ரீவத்ஸா ஊருக்குப் புறப்படவில்லை. அதற்கும் மறுநாள்தான் டெபுடியுடன் புறப்பட்டுச் சென்றார். அப்படிப் புறப்படுமுன் சுப்ரதாஸ் டெபுடியிடம், 'சந்திரபுரி ஜமீன்தார் அமிர்தாவை விவாகம் செய்துகொள்ளச் சம்மதித்து முகூர்த்தம் வைத்து, அதே முகூர்த்தத்தில் அருணாவை ஸ்ரீவத்ஸா விவாகம் செய்துகொள்ளவும் முகூர்த்தம் ஏற்படுத்தினால், ஸ்ரீவத்ஸாவுக்கும் டெபுடிக்கும் சௌகரியப்படுமா?' என்பதைப் பற்றி விசாரித்துக் கொண்டிருந்தார்.

## 36. மங்களம்

தான் ஜமீனுக்கு வார்சுதாரன் என்று அறிந்த அந்த க்ஷணமே, "அடாடா அவளல்லவோ இவ்விஷயத்தை முதல் முதல் அறிந்து சந்தோஷப்படவேண்டியவள்?" என்பதாக, சரத்சந்திர னுள்ளம் தன் தாயைப் பற்றி நினைத்தது. பிறகு லீலாராமிடம் ஜாடையாக அறி விக்கவும், அவர் அன்றுமாலை ஆறு மணிக்கே சரத் சந்திரனின் தாயை அழைத்துவரக் காரில் புறப்பட்டார்.

தாய் தனயனை வந்து கண்டதும் அவளடைந்த சந்தோஷத்தை நம்மால் விவரிக்க முடியுமா? அது வரையில் நடந்த விஷயங்களைக் கேட்டு — தன்

புத்திரன் பொருட்டு அமிர்தா பட்ட கஷ்டங்களையும், பகவன்தாஸும் பிரகாசமும் நடத்திய நாடகத்தையும் அறிந்து, நடுங்கியதைத்தான் சொல்லி முடியுமா? அவள் அமிர்தாவைப் பார்த்துப் போனாள். அமிர்தாவைப்போலவே 'குல தெய்வ'மென்று ஸ்ரீவத்ஸாவைப் புகழ்ந்து, தனது நன்றியையும் முற்றும் வெளியிட வார்த்தையே கிடையாதென்று எண்ணினாள்.

மேற்கண்ட சம்பவங்கள் நிகழ்ந்து மாதம் நான்காயின. சந்திரபுரி ஜமீன் மாளிகை தேவலோகம் போல் அலங்கரிக்கப்பட்டிருந்தது. அச்சிங்கார மாளிகையில் ஒரு நல்ல முகூர்த்தத்தில் ஜமீன்தார் சரத்சந்திர தாஸுக்கும் பிரபு சுப்ரதாஸின் பேத்தி அமிர்தாவுக்கும், துப்பறியும் நிபுணர் ஸ்ரீவத்ஸாவுக்கும் பிரபு சுப்ரதாஸின் பேத்தி அருணாவுக்கும், விசேஷ வைபவத்துடன் விவாகம் நடந்தேறியது. அந்த விவாக வைபவத்தைப் பத்துத் தினங்கள் வரையில் சந்திரபுரி வாஸிகள் எல்லாரும் கொண்டாடி ஆனந்தித்தனர். மோகன் மாளிகையி லிருந்தவர்களும் வந்திருந்து கண்டு களித்தனர். சுமதி அம்மாள் தம்பதிகளை ஆசிர்வதித்து மகிழ்ந்தாள்.

* * *

அமிர்தா சந்திரபுரி ஜமீன்தாரிணியாகி, சரத்சந்திரனுடன் சந்திரபுரியிலே பாட்டன் பாட்டிகள் மகிழ வாழ்ந்து வந்தாள். சாந்தி அமிர்தாவுடன் தங்கித் தன் காலத்தைச் சந்தோஷமாய்க் கழித்து வந்தாள். ஸ்ரீவத்ஸாவும் சரத்சந்திரனும் ஆத்ம நண்பர்களாக இருந்து வந்தனர். கரீமும் இராகுலனும் ஸ்ரீவத்ஸாவிடம் உண்மையான கையாளாக இருந்து வந்தனர்.

இராகுலன் ஸ்ரீவத்ஸாவிடம் பரமபக்தனாக வந்தமர்ந்தபின், பனங்காட்டுக் கொள்ளை கொலை முதலான பயங்கள்கூட ஜனங்களிடையே மறைந்துவிட்டதாகக் கேள்வி.

இராகுலன் தன் தோழன் கரீமிடம், "லோகத்தில் எவ்வளவுதான் கெட்டிக்காரனாக இருந்தால் என்ன? நியாயவழி யில்லாமல் அக்கிரமவழியிலே போனால், கட்டாயம் தோல்விதான், அழிவுதான்! என் ஆயுசிலே கண்டுட்டேன் தம்பி! ஏதோ எசமான் புண்ணியத்தால் இப்போது நல்லவனாக இருக்க, எனக்கும் ஆண்டவன் அருள் செய்தான்!" என்று அடிக்கடி சொல்லுவதுண்டு.

Indian Express Branch Press, Madras.

## ஹாஸ்ய நாடகங்கள் — கட்டுரைகள்

வி. ஸி. கோபாலரத்னம், பி. ஏ., பி. ல்.

எஸ். ஒய். கிருஷ்ணஸ்வாமி, ஐ. ஸி. எஸ்.
முன்னுரையுடன்

பெடெரல் ஜட்ஜ் ஸர். எஸ். வரதாசாரியார் எழுதுவது :—

இந்த ஹாஸ்யக் கதைகளைப் பெரிதும் அனுபவித்தேன். விலாத்தெறிக்கச் சிரிப்பதற்கு என் மனப்பான்மை இடங் கொடுப்பதில்லை; ஒருவேளை வயதும் காரணமாய் இருக்கலாம். இதனால் இக்கதைகளைப் பற்றிய என் ஹிருதய பூர்வமான மதிப்பு கொஞ்சமும் குறைந்துவிடவில்லை.

கி. சந்திரசேகரன், எம்.ஏ., பி.எல். (ஆச்ரமம்) எழுதுவது :—

உடனே வாசிக்கத் தொடங்கி..............முடித்தாய் விட்டது.........அதற்குள் என் சந்தோஷத்தையும் பாராட்டையும் தெரிவித்துக்கொள்ள உத்ஸாகம் உண்டாகிவிட்டது..........ஆசிரியரிடம் அடங்காத தோர் அபிமானமுண்டாகிறது. வாழ்க்கையில் நகைச் சுவை எவ்வளவு அவசியம்!.........“ஐயோ கடவுளே!” என்பதை வாசித்து அதில் அடங்கிய நுண்ணிய கருத்துக்களையும் உலக அனுபவங்களையும் புரிந்து கொள்ளாதவன் படித்தவன் என்று சொல்லிக்கொள்வது வீண் ஜம்பமாகும். எஸ். ஒய். கே. (எஸ். ஒய். கிருஷ்ணஸ்வாமி ஐ. ஸி. எஸ்)யின் முன்னுரை வாய்ப்பாய் அமைந்தது பற்றியும் எனக்குச் சந்தோஷம்தான். நிச்சயம் ‘தினமணி’ வெளியீட்டில் இந்த ஒரு புஸ்தகம் மட்டும் ஐயாயிரம் என்ன, பதினாயிரம் விற்பனையாகும், சந்தேகமில்லை.

அழகிய கட்டுக்கோப்பு. தெளிவான அச்சு.

விலை நிர்ணயங்கள் ‘கவர்’ப் பின் பக்கம் பார்க்க.

# வீர ரஷ்யா

(இரண்டு பாகங்கள்)

வி. எஸ். நாராயணன்

எழுதியது

டாக்டர் பி. சுப்பராயன்

தமது முன்னுரையில் :

"இந்த இரண்டு பாகங்களிலும் ரஷ்ய சரித்திரத்தைத் தமிழ் மக்கள் எளிதாக அறிந்துகொள்ளும் உபகாரத்தை ஆசிரியர் திறமையுடன் செய்துள்ளார். ரஷ்யாவின் சரித்திரத்தை நாம் அறிந்துகொள்வது மிகவும் முக்கியம். இதற்கு இப்புத்தகம் தமிழ் மக்களுக்கு இன்றியமையாத கருவி. ஆசிரியரின் உழைப்பை மிகவும் பாராட்டுகிறேன்."

பாகம் I விலை அணா 12

பாகம் II விலை அணா 8

தபால் செலவு தனி

---

"தினமணி" ஏஜெண்டுகளிடமும்,
புஸ்தக வியாபாரிகளிடமும்
கிடைக்கும்

## நாடகங்கள் முதலியன

**17.** கதா நாடக மஞ்சரி

ப்ரோபெஸர் எஸ். கே. யக்ஞநாராயணையர் எம். ஏ.

இரண்டு கதைகளும் ஒரு நாடகமும்

**6.** ஹாஸ்ய நாடகங்கள், கட்டுரைகள்

வி. ஸி. கோபாலரத்தினம் பி. ஏ., பி. எல்.

எஸ். ஒய். கிருஷ்ணஸ்வாமி ஐ. ஸி. எஸ்.
முன்னுரையுடன்

இந்த நாடகங்கள் படிக்கவும் நடிக்கவும்
ஒருங்கே தகுதி வாய்ந்தன

### அச்சில்

புரட்சி முரசு : ஒரு சமூக நாடகம் "ஆண்டி" என்ற புனை பெயரில் மறைந்திருக்கும் நாடக ஆசிரியர் எழுதியது.

### நாவல்

7. தில்லைக் கோவிந்தன்

அ. மாதவையா ஆங்கிலத்தில் எழுதிய நாவலின்
மொழிபெயர்ப்பு.

மொழிபெயர்த்தவர் வே. நாராயணன் எம்.ஏ., எம்.எல்.

விரைவில் வெளிவரும் :

தினமணி வெளியீடு 24

சிறை

# தினமணி வெளியீடு

பதிப்பாசிரியர்: பி. ஸ்ரீ.

| | | | ரூ. | அ. |
|---|---|---|---|---|
| 1. | மகாத்மா காந்தி — திருவுருவ மாலை [2-ம் பதிப்பு] | | 0 | 12 |
| 2. | ரவீந்திரநாத டாகுர் | .... | 0 | 8 |
| 3. | கைலாஸம்—மானஸஸரோவர் (பிரதிகள் கைவசமில்லை.) | .... | 0 | 8 |
| 4. | போலந்து—பின்லந்து | .... | 0 | 12 |
| 5. | சிறு கதை மஞ்சரி | .... | 1 | 0 |
| 6. | ஹாஸ்ய நாடகங்கள், கட்டுரைகள் | .... | 2 | 0 |
| 7. | இல்லைக் கோவிந்தன் | .... | 1 | 0 |
| 8. | ஆர்மீனா கஸ்தூரியா | .... | 0 | 12 |
| 9. | முஸோலினி | .... | 0 | 12 |
| 10. | தளவாய்த் தாத்தா (அரியநாயக முதலியார்) | | 0 | 12 |
| 11. | மௌலானா ஆஸாத் | .... | 1 | 0 |
| 12. | கதை வனம் | .... | 1 | 0 |
| 13. | நவரஸங்கள் | .... | 0 | 12 |
| 14. | வீர ரஷ்யா (பாகம் I) | .... | 0 | 12 |
| 15. | காந்தீயத் திட்டம் | .... | 1 | 8 |
| 16. | தற்காலப் போர்க் கருவிகள் | .... | 1 | 0 |
| 17. | கதா நாடக மஞ்சரி | .... | 0 | 8 |
| 18. | வீர ரஷ்யா (பாகம் II) | .... | 0 | 8 |
| 19. | கபீர்தாஸர் | ... | 0 | 8 |
| 20. | ஐசுவரிய அமெரிக்கா | .... | 0 | 8 |
| 21. | தஞ்சை நாயக்கர் | .... | 0 | 8 |
| 22. | ஜீவ கலை | .... | 0 | 8 |

(ஒவ்வொன்றுக்கும் தபால்-செலவு பிரத்தியேகம்)

உத்தம வாழ்க்கை .... அச்சில்